# கீதா மகரந்தம்

அத்தியாயங்கள்
(1-18)



திருமலை திருப்பதி தேவஸ்தானம்
திருப்பதி.

# கீதா மகரந்தம்

மூலம்
(சுவாமி வித்யா பிரகாஸானந்தா)

**அத்தியாயங்கள்**
**(1 - 18)**

கருத்துரை, தமிழாக்கம்
பேராசிரியர். கே. சர்வோத்தம ராவ்

# பொருளடக்கம்


1. அர்ஜுன விஷாதயோகம் 1

2. சாங்கிய யோகம் 21

3. கர்ம யோகம் 60

4. ஞான யோகம் 83

5. கர்ம ஸந்யாஸ யோகம் 104

6. ஆத்ம ஸம்யம யோகம் 120

7. விஞ்ஞான யோகம் 143

8. அக்ஷர பரபிரம்ம யோகம் 158

9. ராஜ வித்யா ராஜ குஹ்ய யோகம் 173

10. விபூதி யோகம் 191

11. விஸ்வரூப சந்தர்சன யோகம் 211

12. பக்தி யோகம் 243

13. க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ விபாக யோகம் 253

14. குணத்ரய விபாக யோகம் 270

15. புருஷோத்தம பிராப்தி யோகம் 284

16. தெய்வாசுர ஸம்பத் விபாக யோகம் 295

17. சிரத்தாத்ரய விபாக யோகம் 308

18. மோக்ஷ ஸந்யாஸ யோகம் 322

## முதலாம் அத்தியாயம்
# அர்ஜுன விஷாதயோகம்

**ஸ்லோகம்:**

***தர்மக்ஷேத்ரே குருக்ஷேத்ரே ஸமவேதா யுயுத்ஸவஹ |***
***மாமகாஹ் பாண்டவாஸ் சைவ கிமகுர்வத ஸஞ்சய || 1***

*கருத்துரை:*

*திருதராஷ்டிரன் இவ்வாறு கூறினார். ஓ ஸஞ்சயா! என்னவர்களாகிய துரியோதனன் முதலானோரும், பாண்டு புத்திரர்களாகிய தர்மன் முதலானோரும் யுத்தம் செய்ய விரும்பி திரண்டு புண்ய பூமியான குருக்ஷேத்திரத்தில் என்ன தான் செய்தார்கள்?*

**ஸ்:** ***த்ருஷ்ட்வாது பாண்டவனீகம் வ்யூடம் துர்யோதனஸ்ததா |***
***ஆசார்யமுபஸங்கம்ய ராஜா வசனமப்ரவீத் || 2***

கருத்துரை:
திருதராஷ்டிரனிடம் ஸஞ்சயன் இவ்வாறு கூறினான். அப்போது அரசனான துரியோதனன் அணிவகுத்து நின்ற பாண்டவ சேனையைப் பார்த்து துரோணாச்சாரியாரை நெருங்கி இவ்வாறு சொன்னான்.

**ஸ்: பச்யைதாம் பாண்டுபுத்ராணமாசார்ய மஹதீம் சமூம் |**
**வ்யூடாம் த்ருபதபுத்ரேண தவசிஷ்யேண தீமதா || 3**

கருத்துரை:
தலைசிறந்த குருவே! புத்திசாலியும் உன் மாணாக்கனுமாகிய திருஷ்டத்யும்னனால் அணிவகுக்கப்பட்ட பாண்டவர்களின் மாபெரும் படையை வந்து பாருங்கள்.

**ஸ்: அத்ர சூரா மஹேஷ்வாஸா பீமார்ஜுன ஸமாயுதி |**
**யுயுதானோ விராடஸ்ச த்ருபதஸ்ச மஹாரதஹ || 4**

கருத்துரை:

எதிரியான பாண்டவப்படையில் சிறந்த வீரர்களாகவும் தேர்ந்த வில்லாளியாகவும் போரில் பீமனுக்கும், அர்ச்சுனனுக்கும் நிகரான வீரமுடைய யுயுதானனும், விராடநாட்டு அரசனும், துருபதநாட்டு மன்னராக மகாரதனும் பங்கேற்று உள்ளார்கள்.

**ஸ்: த்ருஷ்ட கேதுஸ்சேகிதானஹ காசிராஜஸ்ச வீர்யவான் |**
**புருஜித் குந்திபோஜஸ்ச சைப்யஸ்ச நரபுங்கவஹ || 5**

கருத்துரை:

திருஷ்டகேதுவும், சேகிதானனும், வீரத்தில் சிறந்த காசி மன்னனும், புருஜித் என்பானும், குந்திபோஜனும், மனிதருள் மேன்மைமிக்க சைபியன் என்பவனும் (இப்படையில் அணிவகுத்துள்ளனர்)

**ஸ்: யுதாமன்யுஸ்ச விக்ராந்த உத்தமௌஜாஸ்ச வீர்யவான் |**
**ஸௌபத்ரோ த்ரௌபதேயாஸ்ச ஸர்வ ஏவ மஹாரதாஹ || 6**

கருத்துரை:
பேராற்றல் பெற்ற யுதாமன்யுவும், வலிமை பொருந்திய உத்தமௌஜஸ் என்பவனும், சுபத்ரையின் மகனும், திரௌபதியின் பிள்ளைகளும் இப்படையில் ஒன்று சேர்ந்திருக்கின்றனர். அணியில் பங்கேற்றுள்ள அனைவரும் மகாரதர்களாவர்.

**ஸ்: அஸ்மாகம் து விசிஷ்டா யே தாந்நிபோத த்விஜோத்தம ।**
**நாயகா மம ஸைன்யஸ்ய ஸம்ஞார்த்தம் தான் ப்ரவீமி தே ॥ 7**

கருத்துரை:
ஓ பிராம்மணோத்தம! நம் படையில் சிறந்தவர்கள் தானைத் தலைவர்கள் யார் இருக்கிறார்களோ அவர்களை உமக்கு நினைவுபடுத்துவதற்காகச் சொல்கிறேன் கேளுங்கள்!

**ஸ்: பவான் பீஷ்மஸ்ச கர்ணஸ்ச க்ருபஸ்ச ஸமிதிஞ்சயஹ ।**
**அச்வத்தாமா விகர்ணஸ்ச ஸௌமதத்திர் ஜயத்ரதஹ ॥ 8**

**ஸ்: அன்யேச பஹவஹ்சூரா மதர்த்தே த்யக்தஜீவிதாஹ ।**
**நானாசஸ்த்ரப்ரஹரணாஹ ஸர்வே யுத்தவிசாரதாஹ ॥ 9**

கருத்துரை:
தாங்கள், பீஷ்மர், கர்ணன், போரில் எப்போதும் வெற்றி வாகை சூடும் கிருபாசாரியார், அசுவத்தாமன், விகர்ணன், பூரிசிரவஸ், இன்னும் எனக்காகத் தம் உயிரையே விடத்துணிந்துள்ள பல சூரர்களும், அனைவரும் யுத்தத்தில் மிகத் தேர்ந்தவர்களாய் பலவிதமான ஆயுதங்கள் தாங்கி இங்குள்ளனர்.

**ஸ்: அபர்யாப்தம் ததஸ்மாகம் பலம் பீஷ்மாபிரக்ஷிதம் |**
**பர்யாப்தம் த்விதமேதேஷாம் பலம் பீமாபிரக்ஷிதம் || 10**

கருத்துரை:
(நமது சேனைத்தலைவரான) பீஷ்மரின் கீழ் இருக்கும் நமது படை பரந்து அளவு கடந்து உள்ளது. பீமன் தலைமையில் இருக்கும் அவர்களின் (எதிரிகளின்) படையோ கட்டுக் கடங்கி உள்ளது.

**ஸ்: அயனேஷு ச ஸர்வேஷு யதாபாகமவஸ்திதாஹ |**
**பீஷ்மமேவாபிரக்ஷந்து பவந்தஹ் ஸர்வ ஏவ ஹி || 11**

கருத்துரை:
நீங்களனைவரும் வியூகத்தின் நுழைவுப் பகுதிகளில் அவரவர்க்குரிய நிலைகளில் இருந்து, பீஷ்மரை எல்லா வகையிலும் பாதுகாக்க வேண்டும்.

**ஸ்: தஸ்ய ஸஞ்ஜனயன் ஹர்ஷம் குருவ்ருத்தஹ் பிதாமஹஹ |**
**ஸிம்ஹநாதம் விநத்யோச்சைஹி சங்கம் தத்மௌ**
**ப்ரதாபவான் || 12**

கருத்துரை:
பராக்கிரமசாலியும், குருவம்சத்தில் வயோதிகருமான பாட்டனார் ஆன பீஷ்மர் துரியோதனனுக்கு உற்சாகமூட்டும் வகையில் பெரிதாக சிம்மநாதம் போன்று சங்கை ஊதினார்.

**ஸ்: ததஹ சங்காஸ்ச பேர்யஸ்ச பணவானககோமுகாஹ |**
**ஸஹஸைவாப்யஹன்யந்த ஸ சப்தஸ்துமுலோ அபவத் || 13**

கருத்துரை.
பீஷ்மர் சங்கொலி செய்தபின், கௌரவ சேனையில் மற்றையவரும்,

சங்கம், பேரிகை, பறை, கொம்பு இவற்றை உடனேயே முழக்கினர். அவ்வொலி திசையெங்கும் பரவிற்று.

**ஸ்: ததச்வேதைதர்ஹயைர்யுக்தே மஹதி ஸ்யந்தனே ஸ்திதௌ |**
**மாதவஹ பாண்டவஸ்சைவ திவ்யௌ சங்கௌ**
**ப்ரதத்மதுஹ॥ 14**

கருத்துரை:
அதன்பின் வெள்ளைக் குதிரைகளைப் பூட்டிய சிறந்த தேரில் வீற்றிருந்த கிருஷ்ணனும், அர்ஜுனனும் தத்தம் தெய்வீகச் சங்குகளை உரக்க ஊதினார்கள்.

**ஸ்: பாஞ்சஜன்யம் ஹ்ருஷீகேசோ தேவதத்தம் தனஞ்சயஹ |**
**பௌண்ட்ரம் தத்மௌ மஹாசங்கம் பீமகர்மா**
**வ்ருகோதரஹ ॥ 15**

**ஸ்: அனந்தவிஜயம் ராஜா குந்தீபுத்ரோ யுதிஷ்டிரஹ |**
**நகுலஹ் ஸஹதேவஸ்ச ஸுகோஷமணிபுஷ்பகௌ ॥ 16**

ஸ்: காச்யஸ்ச பரமேஷ்வாஸஹ சிகண்டி ச மஹாரதஹ |
த்ருஷ்டித்யும்னோ விராடஸ்ச ஸாத்யகிஸ்சாபராஜிதஹ || 17

ஸ்: த்ருபதோ த்ரௌபதேயாஸ்ச ஸர்வசஹ ப்ருதிவீபதே |
ஸௌபத்ரஸ்ச மஹாபாஹுஹ சங்கான்தத்முஹு ப்ருதக்
ப்ருதக் || 18

கருத்துரை:

கிருஷ்ணர் பாஞ்சஜன்யத்தை ஊதினார் அர்ஜுனன் தேவதத்தத்தை ஊதினார் பயங்கரமான காரியங்களை செய்யக் கூடிய பீமன் பௌண்ட்ரம் எனப்படும் மிகப் பெரிய சங்கை ஊதினார். தர்மராஜன் அனந்த விஜயத்தை நகுலன் சுகோஷத்தை. சகாதேவன் மணிபுஷ்பத்தை ஊதினார்கள். அவ்வாறே சிறந்த வில்லையுடையவனான காசிராஜன், மஹாரதன் ஆன சிகண்டி, திருஷ்டத்யும்னன், விராட தேசத்தரசன், தோல்வியையே அடையாத சாத்யகி, துருபதன், திரௌபதி புத்திரர்களாகிய உபபாண்டவர்கள். பெருந்தோளுடைய அபிமன்யு சேனையில் அனைவரும் வெவ்வேறாகத் தத்தம் சங்குகளை ஒலித்தனர்

ஸ்: ஸகோஷோ தார்தராஷ்ட்ராணாம் ஹ்ருதயானி வ்யதாரயத் |
நபஸ்ச ப்ருதிவீம் சைவ துமுலோ வ்யனுநாதயன் || 19

கருத்துரை:
பாண்டவ வீரர்களின் சங்கங்களின் பெரு முழக்கம் பூமியையும் ஆகாசத்தையும் நடுங்கச் செய்து துரியோதனாதிகளின் இதயத்தைப் பிளந்தது.

ஸ்: அத வ்யவஸ்திதான் த்ருஷ்ட்வா தார்தாஷ்ட்ரான் கபித்வஜஹ |
ப்ரவ்ருத்தே சஸ்த்ரஸம்பாதே தனுருத்யம்ய பாண்டவஹ ||
ஹ்ருஷீகேசம் ததா வாக்ய மிதமாஹ மஹீபதே | 20

கருத்துரை:
திருதராஷ்டிர மகாராஜாவே! அதன்பிறகு போர்களத்தில் ஆயுதங்களை பிரயோகிக்க ஆரம்பிக்க இருக்கையில், குரங்குக் கொடியுடையோனாகிய அர்ஜுனன், போர்துவக்கத் தலைப்பட்டிருந்த கௌரவர்களைப் பார்த்து, வில்லைக் கையிலேந்தி ஸ்ரீ கிருஷ்ணரிடம் இவ்வாறு கூறினார்.

**ஸ்: ஸேனயோருபயோர் மத்யே ரதம் ஸ்தாபய மேஅச்யுத ॥ 21**

**ஸ்: யாவதேதாந்நிரீக்ஷே அஹம் யோத்துகாமான வஸ்திதான் ।**
**கைர்மயா ஸ்ஹயோத்தவ்ய மஸ்மின் ரண ஸமுத்யமே ॥ 22**

*கருத்துரை:*
*அச்யுதனே! இந்த யுத்த ஆரம்பத்தில் நான் எவருடன் போர் புரிய வேண்டுமோ, போரை விரும்பி எவர் முன்னிற்கிறார் என்பதையும், நான் எங்கிருந்தால் நான் சரியாகப்பார்க்க முடியுமோ அங்ஙனம் இருபடைகளுக்கு இடையில் என் தேரை நிறுத்துக'*

**ஸ்: யோத்ஸ்யமானானவேக்ஷே அஹம் ய ஏதே ஸமாகதாஹ ।**
**தார்தராஷ்ட்ரஸ்ய துர்புத்தேர்யுத்தே ப்ரயசிகீர்ஷவஹ ॥ 23**

*கருத்துரை:*
*துஷ்ட புத்தியுடைய துரியோதனனுக்கு தன் பிரியத்தைக் காட்டும் வகையில் இங்கு யுத்தம் செய்யக் கூடியிருப்பவர்களை நான் காண வேண்டும்.*

**ஸ்: ஏவமுக்தோ ஹ்ருஷீகேசோ குடாகேசேன பாரத |**
**ஸேனயோருபயோர் மத்யே ஸ்தாபயித்வா ரதோத்தமம் || 24**

**ஸ்: பீஷ்மத்ரோணப்ரமுகதஹ ஸர்வேஷாம்ச மஹீக்ஷிதாம் |**
**உவாச பார்த்த பச்யைதான் ஸமவேதான் குரூனிதி || 25**

கருத்துரை:
சஞ்சயன் இவ்வாறு கூறினார் - திருதராஷ்டிர மஹாராஜா! அர்ஜுனன் இவ்வாறு சொன்னவுடன் ஸ்ரீ கிருஷ்ணர் மிக உத்தமமான ரதத்தினை இரண்டு சேனைகளுக்கிடையில் பீஷ்மர் துரோணர்களுக்கும், ஏனைய அரசர்களுக்கும் எதிரில் நிறுத்தி, 'அர்ஜுனா! இங்கு கூடியுள்ள கௌரவர்களைப் பார்' என்று சொன்னார்.

**ஸ்: தத்ராபச்யத் ஸ்திதான் பார்த்தஹ பித்ரூனத பிதாமஹான் |**
**ஆசார்யான் மாதுலான் ப்ராத்ரூன் புத்ரான் பௌத்ரான்**
**ஸகீன்ஸ்ததா || 26**

**ஸ்: ச்வசுரான் ஸுஹ்ருதஸ்சைவ ஸேனயோருபயோரபி ॥ 27**

*கருத்துரை:*
*அர்ஜுனன் அங்கே இரண்டு சேனைகளிலும் நிற்கும் தந்தைமார், பாட்டன்மார், ஆசாரியார், மாமன்மார், சகோதரர்கள், புத்திரர்களையும் மாமனார்கள், நண்பர்கள், அன்பர்கள் அனைவரையும் பார்த்தான்.*

**ஸ்: தான் ஸமீக்ஷ்ய ஸ கௌந்தேயஹ ஸர்வான் பந்தூனவஸ்திதான் |**
**க்ருபயா பரயா ஆவிஷ்டோ விஷீதன்னிதமப்ரவீத் ॥ 28**

*கருத்துரை:*
*அர்ஜுனன் யுத்த பூமியில் நின்றுள்ள தன் உற்றார் உறவினர்களை நன்றாக உற்றுப் பார்த்து, பேரிரக்கம் கொண்டவனாய், துக்கம் மேலிட்டு இவ்வாறு கூறினான்.*

**ஸ்: த்ருஷ்ட்வேமம் ஸ்வஜனம் கிருஷ்ண யுயுத்ஸும் ஸமுபஸ்திதம் |**
**ஸீதந்தி மம காத்ராணி முகம் ச பரிசுஷ்யதி |**
**வேபதுஸ்ச சரீரே மே ரோமஹர்ஷஸ்ச ஜாயதே ॥ 29**

ஸ்: **காண்டீவம் ஸ்ரம்ஸதே ஹஸ்தாத் த்வக்சைவ பரிதஹ்யதே |**
**நச சக்னோம்யவஸ்தாதும் ப்ரமதீவ ச மே மனஹ || 30**

*கருத்துரை:*
*அர்ஜுனன் சொன்னான்: கிருஷ்ணா! யுத்தம் செய்வதற்கென இங்கு கூடியுள்ள இந்த சுற்றத்தாரைப் பார்த்து, என் அவயவங்கள் நடுங்குகின்றன; நா உலர்ந்து போகின்றது; சரீரம் நடுங்குகின்றது; மயிர் சிலிர்க்கின்றது; காண்டீவம் கை நழுவுகின்றது; சருமம் பற்றி எரிவது போல் இருக்கின்றது; நிற்பதற்கும் எனக்குச் சக்தியில்லை; மனது குழப்பமடைந்து கிர்ரென்று சுற்றுகிறது.*

ஸ்: **நிமித்தானி ச பச்யாமி விபரீதானி கேசவ |**
**நச ச்ரேயஹஅனுபச்யாமி ஹத்வா ஸ்வஜனமாஹவே || 31**

*கருத்துரை:*
*ஏ கிருஷ்ணா! நிறைய அபசகுனங்களைப் பார்க்கிறேன். யுத்தத்தில் சுற்றத்தாரை கொன்று பின் நான் அடையக்கூடிய லாபம் (நன்மை) எதுவும் என் கண்ணுக்குப் புலப்படவில்லை.*

**ஸ்: ந காங்க்ஷே விஜயம் கிருஷ்ண ந ச ராஜ்யம் ஸுகானிச ।**
**கிம் நோ ராஜ்யேன கோவிந்த கிம் போகைர் ஜீவிதேன வா ॥ 32**

கருத்துரை:
கிருஷ்ணா! நான் வெற்றியையோ, ராஜ்யத்தையோ, சுகங்களையோ விரும்பமாட்டேன். ராஜ்யத்தினாலோ, போகத்தினாலோ, வாழ்க்கையினாலோ நமக்கென்ன பலன்?

**ஸ்: யேஷாமர்த்தே காங்க்ஷிதம் நோ ராஜ்யம் போகாஹ் ஸுகானிச ।**
**தஇமே அவஸ்திதா யுத்தே ப்ராணான்ம் த்யக்த்வா தனானிச ॥ 33**

**ஸ்: ஆசார்யஹ் பிதரஹ் புத்ராஸ்ததைவ ச பிதாமஹாஹா ।**
**மாதுலாஹ் ச்வசுராஹ் பௌத்ரா ஸ்யாலா**
**ஸம்பந்தினஸ்ததா ॥ 34**

கருத்துரை:
எவர் பொருட்டு இந்த ராஜ்யம், போகங்கள், சுகங்களையும் நாம் விரும்புகின்றோமோ, அத்தகைய ஆசாரியர், தந்தையர், மக்கள்,

பாட்டன்மார், மாமன்மார், மாமனார்மார், பேரர், மைத்துனர், சம்பந்திகள் முதலானோர் பிராணங்களின் மீதும் செல்வத்தின் மீதுமுள்ள ஆசைகளைத் துறந்துவிட்டு, இப்போர்க்களத்தில் வந்து நிற்கிறார்கள்.

**ஸ்: ஏதாந்ந ஹந்துமிச்சாமி க்னதோ அபி மதுஸூதன ।**
**அபித்ரைலோக்ய ராஜ்யஸ்ய ஹேதோரஹோ கிம்நு**
**மஹீக்ருதே ॥ 35**

கருத்துரை:
ஏ கிருஷ்ணா! என்னைக் கொன்றாலும், மூன்று உலகங்களின் இராஜ்யாதிகாரம் அளித்தாலும் இவர்களைக் கொல்ல விரும்பமாட்டேன். இனி பூலோக ராஜ்யத்திற்காக வேறாகச் சொல்ல இனி என்ன இருக்கிறது.

**ஸ்: நிஹத்ய தார்தராஷ்ட்ராந்நஹ கா ப்ரீதிஹ ஸ்யாஜ்ஜநார்தன ।**
**பாபமேவாச்ரயேதஸ்மான் ஹத்வைதானாததாயினஹ ॥ 36**

கருத்துரை:
ஏ கிருஷ்ணா! துரியோதனாதியரைக் கொல்வதால் நமக்கு என்ன இன்பம் வரப் போகிறது? கெட்டவர்களாயினும் இவர்களைக் கொல்வதால் நமக்கு பாவமே வந்து சூழும்.

ஸ்: **தஸ்மான்நார்ஹா வயம் ஹந்தும் தார்தராஷ்ட்ரான்**
**ஸ்வபாந்தவான்।**
**ஸ்வஜனம் ஹி கதம் ஹத்வா ஸுகினஹ் ஸ்யாம மாதவ ॥ 37**

கருத்துரை:
ஆகவே நம் உறவினர்களாகிய திருதராஷ்ட்டிரனது பிள்ளைகளைக் கொல்வது நமக்குத் தகாது. மாதவா! உற்றார் உறவினர்களைக் கொன்று நாம் மகிழ்ச்சியுடன் விளங்குவது எவ்வாறு?

ஸ்: **யத்யப்யேதே ந பச்யந்தி லோபோபஹதசேதஸஹ ।**
**குலக்ஷயக்ருதம் தோஷம் மித்ரத்ரோஹே ச பாதகம் ॥ 38**

ஸ்: **கதம் ந ஜ்ஞேயமஸ்மாபிஹ் பாபாதஸ்மாந் நிவர்திதும் ।**
**குலக்ஷயக்ருதம் தோஷம் ப்ரபச்யத்பிர் ஜநார்தன ॥ 39**

கருத்துரை:
ஸ்ரீ கிருஷ்ணா! மிக்கப் பேராசையால் கெட்ட எண்ணம் கொண்ட துரியோதனாதியர் குலநாசத்தை உண்டாக்குவதால் ஏற்படும் தோஷத்தை, மித்ர துரோகத்தால் விளையக்கூடிய பாவத்தை அவர்கள் நினைக்காவிடினும், அவற்றைப் பற்றி நன்றாக தெரிந்த நாம் இந்த பாவத்தினின்றும் நாம் ஏன் விலகிக் கொள்ளக் கூடாது என்பது எனக்குப் புரியவில்லை.

**ஸ்:** **குலக்ஷயே ப்ரணச்யந்தி குலதர்மாஹ்ற ஸநாதநாஹ்றா |**
**தர்மே நஷ்டே குலம் க்ருத்ஸ்னமதர்மோ அபிபவத்யுத || 40**

**ஸ்:** **அதர்மாபிபவாத்க்ருஷ்ண ப்ரதுஷ்யந்தி குலஸ்த்ரியஹ |**
**ஸ்த்ரீஷு துஷ்டாஸு வார்ஷ்ணேய ஜாயதே**
**வர்ணஸங்கரஹ || 41**

**ஸ்:** **ஸங்கரோ நரகாயைவ குலக்நானாம் குலஸ்ய ச |**
**பதந்தி பிதரோ ஹ்யேஷாம் லுப்த பிண்டோதகக்ரியாஹா || 42**

கருத்துரை:

ஏ கிருஷ்ணா! குலம் நாசம் அடைவதால் என்றுமிருப்பவையான குலதர்மங்கள் அழிகின்றன. தர்மம் அழிவதால் குலம் முழுவதையும் அதர்மம் சூழ்கிறது. அதர்மம் மிகுதலால் குலப் பெண்கள் மிகவும் கெட்டுப்போகிறார்கள், ஸ்த்ரீகள் கெட்டுப்போவதால் வர்ணக் கலப்பு ஏற்படுகிறது. வர்ணக் கலப்பினால், கெட்ட குடும்பங்களின் குலம் சுவ நரகத்தையே அடைகின்றது. அவர்களது பித்ரு தேவதைகள் சிரார்த்தம், தர்ப்பணம் இன்றி அதோகதியை அடைகிறார்கள்.

ஸ்: **தோஷைரேதைஹி குலக்நானாம் வர்ணசங்கரகாரகைஹி |**
**உத்ஸாத்யந்தே ஜாதிதர்மாஹா குலதர்மாஸ்ச**
***சாச்வதாஹா* || 43**

ஸ்: **உத்ஸன்னகுலதர்மாணாம் மனுஷ்யாணாம் ஜனார்தன |**
**நரகே நியதம் வாஸோ பவதீத்யனுசுச்ரும ||** 44

*கருத்துரை:*
*ஜனார்த்தனா! குலநாசகர்களுடைய வர்ணக்கலப்பிற்குக் காரணமான இந்த தோஷங்களினால் ஜாதி தர்மம், குலதர்மம், நசிந்துப் போகிறது. குலதர்மம் அழிந்த மனிதர்களுக்கு சாசுவதமாக நரகத்தில் வசிக்க நேர்கிறது என்பதை நாம் கேட்டிருக்கிறோம்.*

**ஸ்:** ***அஹோ பத மஹத்பாபம் கர்தும் வ்யவஸிதா வயம் |***
***யத்ராஜ்யஸுகலோபேன ஹந்தும் ஸ்வஜனமுத்யதாஹா || 45***

*கருத்துரை:*
*அரசசுக ஆசையினால் நாம் பந்துக்களை கொல்வதற்குத் தலைப்பட்டு மஹாபாவத்தை செய்வதற்குத் துணிந்தோம்! ஐயகோ!*

**ஸ்:** ***யதி மாமப்ரதீகாமசஸ்த்ரம் சஸ்த்ரபாணயஹ |***
***தார்தராஷ்ட்ரா ரணே ஹன்யுஸ்தன்மே க்ஷேமதரம் பவேத் || 46***

*கருத்துரை:*

*ஆயுதங்கள் தரிக்காமலும், எதிர்க்காமலும் இருக்கிற என்னை, ஆயுதங்கள் ஏந்திய துரியோதனாதிகள் என்னைக் கொல்லுவார்களானால் அதுவே எனக்குப் பெருநன்மையாகும்.*

**ஸ்: ஏவமுக்தவா அர்ஜுனஹ் ஸங்க்யே ரதோபஸ்த உபாவிசத் |**
**விஸ்ருஜ்ய ஸசரம் சாபம் சோகஸம்விக்னமானஸஹ || 47**

*கருத்துரை:*

*சஞ்சயன் சொன்னான்: (ஓ திருதராஷ்டிர) மஹா ராஜா! யுத்த பூமியில் அர்ஜுனன் இவ்வாறு சொல்லி சோகத்தால் கலங்கின சித்தத்தை உடையவனாய், அம்புடன் கூடிய வில்லை எறிந்துவிட்டு தேர்ந்து உட்கார்ந்துவிட்டான்.*

*****

## இரண்டாம் அத்தியாயம்
## சாங்கிய யோகம்

**ஸ்: தம்ததா க்ருபயா ஆவிஷ்டமச்ருபூர்ணாகுலேக்ஷணம் ।**
**விஷீதந்தமிதம் வாக்யமுவாச மதுசூதனஹ ॥ 1**

*கருத்துரை:*
இவ்வாறாக இரக்கம் மேலிட்டு கண்களில் நீர்நிறைந்தவனாய், துக்கப்பட்டுக் கொண்டிருந்த அர்ஜுனனைப் பார்த்து ஸ்ரீ கிருஷ்ணர் இவ்வாறு சொன்னார்.

**ஸ்: குதஸ்த்வா கச்மலமிதம் விஷமே ஸமுபஸ்திதம் ।**
**அனார்யஜுஷ்டமஸ்வர்கயமகீர்த்திகரமர்ஜுன ॥ 2**

*கருத்துரை:*
ஸ்ரீ கிருஷ்ண பகவான் சொல்கிறார் - 'ஏ அர்ஜுனா!, பாமரர்களே பின்பற்றுவதும், சுவர்க்கத்திற்குத் தடையாவதும், இழிவை

ஏற்படுத்துவதுமான இந்தமோஹம் இந்த நெருக்கடியான சமயத்தில் உனக்கு எங்கிருந்து வந்தது?

**ஸ்: க்லைப்யம் மா ஸ்ம கமஹ பார்த்த நைதத் த்வய்யுபபத்யதே |**
**க்ஷுத்ரம் ஹ்ருதயதௌர்பல்யம் த்யக்த்வோத்திஷ்ட**
**பரந்தப || 3**

*கருத்துரை:*
*அர்ஜுனனே! அதைரியத்தை அடையாதே! இது உனக்குத் தகாது. இழிவான இம் மனத் தளர்ச்சியை விடுத்து யுத்தத்திற்கு எழுந்து புறப்படு.*

**ஸ்: கதம் பீஷ்மஹம் ஸங்க்யே த்ரோணம் ச மதுசூதன |**
**இஷுபிஹ் ப்ரதியோத்ஸ்யாமி பூஜார்ஹாவரிஸூதன || 4**

*கருத்துரை:*
*ஓ கிருஷ்ணா! பீஷ்ம த்ரோணர் இருவரும் பூஜிக்கத் தக்கவர்கள். அவர்கள் மேல் நான் எவ்வாறு பாணங்களை எய்தி யுத்தம் புரிவேன்?*

ஸ்: குரூனஹத்வா ஹி மஹாநுபாவான்
ச்ரேயோ போக்தும் பைசக்ஷ்யமபீஹ லோகே ।
ஹத்வாஅர்த்தகாமாம்ஸ்து குரூனிஹைவ
புஞ்ஜீய போகான் ருதிரப்ரதிக்தான் ॥ 5

கருத்துரை:

உயர்ந்த குணங்களையுடைய குருமார்களைக் கொல்வதை விட்டு இந்த உலகத்தில் கையேந்தி பிச்சை எடுத்து உண்பதே மிகச் சிறந்ததாகும். ஆனால், ஆசார்யார்களான பெரியோரைக் கொன்றால் ரத்தம் தோய்ந்த பொருளையும், போக உணர்வுகளையும் இப்பிறவியிலேயே அநுபவிக்கும் இழி நிலைக்குள்ளாவேன்.

ஸ்: ந சைதத் வித்மஹ கதாந்நோ கரீயோ யத்வா ஜயேம யதிவா
நோ ஜயேயுஹ ।
யாநேவ ஹத்வா ந ஜிஜீவிஷாமஸ் தே அவஸ்திதாஹ்
ப்ரமுகே தார்தராஷ்ட்ராஹா ॥ 6

கருத்துரை:

மேலும், இந்த யுத்தத்தில் நாம் வெற்றி காண்போமோ அல்லது அவர்களே வெற்றி அடைவார்களோ என்பதை நாம் சொல்ல முடியாது. இவை இரண்டிலும் நமக்கு எது மேன்மையானது என்பதும் நமக்குத் தெரியாது. எவரைக் கொன்று நாம் வாழ விரும்பமாட்டோமோ, அத்தகைய பீஷ்மர் முதலானோர் யுத்தத்தில் நமக்கு எதிராக நின்றுள்ளனர்.

**ஸ்: கார்பண்யதோ ஷோபஹதஸ்வபாவஹ**
**ப்ருச்சாமி த்வாம் தர்மஸம்மூட சேதாஹ |**
**யச்ச்ரேயஹ ஸ்யாந்நிஸ்சிதம் ப்ரூஹி தன்மே சிஷ்யஸ்தே**
**அஹம் சாதி மாம் த்வாம் ப்ரபன்னம் ||** 7

கருத்துரை

(ஏ கிருஷ்ணா!) ஆத்மஞான சூன்யம் எனும் தோஷத்தினால் சூழப்பெற்ற நான் தர்மத்தினை அறியாது, சந்தேகமடைந்து நின்னைக் கேட்கிறேன். எனக்கு எது நிச்சயமாக மேன்மை

நாக்கூடியதோ அதனைச் சொல்வீராக! நான் உமது சிஷ்யன். உம்மை சரணடைந்த என்னை (இவ்வாறு நடந்துகொள் என்று) உபதேசித்தருளும்.

ஸ்: **நஹி ப்ரபச்யாமி மமாபனுத்யாத்**
**யச்சோகமுச்சோஷமிந்திரியாணாம் ।**
**அவாப்ய பூமாவஸபத்னம்ருத்தம்**
**ராஜ்யம் ஸுராணாமபி சாதிபத்யம் ॥** 8

கருத்துரை:
இப்பூவுலகில், எதிரிகளேயில்லாத, நிறைந்துள்ள ராஜ்யத்தையும், (ஸ்வர்கத்தில்) தேவர்களுக்கு அதிபதியாய் இருக்கும், பேறு பெறினும், இந்திரியங்களை எரித்துப் பொசுக்கி அழிக்கின்ற என் துன்பத்தை எதுவும் போக்கும் என்று தோன்றவில்லை.

ஸ்: **ஏவமுக்த்வா ஹ்ருஷிகேசம் குடாகேசஹ பரந்தபஹ ।**
**ந யோத்ஸ்ய இதி கோவிந்தமுக்க் வா தூஷ்ணீம்**
**பபூவஹ ॥** 9

கருத்துரை:
இவ்விதமாக அர்ஜுனன் ஸ்ரீ கிருஷ்ணருக்குச் சொல்லி, 'நான் யுத்தம் செய்யேன்' என்று சொல்லிவிட்டு வாளா இருந்தான்.

ஸ்: **தமுவாச ஹ்ருஷிகேசஹ் - ப்ரஹஸன்னிவ பாரத ।**
**ஸேனயோருபயோர்மத்யே விஷீதந்தமிதம் வசஹ ॥ 10**

கருத்துரை:
திரிதராஷ்டிர மகாராஜா! இரண்டு சேனைகளுக்குமிடையில் விசனப்பட்டுக் கொண்டிருக்கிற அர்ஜுனனைக் கண்டு நகைப்பவர் போல் இங்கு (கீழ்) வாக்கியங்களை ஸ்ரீ கிருஷ்ணர் சொன்னார்.

ஸ்: **அசோச்யானன்வசோசஸ்த்வம் ப்ரக்ஞாவாதான்ஸ்ச பாஷஸே ।**
**கதாஸூனகதாஸூன்ஸ்ச நானுசோசந்தி பண்டிதாஹா ॥ 11**

கருத்துரை:
ஸ்ரீ கிருஷ்ணபகவான் சொன்னது. (ஏ அர்ஜுனா!) நீ துக்கப்படத்

தகுதியில்லாதவரைப் பற்றி துக்கப்படுகிறாய். மேலும் புத்தி வாதத்துடன் கூடிய வாக்கியங்களைக் கூறிப் பேசுகிறாய். ஞானியர் இறந்தவர்களைப் பற்றியோ, உயிருடன் இருப்பவர்களைப் பற்றியோ எப்போதும் துக்கமடைவதில்லை.

**ஸ்: ந த்வேவாஹம் ஜாது நாஸம் ந த்வம் நேமே ஜனாதிபாஹா ।**
**நசைய ந பவிஷ்யாமஹ ஸர்வே வயமதஹ் பரம் ॥ 12**

கருத்துரை:
அர்ஜுனா! நான், நீ, (யுத்தபூமியில் உள்ள) அரசர்கள் ஆகியோர் இதற்குமுன்பு இல்லாதிருந்ததில்லை. இதற்கு பிறகும் இல்லாதிருக்கமாட்டோம்.

**ஸ்: தேஹினோ அஸ்மின்யதா தேஹே கௌமாரம்**
**யௌவனம் ஜரா ।**
**ததா தேஹாந்தரப்ராப்திர்தீரஸ்தத்ர ந முஹ்யதி ॥ 13**

கருத்துரை:
ஜீவனுக்கு சரீரத்தில் பால்யம், இளமை, மூப்பு என்ற இவை

உண்டாவதைப் போலவே மரணத்திற்குப்பின் மீண்டும் சரீரத்தை அடைவது நிகழ்கின்றது. எனவே இவ்விஷயத்தைக் குறித்து ஞானியானவன் அதன் பொருட்டு மோஹத்தை (சோகத்தை) அடைவதில்லை.

**ஸ்: மாத்ராஸ்பர்சாஸ்து கௌந்தேய**
**சீதோஷ்ணஸுகதுஹ்கதாஹா |**
**ஆகமாபாயினோ அநித்யா தாம்ஸ்திதிக்ஷஸ்வ**
**பாரத || 14**

கருத்துரை:
ஏ அர்ஜுனா! இந்திரியங்களின் சப்தஸ்பர்சங்கள் முதலான விஷயங்களின் இணைக்கத்தினால் குளிர், வெப்பம், இன்பம், துன்பம் முதலியன உண்டாகின்றன. மற்றும் அவை தோன்றி மறைதலும், நிலையாமையும் உடையவை. எனவே அவைகளைப் பொறுத்துக் கொள்.

**ஸ்: யம் ஹி ந வ்யதயந்த்யேதே புருஷம் புருஷர்ஷப |**
**ஸமதுஹ்கஸுகம் தீரம் ஸோ அம்ருதத்வாய கல்பதே || 15**

கருத்துரை:
புருஷசிரேஷ்டனான அர்ஜுனா! எவனை இந்த சுகதுக்க விஷயங்கள் பாதிப்பதில்லையோ (அசைப்பதில்லையோ) இன்ப துன்பங்களில் சமபாவமுடைய அத்தகைய தீர மோக்ஷத்திற்கு தகுதியுடையவனாகிறான்.

**ஸ்: நாஸதோ வித்யதே பாவோ நாபாவோ வித்யதே ஸதஹ |**
**உபயோரபி த்ருஷ்டோ**
**அந்தஸ்த்வனயோஸ்த்தத்வதர்சிபிஹி ||** 16

கருத்துரை:
அசத்தியமாய் (நாமரூபமாகவும். அழியும் இயல்புடையவாயும்,) உள்ள தேகம் முதலானவற்றுக்கு இருப்பு இல்லை. சத்தியமான ஆத்மாவிற்கு இருப்புண்டு. தத்வ ஞானியர் இரண்டின் தன்மையும் நன்கு தெரிந்திருக்கின்றனர்.

**ஸ்: அவிநாசி து தத்வித்தி யேன ஸர்வமிதம் ததம் |**
**விநாசமவ்யயஸ்யாஸ்ய ந கஸ்சித்கர்துமர்ஹதி ||** 17

கருத்துரை:

அர்ஜுனனே! இவ்வுலகமெல்லாம் எந்த பரமாத்மாவால் வியாபிக்கப் பட்டுள்ளதோ, அது நாசமற்றது, அழியாப் பொருள் என்று அறிக. அழியாப் பொருளான ஆத்மாவை அழித்தல் எவருக்கும் இயலாது.

**ஸ்: அந்தவந்த இமே தேஹா நித்யஸ்யோக்தாஹ் சரீரிணஹ |**
**அநாசினோ அப்ரமேயஸ்ய தஸ்மாத் யுத்யஸ்வ பாரத || 18**

கருத்துரை:

அர்ஜுனா! நித்தியமாய், நாசமற்றதாய், அளவிட முடியாததாய் உள்ள தேஹி (ஆத்மா) வின் இந்த தேகங்கள் அழியும் தன்மையுடையவை என சொல்லப்படுகின்றது. ஆத்மா ஒன்றே நிலையானது. எனவே (ஆத்மாவைக் குறித்தோ, தேகத்தைக் குறித்தோ துக்கிப்பதை விடுத்து) நீ யுத்தம் செய்!

**ஸ்: ய ஏனம் வேத்தி ஹந்தாரம் யஸ்சைனம் மன்யதே ஹதம் |**
**உபௌ தௌ ந விஜாநீதோ நாயம் ஹந்தி ந ஹன்யதே || 19**

கருத்துரை:

எவன் ஆத்மாவை கொலை செய்பவனென்று எண்ணுகிறானோ, அல்லது எவன் கொல்லப்படுபவன் என்றும் எண்ணுகிறானோ, அவ்விருவரும் உண்மையை அறிந்தவர் இல்லை. உண்மையில் ஆத்மா கொல்லுவதுமில்லை, கொல்லப்படுவதுமில்லை.

**ஸ்: ந ஜாயதே ம்ரியதே வா கதாசித்**
**நாயம் பூத்வா பவிதா வா ந பூய: |**
**அஜோ நித்யஃ சாச்வதோ அயம் புராணோ**
**ந ஹன்யதே ஹன்யமானே சரீரே ||** 20

கருத்துரை:

இவ்வாத்மா ஒரு போதும் பிறப்பதில்லை, இறப்பதுமில்லை, இதுவரை இல்லாது இருந்து மறுபடியும் புதிதாக உண்டாவதுமில்லை. (இதுவரை இருந்து மறுபடியும் இல்லாது போவதுமில்லை) இது பிறப்பு இறப்பில்லாதது, தேயாதது, வளராதது, சரீரம் கொல்லப்பட்டாலும் ஆன்மா கொல்லப்படுவதில்லை.

**ஸ்: வேதா அவிநாசினம் நித்யம் ய ஏனமஜமவ்யயம் |**
**கதம்ஸ புருஷஹ பார்த்த கம் காதயதி ஹந்தி கம் || 21**

கருத்துரை:
அர்ஜுனனே! இவ்வாத்மாவை எவன் பிறப்பிறப்பு அற்றதாகவும், அழிவற்றதாகவும், நிலைத்திருப்பதாகவும் கருதுகிறானோ, அத்தகையோன் எப்படி இன்னொருவரை கொல்லச் செய்வான், கொல்லுவான்?

**ஸ்: வாஸாம்ஸி ஜீர்ணானி யதா விஹாய**
**நவானி க்ருஹ்ணாதி நரோ அபராணி |**
**ததா சரீராணி விஹாய ஜீர்ணான்**
**யன்யானி ஸம்யாதி நவானி தேஹீ || 22**

கருத்துரை:
கிழிந்து போன பழைய ஆடைகளை விடுத்து மற்றைய புதிய ஆடைகளை எவ்வாறு போட்டுக் கொள்கிறோமோ, அவ்வாறே

தேஹியான ஆத்மா பழைய சிதிலமான சரீரத்தைவிடுத்து மற்றைய புதிய சரீரத்தை எடுக்கிறான்.

**ஸ்: நைநம் சிந்தந்தி சஸ்த்ராணி நைநம் தஹதி பாவகஹ |**
**சனம் க்லேதயந்த்யாபோ ந சோஷயதி மாருதஹ || 23**

கருத்துரை:
இந்த ஆத்மாவை ஆயுதங்கள் ஒருபோதும் வெட்டமாட்டா. அக்னி எரிக்காது, நீர் நனைக்காது, காற்றும் உலர்த்தாது.

**ஸ்: அச்சேத்யோ அயமதாஹ்யோ அயமக்லேத்யோ**
**அசோஷ்ய ஏவ ச |**
**நித்யஹ ஸர்வகதஹ ஸ்தாணுரசலோயம் ஸநாதநஹ || 24**

கருத்துரை:
இந்த ஆத்மா வெட்டுண்ணான், வேகான், நனையான், உலரான். இவன் நித்யன், எங்கும் நிறைந்து நிலையாய், அசைவற்று என்றுமிருப்பவன்.

**அவ்யக்தோ அயமசிந்த்யோ அயமவிகார்யோ அயமுச்யதே ।**
**தஸ்மாதேவம் விதித்வைனம் நானுசோசிதுமர்ஹஸி ॥ 25**

*கருத்துரை:*
இவ்வாத்மா இந்திரியங்களுக்கு புலப்படாதது, சிந்தனைக்கு எட்டாதது, மாறுபாடு அடையாதது. என்று சொல்லப்படுகின்றது. ஆகவே இவ்வாத்மாவை இங்ஙனம் அறிந்து நீ துன்பத்தை அகற்றுக.

**அத சைனம் நித்யஜாதம் நித்யம்வா மன்யஸே ம்ருதம் ।**
**ததாபி த்வம் மஹாபாஹோ நைனம் சோசிதுமர்ஹஸி ॥ 26**

*கருத்துரை:*
அர்ஜுனா! ஒருவேளை இவ்வாத்மா (தேகத்துடனும்) என்றும் பிறந்து மடிகின்றது என்று எண்ணினாலும், அப்போதும் நீ இவ்வாறாக துக்கித்தல் தகாது.

**ஜாதஸ்ய ஹி த்ருவோ ம்ருத்யுர் த்ருவம் ஜன்ம ம்ருதஸ்ய ச ।**
**தஸ்மாதபரிஹார்யே அர்த்தே ந த்வம் சோகிதுமர்ஹஸி ॥ 27**

*கருத்துரை:*
*(ஒரு வேளை நீ இவ்வாத்மாவை, பிறப்பு இறப்பு இருப்பதாக எண்ணினாலும்) பிறந்தவனுக்கு இறப்பு தப்பாது. இறந்தவனுக்கு பிறப்பு தப்பாது. இவ்வாறு தவிர்க்க முடியாத விஷயத்திற்காக நீ துக்கிப்பது சரியல்ல.*

**ஸ்: அவ்யக்தாதீனி பூதானி வ்யக்தமத்யானி பாரத |**
**அவ்யக்தநிதனான்யேவ தத்ர கா பரிதேவனா || 28**

*கருத்துரை:*
*அர்ஜுனா! பிராணிகோடிகள் அனைத்தும் பிறப்பதற்கு முன் கண்ணுக்கு புலப்படாதவைகளாகவும், பிறந்த பின் (தேகத்துடன்) புலப்படுபவைகளாகவும், மரணத்திற்கு பின் மறுபடியும் புலப்படாதவைகளாகவும் உள்ளன, அவ்வாறிருக்கையில் அதன் விஷயத்தில் துக்கிப்பது எதற்காக? (முதலில் புலப்படாது, மறுபடியும் புலப்பட்டு, மீண்டும் மறைந்து போகும் மாயாரூபமான இந்த தேகத்திற்காக துக்கிப்பதற்கு என்ன இருக்கிறது என்பது பொருள்) (அல்லது முதலில்*

அவ்யக்தரூபமாக இருந்து மறுபடியும் அவ்யக்தமாகும் இந்த தேகத்திற்காக வருந்துவது ஏன் என்று பொருள் கொள்ளலாம்).

ஸ்: **ஆஸ்சர்யவத் பச்யதி கஸ்சிதேனம்**
**ஆஸ்சார்யவத் வததி ததைவ சான்யஹ ॥**
**ஆஸ்சர்யவச்சைனமன்யஹ் ச்ருணோதி**
**ச்ருத்வாப்யேனம் வேத ந சைவ கஸ்சித் ॥** 29

கருத்துரை:
இவ்வாத்மாவை ஒருவன் ஆச்சரியமாகப் பார்க்கிறான். இன்னுமொருவன் விந்தையென வியந்து கூறுகிறான். அவ்வாறே மற்றுமொருவன் விந்தையாக கேட்கிறான் இவ்வாறு, கண்டும், சொல்லியும், கேட்டும் கூட எவரும் அதனை சரியாக உணர்ந்தவர் இல்லை. (உண்மையில் அனுபவித்தவர் இல்லை).

ஸ்: **தேஹீ நித்யமவத்யோ அயம் தேஹே ஸர்வஸ்ய பாரத ।**
**தஸ்மாத் ஸர்வாணி பூதானி ந த்வம் சோசிதுமர்ஹஸி ॥** 30

கருத்துரை.

அர்ஜுனா! எல்லா பிராணிகோடிகளின் தேகத்தில் உறைகின்ற இந்த ஆன்மா எப்பொழுதும் வதை செய்யப்படாதது. எனவே எந்தப் பிராணியைக் குறித்தும் நீ வருந்துதல் தகாது.

**ஸ்: ஸ்வதர்மமபி சாவேக்ஷ்ய ந விகம்பிதுமர்ஹஸி |**
**தர்மயாத்ஹி யுத்தாச்ச்ரேயோ அன்யத் க்ஷத்ரியஸ்ய ந**
**வித்யதே ||** 31

கருத்துரை:

ஏ அர்ஜுனா! மற்றும் உன் ஸ்வதர்மமான க்ஷத்திரிய தர்மத்தை நோக்குமிடத்தும் யுத்தத்தினின்றும் பின்வாங்குதல் நல்லதல்ல. ஏனெனில், க்ஷத்திரியனுக்கு தர்மயுத்தத்தைக் காட்டிலும் மேலானதொன்று இல்லையல்லவா?

**ஸ்: யத்ருச்சயா சோபபன்னம் ஸ்வர்கத்வாரமபாவ்ருதம் |**
**ஸுகினஹ் க்ஷத்ரியாஹ் பார்த்த லபந்தே யுத்தமீத்ருசம் || 32**

கருத்துரை:
பார்த்தா! முயற்சியின்றி தானாகவே கிடைக்கக்கூடியதும், திறந்துள்ள சுவர்க்க வாயில் போன்றதும் ஆன இத்தகைய யுத்தத்தை எவர் அடைகிறார்களோ அவர்கள் பாக்யவான்கள்.

**ஸ்: அத சேத் த்வமிமம் தர்ம்யம் ஸங்க்ராமம் ந கரிஷ்யஸி |**
**ததஹ் ஸ்வதர்மம் கீர்த்திம் ச ஹித்வா பாபம்**
**அவாப்ஸ்யஸி || 33**

கருத்துரை:
இனி நீ அறப்போராகிய இந்த யுத்தத்தினை ஆற்றாவிட்டால், அதனால் ஸ்வதர்மத்தை விட்டவனாய், கீர்த்தியையும் இழந்து பாபத்தை அடைவாய்.

**ஸ்: அகீர்த்திஞ்சாபி பூதானி கதயிஷ்யந்தி தே அவ்யயாம் |**
**ஸம்பாவிதஸ்ய சாகீர்த்திர் மரணாததிரிச்யதே || 34**

கருத்துரை:

மேலும் மக்கள் உன்னை யாவரும் இகழ்ந்து கதை பேசுவர். கௌரவமாக போற்றப்பட்ட ஒருவனுக்கு அபகீர்த்தி மரணத்தை காட்டிலும் இழிவானது.

**ஸ்: பயாத்ரணாதுபரதம் மம்ஸ்யந்தே த்வாம் மஹாரதாஹா**
**யேஷாம் ச த்வம் பஹுமதோ பூத்வா யாஸ்யஸி**
**லாகவம் ||**

கருத்துரை:

இதுவரை எத்தகைய மகாரதர்கள் உன்னைப் பெருமையாக கருதியிருந்தார்களோ, அவர்களே, பயத்தினால் யுத்தத்தினின்றும் புறங்காட்டி ஓடினாய் எண்ணுவார்கள்.

**ஸ்: அவாச்யவாதாம்ஸ்ச பஹுன் வதிஷ்யந்தி தவாஹிதாஹா**
**நிந்தந்தஸ்தவ ஸாமர்த்யம் ததோஹாதுஹ் கதரம்**
**நு கிம் ||**

கருத்துரை:

சுகதுக்கங்கள், லாபநஷ்டங்கள். ஜய அபஜயங்கள் ஆகியவற்றைச் சமனாகக் கருதி யுத்தத்திற்கு தயாராகு. இவ்வாறு செய்தாயானால் நீ பாபம் அடையமாட்டாய்.

ஸ்: **ஏஷா தே அபிஹிதா ஸாங்க்யே புத்திர் யோகேத்விமாம் ச்ருணு |**
**புத்த்யா யுக்தோ யயா பார்த்த கர்மபந்தம் ப்ரஹாஸ்யஸி || 39**

கருத்துரை:

ஏ அர்ஜுனா! இதுவரை சாங்கிய சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட ஆன்ம தத்துவ அறிவு உனக்கு புகட்டப்பட்டது. இனி யோக சாஸ்திரத்தில் கர்மயோக சம்பந்தமான விவேகத்தைப் பற்றி கூறப்போகிறேன். அதனை நீ அறிவாயாகில் கர்மபந்தத்தினின்றும், சுலபமாக விடுபடுவாய். எனவே சிரத்தையுடன் கேட்பாயாக.

ஸ்: **நேஹாபிக்ரமநாசோ அஸ்தி ப்ரத்யவாயோ ந வித்யதே |**
**ஸ்வல்பமப்யஸ்ய தர்மஸ்ய த்ராயதே மஹதோ பயாத் || 40**

கருத்துரை:
இங்கு ஆரம்பிக்கப்பட்ட கர்மயோகத்தில் பலன் இன்றிப் போதல் இல்லை. முயற்சியும் பூர்த்தியாவதற்கு முன்பாகவே ஏக்காரணத்தைக் கொண்டேனும் இடையில் நிறுத்திவிட்டாலும் குற்றம் ஏதும் இல்லை. இந்த கர்மயோக அனுஷ்டான தர்மம் அளவே சிறந்ததாயினும் (பிறப்பு இறப்பு எனும் பிரவாக ரூபமான) ஸம்ஸார பயத்தினின்றும் காப்பாற்றக் கூடியது.

ஸ்: **வ்யவஸாயாத்மிகா புத்திரேகேஹ குருநந்தன |**
**பஹுசாகா ஹ்யனந்தாஶ்ச புத்தயோ**
**அவ்யவஸாயினாம் || 41**

கருத்துரை:
அர்ஜுனா! இந்த கர்மயோக அனுஷ்டானத்தில் நிச்சயத்துடன் கூடிய புத்தி ஒன்றேயாகும். உறுதியில்லாதவர்களுடைய புத்திகள் பலவிதமானவைகளும் எண்ணிக்கையற்றவைகளும் உள்ளன.

ஸ்: யாமிமாம் புஷ்பிதாம் வாசம் ப்ரவதந்த்யவிபஸ்சிதஹ |
வேதவாதரதாஹ் பார்த்த நான்யதஸ்தீதிவாதினஹ || 42

ஸ்: காமாத்மானஹ் ஸ்வர்க்பராஹ் ஜன்மகர்மபலப்ரதாம் |
க்ரியாவிசேஷபஹுலாம் போகைச்வர்யகதிம் ப்ரதி || 43

ஸ்: போகைச்வர்யப்ரஸக்தானாம் தயாபஹ்ருதசேதஸாம் |
வ்யவஸாயாத்மிகா புத்திஹ் ஸமாதௌ ந விதீயதே || 44

கருத்துரை:
ஏ அர்ஜுனா! வேதத்தில் பலனைப் பற்றிக் கூறும் பகுதியில் மிக விருப்பம் உடையவரும், அதில் கூறப்பட்ட சுவர்க்கம் முதலான பலன்களைவிட அதிகமானது வேறெதுவுமில்லை என வாதிடுவோர்களும், ஆசையில் கட்டுண்ட சித்தத்தை உடையவர்கள். சுவர்க்கமே முடிவான பேறு எனக்கருதும், அல்பர்கள், ஜன்மம், கருமம் இவற்றை பலனாக அளிக்கவல்லதும். போக ஐசுவர்யத்தில் பற்றுடையவரும், அவர்களுடைய புஷ்பாலங்காரமான, பலன் சூன்யமான, சொல்லப்படும்

சொற்களினால் கவரப்பட்டவராய் உள்ள சித்தத்தினை உடையவரும் (அவ்வாக்கியத்தினை நம்பி அதன் மீது பற்றுடையவரும்) போக ஐசுவர்ய பிரியர்களான மக்களுக்கு தெய்வ தியானத்தில் (சமாதி நிலையில்) நிச்சயமான (ஒருமுனைப்பாடு) புத்தி உண்டாவதில்லை.

**த்ரைகுண்யவிஷயா வேதா நிஸ்த்ரைகுண்யோ பவார்ஜுன ।**
**நிர்த்வந்த்வோ நித்யஸத்வஸ்தோ நிர்யோகக்ஷேம**
**ஆத்மவான் ॥ 45**

கருத்துரை:

அர்ஜுனா! வேதங்களின் (அதில் முதல் பாகமான கர்ம காண்டம்) முக்குணங்களின் மயமான (ஸம்சார) விஷயங்களை தெரிவிப்பனவாய் உள்ளன. நீ முக்குணங்களை விட்டவன், இருமைகள் இல்லாதவன், எப்போதும் சுத்தசத்துவமாய் நடுநிலையில் நின்று, யோகக்ஷேமங்கள் அற்று, ஆத்ம ஞானியாய் ஆகுக.

**ஸ்: யாவானர்த்த உதபானே ஸர்வதஹ் ஸம்ப்லுதோதகே |**
**தாவான் ஸர்வேஷு வேதேஷு ப்ராஹ்மணஸ்ய**
**விஜானதஹ || 46**

*கருத்துரை:*
*குளிப்பதற்கும் குடிப்பதற்கும் பயன்படும் சிறிதளவு நீர் உடைய கிணறு முதலானவை எந்த அளவு உபயோகப்படுகிறதோ, அந்தளவு உபயோகம் பெரிய நீர் பெருக்கத்திலும் உள்ளது. அவ்வாறே வேதங்களில் சொல்லப்பட்ட எல்லா கர்மங்களினாலும் எத்தகைய பயன் உண்டோ, அந்த அளவு பயன் பிரம்மஞானத்தை அடைந்த பிரம்ம நிஷ்டனுக்கு பிரம்மானந்தத்திலும் உண்டு.*

**ஸ்: கர்மண்யேவாதிகாரஸ்தேமாபலேஷு கதாசன |**
**மா கர்மபலஹேதுர்பூர்மா தே ஸங்கோ அஸ்த்வகர்மணி || 47**

*கருத்துரை:*
*(அர்ஜுனா) உனக்கு கர்மாவை செய்தற்கு மட்டுமே*

அதிகாரமுண்டு. கர்மபலனை ஆசைப்படுவதற்கு எக்காலத்தும் அதிகாரம் இல்லை. கர்ம பலத்திற்கு நீ காரணபூதன் ஆகாதே மற்றும், கர்மாவை செய்யாதிருக்க ஆசைப்படாதே!

**ஸ்: யோகஸ்தஹ் குரு கர்மா ஸங்கம் த்யக்த்வா தனஞ்ஜய ।**
**ஸித்த்யஸித்த்யோஹ் ஸமோ பூத்வா ஸமத்வம் யோக**
**உச்யதே ॥ 48**

கருத்துரை:
ஏ அர்ஜுனா! நீ யோகத்தில் நிலைபெற்று, பற்றற்று, வெற்றி தோல்விகளில் சமமாகக் கொண்டு, கருமத்தை செய், அத்தகைய சமத்துவ புத்தியே யோகமெனப்படும்.

**ஸ்: தூரேண ஹ்யவரம் கர்ம புத்தியோகாத் தனஞ்ஜய ।**
**புத்தௌ சரணமன்விச்ச க்ருபணாஹ் பலஹேதவஹ ॥ 49**

கருத்துரை:
அர்ஜுனனே! (மேற்சொல்லப்பட்ட) சமபுத்தியுடன் கூடிய நிஷ்காம கர்மத்தைவிட பலனைக் கருதி செய்யப்படும் காம்ய

கர்மாவானது மிகவும் கீழ்த்தரமானது அல்லவா? எனவே சமபுத்தியுடன் கூடிய நிஷ்காம கர்மாவையே நீ செய்க. பலனைக் கருதுபவர்கள் கீழோர். தீனர்கள்.

**ஸ்: புத்தியுக்தோ ஜஹாதீஹ உபே ஸுக்ருததுஷ்க்ருதே ।**
**தஸ்மாத்யோகாய யுஜ்யஸ்வ யோகஹ் கர்மஸு**
**கௌசலம் ॥ 50**

கருத்துரை:
சமத்துவ புத்தியுடையவன் புண்யம், பாபம் இரண்டையும் இப்பிறவியிலேயே துறக்கிறான். எனவே அத்தகைய சமத்துவ புத்தியுடன் கூடிய நிஷ்காமகர்ம யோகத்தைச் சேருவதற்கு முயற்சி செய். கர்மாவை செய்தலில் வல்லமை பொருந்தியிருத்தலே யோகம் எனப்படும்.

**ஸ்: கர்மஜம் புத்தியுக்தாஹி பலம் த்யக்த்வா மனீஷிணஹ ।**
**ஜன்மபந்தவினிர்முக்தாஹ் பதம் கச்சந்த்யனாமயம் ॥ 51**

கருத்துரை:
சமத்துவ புத்தியுடன் கூடிய விவேகிகள், கர்மங்களை ஆற்றிவந்தாலும் அதன் பலனைத்தியாகம் செய்து, பிறப்பிறப்பெனும் பந்தத்தினின்றும் விடுதலை பெற்று துன்பமற்ற மோக்ஷ பதவியை அடைகிறார்கள்.

**ஸ்: யதா தே மோஹகலிலம் புத்திர்வ்யதிதரிஷ்யதி ।**
**ததா கந்தாஸி நிர்வேதம் ச்ரோதவ்யஸ்ய ச்ருதஸ்ய ச ॥ 52**

கருத்துரை:
அர்ஜுனா! உன் புத்தி எப்போது அஞ்ஞானம் எனும் அழுக்கினைக் கடந்து பரிசுத்தமாகிறதோ, அப்போது கேட்டதிலும், கேட்கப் போவதிலும் நீ பற்றின்மையைப் பெறுவாய்.

**ஸ்: ச்ருதிவிப்ரதிபன்னா தே யதா ஸ்தாஸ்யதி நிஸ்சலா ।**
**ஸமாதாவசலா புத்திஸ்ததா யோகமவாப்ஸ்யஸி ॥ 53**

*கருத்துரை:*
*பலவிதமானவற்றையும் கேட்டுக் கலக்கமடைந்துள்ள உன் புத்தி என்று அசையாது உறுதியாய் ஆத்மாவின் கண் நிலைபெறுமோ, அப்போது நீ ஆத்மாசாக்ஷாத்காரத்தை அடைவாய்.*

**ஸ்: ஸ்திதப்ரக்ஞஸ்ய கா பாஷா ஸமாதிஸ்தஸ்ய கேசவ ।**
**ஸ்திததீஹ் கிம் ப்ரபாஷேத கிமாஸீத வ்ரஜேத கிம் ॥ 54**

*கருத்துரை:*
*ஏ கிருஷ்ணா! ஸமாதியில் உள்ள, ஸ்திதப்ரக்ஞனான ஜீவன் முக்தனின் இலட்சணம் யாது? அவன் எவ்வாறு இருக்கிறான்? எவ்வாறு நடக்கிறான்?*

**ஸ்: ப்ரஜஹாதி யதா காமான் ஸர்வான் பார்த்த மனோகதான் ।**
**ஆத்மன்யேவாத்மனா துஷ்டஹ்**
**ஸ்திதப்ரஞ்ஞஸ்ததோச்யதே ॥ 55**

கருத்துரை:
அர்ஜுனா! மனிதன் எப்போது தன் மனதினின்றும் ஆசைகளை அறவே அழித்து, ஆன்மாவில் ஆன்ம திருப்தி (நிர்மலமான சித்தத்துடன்) அடைகிறானோ, அப்போது அவன் ஸ்திதப்பிரக்ஞன் எனப்படுகிறான்

**ஸ்: துக்கேஷ்வனுத்விக்னமனாஹ் ஸுகேஷு விகதஸ்ப்ருஹஹ ।**
**விதராகபயக்ரோதஹ் ஸ்திததீர்முனிருச்யதே ॥ 56**

கருத்துரை:
துக்கத்தில் கலங்காத மனதுள்ளவன், சுகத்தில் நாட்டமில்லாதவன், பற்று, அச்சம், கோபம் அற்றவன் ஆன (ஆத்ம) மனக்கட்டுப்பாடுடையவன் ஸ்திதப்பிரக்ஞன் எனப்படுகிறான்.

***ஸ்: யஹ்ஸர்வத்ராநபிஸ்நேஹஸ்தத்தத் ப்ராப்ய சுபாசுபம் ।***
***நாபிநந்ததி ந த்வேஷ்டி தஸ்ய ப்ரக்ஞா ப்ரதிஷ்டிதா ॥ 57***

கருத்துரை:

எவனொருவன் எல்லா விஷயங்களிலும் (தேகம், போகம்) இவற்றில் ஆசைகள் இல்லாதிருக்கிறானோ, அவ்வாசைகளை அடைய நேரிட்டாலும், சந்தோஷமோ, வெறுப்போ இன்றியோ இருப்பானோ, அத்தகையோனது ஞானம் மிகுந்த நிலையானது. (அத்தகையோன் ஸ்தித பிரக்ஞன்)

**ஸ்: யதா ஸம்ஹரதே சாயம் கூர்மோ அங்கானீவ ஸர்வசஹ |**
**இந்த்ரியாணீந்த்ரியார்த்தேப்யஸ்தஸ்ய ப்ரக்ஞா**
**ப்ரதிஷ்டிதா || 58**

கருத்துரை:

ஆமை எவ்வாறு தன் அவயவங்களை அடக்கிக் கொள்வதைப் போல, யோகி எப்போதும் தன் இந்திரியங்களை, இந்திரிய விஷயங்களினின்றும், முழுவதுமாக உள்ளிழுக்க வல்லவனுக்கு ஞானம் நிறை ஞானம் நிலை பெறுகிறது. (அவனே ஸ்திதப் பிரக்ஞன்)

**ஸ்: விஷயா வினிவர்தந்தே நிராஹாரஸ்ய தேஹினஹ |**
**ரஸவர்ஜம் ரஸோ அப்யஸ்ய பரம் த்ருஷ்ட்வா**
**நிவர்ததே || 59**

கருத்துரை:
இந்திரிய விஷயங்களில் ஈடுபடாத ஜீவனுக்கு, விஷயங்கள் அற்றுப் போகிறதேயன்றி அதன் வாசனைகள் போவதில்லை. பரமாத்மாவை தரிசித்தப்பின் அவ்வாசனையும் விஷயங்களுடன் கூட அற்றுப்போய் விடுகிறது.

**ஸ்: யததோ ஹ்யபி கௌந்தேய புருஷஸ்ய விபஸ்சிதஹ |**
**இந்திரியாணி ப்ரமாதீனி ஹரந்தி ப்ரஸபம் மனஹ || 60**

கருத்துரை:
ஏ அர்ஜுனா! இந்திரியங்கள் மகா சக்தியுடையவை. ஏனெனில் ஆன்ம உயர்விற்காக முயற்சி செய்துவரும் ஞானிகளைக் கூட, அவர்களின் மனதையும், அவை பலவந்தமாக (விஷயங்களின் மீது) இழுத்துச் செல்கின்றன.

**ஸ்: தானி ஸர்வாணி ஸம்யம்ய யுக்த ஆஸித மத்பரஹ |**
**வஶே ஹி யஸ்யேந்த்ரியாணி தஸ்ய ப்ரக்ஞா ப்ரதிஷ்டிதா || 61**

*கருத்துரை:*
*(பலம் பொருந்திய) அத்தகைய இந்திரியங்களனைத்தையும் நன்றாக செயல்படுத்திக் கொண்டு சாதகன் மனவுறுதியுடையவனாய் என் மீதே (ஆன்மாவில்) நிலைபெற்ற மனத்துடன் இருக்க வேண்டும். ஏனெனில், எவனின் இந்திரியங்கள் கட்டுப்பாட்டில் உள்ளனவோ அவனது ஞானமே நிலைத்ததாக இருக்கும்.*

**ஸ்: த்யாயதோ விஷயான் பும்ஸஹ ஸங்கஸ்தேஷுபஜாயதே |**
**ஸங்காத் ஸஞ்ஜாயதே காமஹ காமாத் க்ரோதோ**
**அபிஜாயதே|| 62**

**ஸ்: க்ரோதாத் பவதி ஸம்மோஹஹ் ஸ்ம்மோஹாத் ஸ்ம்ருதி**
**விப்ரமஹ |**
**ஸ்ம்ருதி ப்ரம்சாத் புத்திநாசோ புத்திநாசாத்**
**ப்ரணச்யதி || 63**

கருத்துரை:
மனிதன் சப்தாதி விஷயங்களை நினைப்பதால் அதன் மீது பற்று உண்டாகிறது. பற்றினால் அதன் மீது ஆசையுண்டாகிறது. ஆசையால் கோபம், கோபத்தால் விவேகமின்மை. விவேகமின்மையால் மறதி, மறதியால் புத்திநாசம், இவை வரிசையாக உண்டாகும். புத்திநாசத்தினால் மனிதன் கடைசியாக முழுவதும் அழிந்து போகிறான்.

**ஸ்: ராகத்வேஷவியுக்தைஸ்து விஷயானிந்த்ரியைஸ்சரன் |**
**ஆத்மவச்யைர்விதேயாத்மா ப்ரஸாதமதி கச்சதி || 64**

கருத்துரை:
ஆயின் அடங்கிய மனத்தையுடையவன், விருப்பு வெறுப்பற்ற, தன் வசப்பட்டுள்ள இந்திரியங்களைக் கொண்டு, (தேகத்தைக் காப்பாற்ற உதவும்) உணவு, நீர் முதலான விஷயங்களை அனுபவிப்பவன் ஆயினும் மனத்தெளிவை (மனச்சாந்தியை) அடைகிறான்.

**ஸ்: ப்ரஸாதே ஸர்வதுஹ்கானாம் ஹானிரஸ்யோபஜாயதே ।**
**ப்ரஸன்னசேதஸோ ஹ்யாக புத்திஹ் பர்யவதிஷ்டதே ॥ 65**

*கருத்துரை:*
*மனத்தெளிவு பெற்றதனால் மனிதனின் எல்லாவிதமான துக்கங்களும் ஒழிகின்றது. மன அமைதியுடையவனுக்கு புத்தி விரைவில் (பரமாத்மாவிடம்) நிலைபெறுகிறது.*

**ஸ்: நாஸ்தி புத்திரயுக்தஸ்ய ந சாயுக்தஸ்ய பாவனா ।**
**ந பாபாவயதஹ் சாந்திரசாந்தஸ்ய குதஹ் ஸுகம் ॥ 66**

*கருத்துரை:*
*இந்திரியங்கள் கட்டுப்பாடு, மனக் கட்டுப்பாடு இல்லாதவனுக்கு விவேக புத்தி இருப்பதில்லை. ஆத்ம சிந்தனை இருப்பதில்லை. ஆத்ம சிந்தனை இல்லாதவனுக்கு அமைதியில்லை. அமைதியில்லாதவனுக்கு சுகம் எங்கே?*

**ஸ்: இந்திரியாணம் ஹி சரதாம் யன்மனோ அனுவிதீயதே ।**
**ததஸ்ய ஹரதி ப்ரக்ஞாம் வாயுர்நாவம் இவாம்பஸி ॥ 67**

கருத்துரை:
விஷயங்களின் மீது சஞ்சரிக்கின்ற இந்திரியங்களில் எதனை மனம் அனுசரித்து செல்கிறதோ, அது மனிதனின் விவேகத்தை - நீர் மேல் கப்பலை எதிர்மாறான காற்று அலைக்கழித்து எதிரான திசையில் இழுத்துப் போவதைப் போல அலைக்கழிக்கிறது.

**(யத்மனஹ, அனுவிதீயதே தத்** - எந்த மனம் அனுசரித்துப் போகிறதே அந்த மனதை - என்ற பொருள் சொல்லக் கூடும்)

**ஸ்: தஸ்மாத் யஸ்ய மஹாபாஹோ நிக்ருஹீதானி ஸர்வசஹ ।**
**இந்த்ரியாணீந்த்ரியார்த்தேப்யஸ் தஸ்ய**
**ப்ரக்ஞா ப்ரதிஷ்டிதா ॥ 68**

கருத்துரை:
எனவே அர்ஜுனா! எவன் தன் இந்திரியங்களை விஷயங்களின் மீது செல்லவொட்டாது, எல்லாவிதங்களிலும் கட்டுப்படுத்துகிறானோ, அவனது ஞானமே நிலையானது.

**ஸ்: யா நிசா ஸர்வபூதானாம் தஸ்யாம் ஜாகர்தி ஸம்யமீ |**
**யஸ்யாம் ஜாக்ரதி பூதானி ஸா நிசா பச்யதோ முனேஹே || 69**

கருத்துரை:
எல்லா பிராணிகளுக்கும் (சாமான்ய மக்களுக்கு) எது (பரமார்த்த தத்துவம்) இரவோ (காட்சிக்கு புலப்படாது) இருக்கின்றதோ, அதில் இந்திரியங்களைக் கட்டுப்படுத்திய ஞானி விழித்திருப்பான். (ஆன்ம உலகில் இருப்பான்) எதில் (சப்தாதி விஷயங்களில்) பிராணிகள் விழித்திருக்கிறார்களோ (ஆசையுடன் நடந்து கொள்கிறார்களோ) அது (விஷய ஜாலம்) பரமார்த்த தத்துவத்தை தரிசிக்கும் முனிகளுக்கு இரவாக இருக்கும் (காட்சியில்) புலப்படாதிருக்கும்).

**ஸ்: ஆபூர்யமாணமசலப்ப்ரதிஷ்டம் ஸமுத்ரமாபஹ்ற ப்ரவிசந்தி யத்வத் |**
**தத்வத்காமா யம் ப்ரவிசந்தி ஸர்வே ஸ சாந்திமாப்னோதி ந காமகாமீ || 70**

கருத்துரை:
நீரினால் முழுமையாக நிறைந்துள்ள அசைவற்ற நிறைகடலில் ஆறுகள் முதலியன சென்றடைவதைப்போல், போக விஷயங்கள் அனைத்தும் பிரம்ம நிஷ்டனிடம் அடங்கி விடுகின்றன, (அவனை விகாரப்படுத்த இயலாது). அத்தகையோனே சாந்தியை அடைகிறானே தவிர விஷயங்களின் மீது பற்றுடையவன் அல்ல.

**ஸ்: விஹாய காமான் யஹ் ஸர்வான் புமாம்ஸ்சரதி**
**நிஸ்ப்ருஹஹ I**
**நிர்மமோ நிரஹங்காரஹ் ஸ சாந்திமதிகச்சதி II 71**

கருத்துரை:
எந்த மனிதன் ஆசைகள் அற்று, பற்றற்று (நான், எனது என்ற) மமதைகளை விட்டுத் திகழுகின்றானோ, அவனே அமைதி அடைகிறான்.

ஸ்: ஏஷா ப்ராஹ்மீ ஸ்திதிஹ பார்த்த நைநாம் ப்ராப்ய
விமுஹ்யதி |
ஸ்தித்வா அஸ்யாமந்தகாலே அபி
ப்ரஹ்மநிர்வாணம்ருச்சதி || 72

கருத்துரை:
அர்ஜுனா! இவையனைத்தும் பிரம்ம சம்பந்தமான நிலை; இத்தகைய பிரம்ம நிலையையடைந்தோன் மறுபடியும் ஒருகாலும் மோகமடைவதில்லை. மரண காலத்தில் கூட இத்தகைய நிலையில் கூட பிரம்மானந்த மோக்ஷத்தையே அடைகிறான்.

*****

## மூன்றாம் அத்தியாயம்
## கர்ம யோகம்

ஸ்: ***ஜ்யாயஸீ சேத் கர்மணஸ் மதா புத்திர் ஜனார்தன ।***
***தத்கிம் கர்மணி கோரே மாம் நியோஜயஸி கேசவ ॥ 1***

கருத்துரை:
அர்ஜுனன் சொன்னான் - ஏ கிருஷ்ணா ஞானம் கர்மத்தை விடச்சிறந்தது என்பதே உம் கருத்தானால், என்னை ஏன் இந்த யுத்த மெனும் கொடுமையான செயலில் ஈடுபடுத்துகிறீர்?

ஸ்: ***வ்யாமிச்ரேணேவ வாக்யேன புத்திம் மோஹயஸீவ மே ।***
***ததேகம் வத நிஸ்சித்ய யேன ச்ரேயோ அஹமாப்னுயாம் ॥ 2***

கருத்துரை:
கிருஷ்ண! முரண்படுபவை போன்ற நின் வாக்கியங்களால் என் புத்தியை குழப்புகின்றீர், எனவே நான் எதனால்

மேன்மையடைதல் இயலும் என்பதை (கர்மாவினால் யோகத்தினால்) என்று நிச்சயமாகக் கூறும்!

**ஸ்: லோகே அஸ்மின் த்விவிதா நிஷ்டா புரா ப்ரோக்தா மயானக ।**
**ஞான யோகேன ஸாங்க்யானாம் கர்மயோகேன யோகினாம் ॥ 3**

கருத்துரை:
பாவமற்ற அர்ஜுனா! தத்வ விசாரம் செய்பவர்களுக்கு ஞானயோகம் என்றும் அதை அனுஷ்டிக்கிறவர்களுக்கு கர்மயோகம் என்றும் இரண்டு நெறிகள் இதற்கு முன் என்னால் இயம்பப்பட்டிருக்கின்றன.

**ஸ்: ந கமர்ணாமனாரம்பாந்நைஷ்கர்ம்யம் புருஷோ அச்னுதே ।**
**ந ச ஸந்யஸனாதேவ ஸித்திம் ஸமதிகச்சதி ॥ 4**

கருத்துரை:
மனிதன் செயல்களாற்றியிருப்பதனால் மட்டும் கர்மமற்ற நிலையை (ஆத்ம ஸ்வரூப ஸ்திதியை) அடைந்து விடுவதில்லை. கர்ம தியாகம் செய்வதால் (ஸந்நியாசத்தால்) மோக்ஷ சித்தியைப் பெறுவதுமில்லை.

**ஸ்: ந ஹி கஸ்சித் க்ஷணமபி ஜாது திஷ்டத்யகர்மக்ருத் ।**
**கார்யதே ஹ்யவசஹ கர்ம ஸர்வஹ ப்ரக்ருதி**
**ஜைர்குணைஹி ॥ 5**

கருத்துரை:
(உலகில்) எவனொருவனும் ஒரு கணமாயினும் செயலாற்றாது இருத்தல் இயலாது. இயற்கையினால், பிறந்த நிமிடத்திலிருந்தே ஒவ்வொருவனும் தன்வயமின்றியே கர்மாக்களை செய்து கொண்டேயிருக்கிறான்.

**ஸ்: கர்மேந்த்ரியாணி ஸம்யம்ய ய ஆஸ்தே மனஸா ஸ்மரன் ।**
**இந்திரியார்த்தான் விமூடாத்மா மித்யாசாரஹ**
**ஸ உச்யதே ॥ 6**

கருத்துரை:
எவன் கர்மேந்திரிய ஞானேந்திரியங்களை அடக்கி மனதினால் இந்திரியங்களின் சப்தாதி விஷயங்களை சிந்தித்து இருக்கிறானோ, மூட சித்தனான அவன் கபட வேடதாரி பொய்யொழுக்கமுடையவன் என்று சொல்லப்படுகிறான்.

ஸ்: **யஸ்த்விந்திரியாணி மனஸா நியம்யாரபதே அர்ஜுன ।**
**கர்மேந்திரியைஹ் கர்மயோகமஸக்தஹ் ஸ விசிஷ்யதே ॥ 7**

கருத்துரை:
அர்ஜுனா! எவன் இந்திரியங்கள் அனைத்தையும் மனத்துடன் அடக்கி அவற்றால் கர்மயோகத்தைப் பற்றற்று செய்து வருகிறானோ, அவன் உத்தமன்,

ஸ்: **நியதம் குரு கர்ம த்வம் கர்மஜ்யாயோ ஹ்யகர்மணஹ ।**
**சரீரயாத்ராபி ச தே ந பிரஸித்யேதகர்மணஹ ॥ 8**

கருத்துரை:
(ஏ அர்ஜுனா! நீ (சாஸ்திரங்களில்) நியமிக்கப்பட்ட கர்மங்களைச் செய். கர்மாவைச் செய்யாதிருப்பதை விட செய்வதே மேல். மேலும் கர்மம் செய்யாதிருப்பதால் உனக்கு தேகத்தைப் பேணுவது கூட இயலாது.

**ஸ்: யக்ஞார்த்தாத் கர்மணோ அன்யத்ர லோகோ அயம்**
**கர்மபந்தனஹ |**
**ததர்த்தம் கர்ம கௌந்தேய முக்தஸங்கஹ் ஸமாசர || 9**

கருத்துரை:
அர்ஜுனா! யக்ஞத்திற்காகவாவது, (தெய்வதிருப்தியாக) அல்லது உலக நன்மைக்காக காரியங்களைத் தவிர ஏனைய கர்மங்களால் மக்கள் கர்மபந்தத்தை அடைகின்றனர் எனவே யக்ஞத்திற்காகவாவது பற்றற்று (பலனை எதிர்பாராது) செய்க.

**ஸ்: ஸஹயக்ஞாஹ் ப்ரஜாஹ் ஸ்ருஷ்ட்வா புரோவாச ப்ரஜாபதிஹி ।**
**அனேன ப்ரஸவிஷ்யத்வமேஷவோ அஸ்த்விஷ்ட காமதுக் ॥ 10**

கருத்துரை:
படைப்பின் ஆரம்பத்தில், பிரம்ம தேவன், யக்ஞத்துடன் (யக்ஞமனப்பான்மையுடன்) மக்களையும் படைத்து, இதனைக் கொண்டு முன்னேறுங்கள். இதுவே உங்களுக்கு (எதனையும் தரும்) கர்மதேனுவாக அமையட்டும்.

**ஸ்: தேவான்பாவயதானேன தே தேவா பாவயந்து வஹ ।**
**பரஸ்பரம் பாவயந்தஹ ச்ரேயஹ் பரமவாப் ஸ்யத ॥ 11**

கருத்துரை:
இந்த யக்ஞங்களினால் தேவர்களை திருப்தியடையச் செய்யுங்கள். அத்தேவர்களும் உங்களை (மழை இவற்றால்) திருப்தியடையச் செய்வாராக இவ்வாறாக ஒருவருக்கொருவர் திருப்தியடைவதால் மேலான நன்மையை பெறுவீர்

**ஸ்: இஷ்டான் போகான்ஹி வோ தேவா தாஸ்யந்தே**
**யஞ்ஞபாவிதாஹா ।**
**தைர்தத்தானப்ரதாயைப்யோ புங்க்தே ஸ்தேன ஏவஸஹ ॥ 12**

கருத்துரை:
மனிதன் ஆற்றும் யக்ஞங்களால் மகிழ்ந்து தேவர்கள் அவர்களுக்கு பிடித்தமான போகங்களைத் தருவார்கள். அவ்வாறு அவர்களால் தரப்பட்ட போக வஸ்துக்களை அவர்களுக்கு சமர்ப்பிக்காது எவன் அவற்றை அனுபவிக்கிறானோ அவன் திருடனேயாவான்.

**ஸ்: யக்ஞசிஷ்டாசினஹ ஸந்தோ முச்யந்தே**
**ஸர்வகில்பிஷைஹி ।**
**புஞ்ஜதே தே த்வகம் பாபா யே பசந்த்யாத்மகாரணாத் ॥ 13**

கருத்துரை:
யாகத்தில் மிஞ்சியதை உண்ணும் நல்லோர் (பகவத் அர்ப்பணம் செய்து) எல்லாப் பாவங்களினின்றும்

விடுபடுகிறார்கள். அவ்வாறின்றி எவர் தம் பொருட்டே சமைக்கிறார்களோ, அவர்கள் பாவத்தை புசிக்கிறார்கள்.

**ஸ்: அன்னாத் பவந்தி பூதானி பர்ஜன்யாதன்னஸம்பவஹ |**
**யக்ஞாத்பவதி பர்ஜன்யோ யக்ஞஹ் கர்ம ஸமுத்பவஹ || 14**

**ஸ்: கர்ம ப்ரஹ்மோத்பவம் வித்தி ப்ரஹ்மாக்ஷர ஸமுத்பவம் |**
**தஸ்மாத் ஸர்வகதம் ப்ரஹ்ம நித்யம் யக்ஞே**
**ப்ரதிஷ்டிதம் || 15**

கருத்துரை:
உயிர்கள் உணவிலிருந்து உண்டாகின்றன. உணவு மேகத்தினால் (மழையினால்) உருவாகிறது. மழை யக்ஞத்தால் உருவாகிறது. யக்ஞம் நற்காரியங்களால் உண்டாகிறது. நற்காரியங்கள் வேதங்களால் உண்டாகிறது. வேதம் எங்கும் நிறைந்துள்ள பரப்பிரம்மத்தினின்றும் உருவாகிறது. எனவே அப் பரப்பிரம்மத்தை எப்போதும் யக்ஞத்தில் நிலை பெற்றுள்ளதாக உணர்க.

ஸ்: **ஏவம் ப்ரவர்திதம் சக்ரம் நானுவர்தயதீஹ யஹ ।**
**அகாயுரிந்த்ரியாராமோ போகம் பார்த்த ஸ ஜீவதி ॥ 16**

*கருத்துரை:*
*அர்ஜுனா! இவ்வாறாக இயக்கப் பெறும் தர்மசக்கரத்தினை இவ்வுலகில் எவன் பின்பற்றாது வாழ்கின்றானோ, அவன் பாவம் நிறைந்த வாழ்க்கையை வாழ்ந்து, இந்திரியங்களுக்குட்பட்டு வீணான வாழ்க்கை வாழ்கிறான்.*

ஸ்: **யஸ்த்வாத்மரதிரேவ ஸ்யாதாத்மத்ருப்தஸ்ச மானவஹ ।**
**ஆத்மன்யேவ ச ஸந்துஷ்டஸ்தஸ்ய கார்யம் ந வித்யதே ॥ 17**

*கருத்துரை:*
*எவன் ஆத்மாவிலேயே நிலைபெற்று ஆத்மாவிலேயே திருப்தியடைந்து, ஆத்மாவிலேயே மகிழ்ச்சியடைந்து, இருக்கிறானோ, அத்தகைய ஆத்மஞானிக்கு செய்யக்கூடிய (நியமங்கள்) எதுவுமில்லை.*

**ஸ்: நைவ தஸ்ய க்ருதேனார்த்தோ நாக்ருதேனே கஸ்சன ।**
**ந சாஸ்ய ஸர்வபூதேஷு கஸ்சிதர்த்தவ்யபாச்ரயஹ ॥ 18**

கருத்துரை:
அத்தகைய ஆத்மாஞானிக்கு கர்மம் செய்வதால் பெறுதலும், செய்யாது இருத்தலால் இழத்தலும் எதுவுமில்லை. மேலும் எதைநாடியும் அவன் பிற உயிர்களைச் சார்ந்திருப்பதும் அவனுக்கில்லை.

**ஸ்: தஸ்மாதஸக்தஹ ஸததம் கார்யம் கர்ம ஸமாசர ।**
**அஸக்தோ ஹ்யாசரன் கர்ம பரமாப்னோதி பூருஷஹ ॥ 19**

கருத்துரை:
எனவே நீ பற்றற்று (பலனைக் கருதாது) செய்யத் தகுந்த காரியங்களை எப்போதும் நன்கு இயற்றுவாயாக, பற்றற்று கர்மாவைச் செய்து வரும் மனிதன் (முறையாக) மோக்ஷத்தை அடைவான்.

**ஸ்: கர்மணைவ ஹி ஸம்ஸித்திமாஸ்திதா ஜனகாதயஹ |**
**லோகஸங்க்ரஹமேவாபி ஸம்பச்யன் கர்துமர்ஹஸி || 20**

கருத்துரை:
ஜனகர் முதலானோர் நிஷ்காம கர்மத்தாலேயே மோக்ஷம் அடைந்தனர். மக்களைநன்னெறியில்நடத்தும் எண்ணத்திற்காகவாவது நீகர்மாக்களைச் செய்ய தகுதியுடையவனாகிறாய்.

**ஸ்: யத்யதாசரதி ச்ரேஷ்டஸ்தத்ததேவேதரோ ஜனஹ |**
**ஸ யத்ப்ரமாணம் குருதே லோகஸ்ததனுவர்ததே || 21**

கருத்துரை:
மேலோன் எதனைச் செய்கிறானோ, அதனையே மற்ற மனிதர்களும் பின்பற்றுகின்றனர். அவன் எதனைப் பிரமாணமாகக் கொள்கிறானோ அதனையே உலகம் அனுசரிக்கிறது.

**ஸ் ந மே பார்த்தாஸ்தி கர்தவ்யம் த்ரிஷு லோகேஷு கிஞ்சன ।**
**நானவாப்தமவாப்தவ்யம் வர்த ஏவ ச கர்மணி ॥ 22**

கருத்துரை:
அர்ஜுனா! இம் மூவுலகிலும் எனக்குச் செய்ய வேண்டிய கடமை ஏதும் இல்லை. மேலும் அடைய வேண்டியதோ, அடையத் தகுதியானதோ எதுவுமில்லை. ஆயினும் நான் கர்மம் செய்து கொண்டேயிருக்கிறேன்.

**ஸ் யதி ஹ்யஹம் ந வர்தேயம் ஜாது கர்மண்யதந்த்ரிஹ ।**
**மம வர்த்மானுவர்தந்தே மனுஷ்யாஹ் பார்த்த ஸர்வசஹ ॥23**

கருத்துரை:
அர்ஜுனா ! ஏனெனில் நான் அயர்வின்றி கர்மத்தில் ஈடுபடாவிடில், மனிதர்கள் என் வழியையே எப்போதும் பின்பற்றுவர்.

ஸ் உத்ஸீதேயுரிமே லோகா ந குர்யாம் கர்ம சேதஹம் ।
ஸங்கரஸ்ய ச கர்தா ஸ்யாமுபஹன்யாமிமாஹ் ப்ரஜாஹா ॥ 24

கருத்துரை:
நான் கர்மம் செய்யாவிட்டால் இவ்வுலகங்கள் அழிந்து போகும். ஜாதிக்கலப்புக்கு நானே கர்த்தாவாய் மக்களைக் கெடுத்தவன் ஆவேன்.

ஸ்: ஸக்தாஹ் கர்மண்யவித்வாம்ஸோ யதா குர்வந்தி பாரத ।
குர்யாத் வித்வாம்ஸ்ததாஸக்தஸ் சிகீர்ஷுர்லோக
ஸங்க்ரஹம் ॥ 25

கருத்துரை:
அர்ஜுனா, அஞ்ஞானிகள் பற்றுடையவராய் பலனைக் கருதி எவ்வாறு கர்மாக்களைச் செய்கின்றனரோ அவ்வாறே ஞானிகள் பலனைக் கருதாது பற்றற்றவராய்ச் செய்தல் வேண்டும்.

**ஸ்: ந புத்திபேதம் ஜனயேதக்ஞானம் கர்மஸங்கினாம் ।**
**ஜோஷயேத்ஸர்வகர்மாணி வித்வான்யுக்தய் ஸ்மாசரன் ॥ 26**

கருத்துரை:
ஞானியானவன் கர்மப்பற்றுள்ள அக்ஞானிகளிடத்து மனக்கலக் கத்தை உண்டு பண்ணலாகாது. எல்லாக் கர்மங்களையும் தானே நன்கு ஆற்றிக் கொண்டு மற்றவர்களும் அவனைப் பார்த்து அதில் ஈடுபடுமாறுச் செய்தல் வேண்டும்.

**ஸ்: ப்ரக்ருதேஹ் க்ரியமாணானி குணைஹ் கர்மாணி ஸர்வசஹ ।**
**அஹங்காரவிமூடாத்மா கர்தாஹமிதி மன்யதே ॥ 27**

கருத்துரை:
பிரகிருதியின் குணங்களால் எல்லாவித கர்மங்களும் நடந்து கொண்டு இருக்கையில், அகங்காரத்தால் மோகமடைந்தவன் நானே கர்த்தா என்று நினைக்கிறான்.

**ஸ்: தத்துவவித்து மஹாபாஹோ குணகர்மவிபாகயோஹோ ।
குணா குணேஷு வர்தந்த இதி மத்வா ந ஸஜ்ஜதே ॥ 28**

கருத்துரை:
பெருந்தோளுடைய அர்ஜுனா, குணங்களின் கர்மத்தின் பிரிவுகளைப்பற்றிய உண்மையினை அறிந்தஞானி, குணங்கள் (இந்திரியங்கள் முதலானவை) குணங்களில் (சப்தாதி விஷயங்களில்) பிரவர்த்திக்கின்றன என்று (ஆத்மஸ்வருபனான தனக்கு உண்மையில் அவற்றுடன் ஒருவித தொடர்புமில்லையென்றும்) கருதி கர்மங்களின் மீதான பற்றினை விடுத்து இருப்பான்.

**ஸ்: ப்ரக்ருதேர்குணஸம்மூடாஹ் ஸஜ்ஜந்தே குணகர்மஸு ।
தானக்ருத்ஸ்னவிதோ மந்தான்க்ருத்ஸ்னவின்ன
விசாலயேத் ॥ 29**

கருத்துரை:
இயற்கையின் ரஜோ முதலான குணங்களினால்

மோஹமடைந்தவராய், தேக, இந்திரியங்கள் முதலானவற்றின் தொழில்களின் மீது பற்று வைக்கின்ற அல்ப அறிவுடைய மந்த புத்தியினரைத் தெளிந்த அறிவுடையோர் குழப்பலாகாது.

ஸ்: **மயிஸர்வாணி கர்மாணி ஸம்ன்யஸ்யாத்யாத்மசேதஸா |**
**நிராசீர்நிர்மமோ பூத்வா யுத்யஸ்வ விகதஜ்வரஹ ||** 30

கருத்துரை:
எல்லா கர்மங்களையும் என்னிடத்து அர்ப்பித்து சித்தத்தில் ஆத்மாவில் வைத்து ஆசை, மமகாரம் இவையன்றி மனக் கொதிப்பின்றி யுத்தம் செய்.

ஸ்: **யே மே மதமிதம் நித்யமனுதிஷ்டந்தி மானவாஹா |**
**ச்ரத்தாவந்தோ அனஸூயந்தோ முச்யந்தே தே அபி**
**கர்மபிஹி ||** 31

கருத்துரை:
எனது இந்த கோட்பாட்டை எவர் மனிதர் சிரத்தையுடனும்

பொறாமையின்றியும் எப்போதும் பின்பற்றுகிறார்களோ அவர்களும் வினையினின்றும் விடுபடுகிறார்கள்.

**யே த்வேமததப்யஸூயந்தோ நானுதிகஷ்டந்தி மே மதம் |**
**ஸர்வக்ஞானவிமூடான்ஸ்தான்வித்தி நஷ்டான சேதஸஹ || 32**

*கருத்துரை:*
யவர் எனது இக் கொள்கையை (ஆன்மிக வழியை, நிஷ்காம கர்மயோக முறையை) இகழ்ந்து பின்பற்றுவதில்லையோ, அத்தகையோர் புத்தியில்லாதவர்களென்றும், சிறிதளவும் ஞானமற்றவர்களென்றும், கேடு கெட்டவர்கள் என்றும் அறிக.

**ஸத்ருசம் சேஷ்டதே ஸ்வஸ்யாஹ் ப்ரக்ருதேர்ஞான வானபி |**
**ப்ரக்ருதிம் யாந்தி பூதானி நிக்ரஹஹ் கிம் கரிஷ்யதி || 33**

*கருத்துரை:*
ஞானியாயினும் (சாஸ்திரபண்டிதன் ஆயினும் அல்லது உலக ஞானம் உடையவனாயினும்) தன் இயற்கைக்குத் தக்கபடி

நடந்து கொள்கிறார்கள். ஜன்ம ஜன்மாந்தரமாகத் தொடர்ந்து வரும் பண்பாட்டினால் ஏற்பட்ட இயற்கைக்கு உயிர்கள் தம் இயற்கையையொட்டியே நடக்கின்றன. எனவே இனி தடை செய்வதால் ஆவதென்ன?

**ஸ்: இந்திரியஸ்யேந்த்ரியஸ்யார்த்தே ராகத்வேஷௌ**
**வ்யவஸ்திதௌ ।**
**தயோர் ந வசமாகச்சேத்தௌ ஹ்யஸ்ய பரிபந்திநௌ ॥34**

*கருத்துரை:*
*ஒவ்வொரு இந்திரியத்திற்கும் அவற்றின் விஷயங்களில் (சப்தாதி) விருப்பு வெறுப்புகள் ஏற்படுகின்றன, அவ்விருப்பு வெறுப்புகளுக்கு எவரும் அடிமை ஆதல் கூடாது. அவை மனிதனின் பலமான எதிரிகள் அல்லவா?*

**ஸ்: ச்ரேயான் ஸ்வதர்மோ விகுணஹ் பரதர்மாத்ஸ் வனுஷ்டிதாத் ।**
**ஸ்வதர்மே நிதனம் ச்ரேயஹ் பரதர்மோ பயாவஹஹ ॥ 35**

கருத்துரை:
நன்கு இயற்றப்படும் பிறருடைய கர்மங்களை விட குணமற்றதாயினும் தன் தர்மமே சிறந்தது. தன் தர்மத்தில் மரணமாயினும் சிறந்ததே ஏனைய தர்மங்கள் பயம் தருவதாம்.

**ஸ்: அத கேன ப்ரயுக்தோ அம் பாபம் சரதி பூருஷஹ |**
**அனிச்சன்னபி வார்ஷ்ணேய பலாதிவ நியோஜிதஹ || 36**

கருத்துரை:
அர்ஜுனன் ஸ்ரீ கிருஷ்ணரை இவ்வாறு கேட்கிறான்: ஓ கிருஷ்ணா அப்படியானால் மனிதன் பாவம் செய்ய வேண்டும் என்ற இச்சையில்லாதிருப்பினும் பலவந்தமாக ஏவப்பட்டவனாய் எதனால் பாவம் செய்கிறான்?

**ஸ்: காம ஏஷ க்ரோத ஏஷ ரஜோகுணஸமுத்பவஹ |**
**மஹாசனோ மஹாபாப்மா வித்யேனமிஹ வைரிணம் || 37**

கருத்துரை:
ஸ்ரீ பகவான் சொன்னார் - ஏ அர்ஜுனா நீ கேட்ட இக்காரணம் ரஜோ குணத்திலிருந்து பிறந்த காமம். இதுவே க்ரோதமாக மாறுகின்றது. காமம் எவ்வளவு அனுபவித்தாலும் திருப்தியடைவதில்லை, மஹா பாவங்களுக்கு காரணமாகிறது. எனவே இதனை மோக்ஷ மார்க்கத்திற்கு எதிரியாகக் கொள்ள வேண்டும்.

**ஸ்: தூர்மேனாவ்ரியதே வஹ்னிர்யதாதர்சோ மலேன ச ।**
**யதோல்பேனாவ்ருதோ கர்பஸ்த்தா தேனேதமாவ்ருதம் ॥ 38**

கருத்துரை:
நெருப்பானது புகையினாலும் கண்ணாடி அழுக்கினாலும், சிசு கருப்பையினாலும் மூடப்பட்டிருப்பதைப் போன்று ஞானம் ஆசையினால் மூடப்பட்டிருக்கிறது.

**ஸ்: ஆவ்ருதம் ஞானமேதேன ஞானினோ நித்யவைரிணா ।**
**காமரூபேண கௌந்தேய துஷ்பூரேணானலேன ச ॥ 39**

கருத்துரை:
அர்ஜுனா! நிரப்பமுடியாததும் அக்னியைப் போன்று திருப்தியடையாததும், ஞானிக்கு நிரந்தர எதிரியானதும் ஆகிய இக் காமத்தினால் (ஆத்ம) ஞானம் மூடப்பட்டிருக்கிறது.

**ஸ்: இந்த்ரியாணி மனோபுத்திரஸ்யாதிஷ்டானமுச்சயதே |**
**ஏதைர்விமோஹயத்யேஷ ஞானமாவ்ருத்ய தேஹினம் || 40**

கருத்துரை:
இக்காமத்திற்கு, இந்திரியங்கள், மனம், புத்தி ஆகியவை இருப்பிடம் என்று சொல்லப்படுகிறது. இவைகளால் காமம் ஆத்ம ஞானத்தை மறைத்து மனிதனை மயக்குகின்றது.

**ஸ்: தஸ்மாத்த்வமிந்திரியாண்யாதௌ நியம்ய பரதர்ஷப |**
**பாப்மானம் ப்ரஜஹி ஹ்யேனம் ஞானவிக்ஞான**
**நாசனம் || 41**

கருத்துரை:
பரத வம்சத்து ச்ரேஷ்டனான ஓ அர்ஜுனா! எனவே முதலில் இந்திரியங்களை (சாஸ்திர, அனுபவ ஞானங்களை) இரண்டையும் நாசம் செய்வதும், பாவமே உருவானதும் ஆன இக்காமத்தினை அறவே ஒழித்துவிடு.

**ஸ்: இந்த்ரியாணி பதாண்யாஹுரிந்த்ரியேப்யஹ பரம் மனஹ |**
**மனஸஸ்து பரா புத்திர்யோ புத்தேஹ் பரதஸ்து ஸஹ || 42**

கருத்துரை:
இந்திரியங்கள் (உடலினும்) பெரிது. அவற்றினும் மேலானது மனம், மனதைவிட புத்தி மேலானது. புத்தியைவிட உயர்ந்தது ஆத்மா என்று பெரியோர்கள் சொல்வார்கள்.

**ஸ்: ஏவம் புத்தேஹ் பரம் புத்த்வா ஸம்ஸ்தப்யாத்**
**மானமாத்மனா ।**
**ஜஹி சத்ரும் மஹாபாஹோ காமரூபம் துராஸதம் ॥ 43**

கருத்துரை:
பெருந்தோளுடைய அர்ஜுனா! இவ்வாறாக புத்தியை விட மேலானதாக ஆத்மாவை அறிந்து, (விவேகத்துடன் கூடிய) புத்தியினால் மனதினை நன்றாக அடக்கி வெல்வதற்குக் கடினமான காமமெனும் எதிரியை நசிக்கச் செய்.

*****

## நான்காம் அத்தியாயம்
## ஞானயோகம்

**ஸ்: இமம் விவஸ்வதே யோகம் ப்ரோக்தவான ஹமவ்யயம் |**
**விவஸ்வான்மனவே ப்ராஹ மனுரிக்ஷ்வாகவே அப்ரவீத் || 1**

*கருத்துரை:*
அழிவற்ற இந்த நிஷ்காம கர்மயோகத்தினை (அதன் மூலம் பெறப்படும் ஞான நிஷ்டையை) முதலில் நான் சூரியனுக்குப் பகர்ந்தேன், சூர்யன் வைவஸ்வத மனுவிற்கு உபதேசித்தான், மனு இக்ஷ்வாகுவிற்கு உரைத்தான்.

**ஸ்: ஏவம் பரம்பராப்ராப்தமிமம் ராஜார்ஷயோ விதுஹு |**
**ஸ காலேனஹ மஹதா யோகோ நஷ்டஹ் பரந்தப || 2**

*கருத்துரை:*
ஏ அர்ஜுனா! இவ்வாறு பரம்பரையாக வந்த நிஷ்காம

கர்மயோகத்தினை ராஜ ரிஷிகள் அறிந்திருந்தார்கள். நெடுங்காலம் கடந்துவிட்டதால் அந்த யோகம் இப்போது இவ்வுலகில் காணப்படவில்லை (வழக்கில் இல்லை).

**ஸ்: ஸ ஏவாயம் மயா தே அத்ய யோகஹ் ப்ரோக்தஹ் புராதனஹ |**
**பக்தோ அஸி மே ஸகா சேதி ரஹஸ்யம் ஹ்யேததுத்தமம் || 3**

கருத்துரை:
நீ என் பக்தனாகவும், தோழனாகவும் இருக்கிறாய் ஆதலால், மிகவும் பழமையானதான நிஷ்காம கர்மயோகம் இப்போது மறுபடியும் உனக்கு இயம்பப்பட்டது. இது மேலானது என்றும் மிகவும் இரகசியமானது என்றும் அறிவாய்.

**ஸ்: அபரம் பவதோ ஜன்ம பரம் ஜன்ம விவஸ்வதஹ |**
**கதமேதத் விஜானீயாம் த்வமாதௌ ப்ரோக்தவானிதி || 4**

கருத்துரை:
(ஸ்ரீ கிருஷ்ணா) உம்முடைய ஜன்மம் இப்போதையது.

சூரியனின் ஜன்மம் மிகவும் புராதனமானது. அவ்வாறிருக்கையில் நீர் சூரியனுக்கு உபதேசித்தேன் என்ற விஷயத்தை நான் எவ்வாறு கிரகித்துக் கொள்ளுதல் இயலும்?

**ஸ்: பஹூனிமே வ்யதீதானி ஜன்மானி தவ சார்ஜுன ।**
**தான்யஹம் வேத ஸர்வாணி ந த்வம் வேத்த பரந்தப ॥ 5**

கருத்துரை:
எதிரிகளை வாட்டுகின்ற ஏ அர்ஜுனா! உனக்கும் எனக்கும் இதுவரை எத்துணை ஜன்மங்கள் கடந்து போயின. அவையனைத்தையும் நான் அறிகிறேன். நீ அறிய மாட்டாய்.

**ஸ்: அஜோ அபி ஸன்னவ்யயாத்மா பூதானாமீச்வரோ அபி ஸன் ।**
**ப்ரக்ருதிம் ஸ்வாமதிஷ்டாய ஸம்பவாம்யாத்மமாயயா ॥ 6**

கருத்துரை:
நான் பிறப்பற்றவன், அழிவற்றவன், எல்லா உயிர்களுக்கும் ஈசன் எனினும் என் பிரகிருதியினை வசப்படுத்திக் கொண்டு ஆத்ம மாயையினால் அவதரிக்கிறேன்.

ஸ்: யதா யதா ஹி தர்மஸ்ய க்லானிர் பவதி பாரத ।
அப்யுத்தானமதர்மஸ்ய ததாத்மானம் ஸ்ருஜாம்யஹம் ॥ 7

கருத்துரை:
அர்ஜுனா! எவ்வப்போது தர்மம் நிலைகுலைந்து, அதர்மம் தலைதூக்கு கின்றதோ அப்போது என்னை, நானே பிறப்பித்துக் கொள்கிறேன் (அவதரிக்கிறேன்).

ஸ்: பரித்ராணாய ஸாதூனாம் விநாசாய ச துஷ்க்ருதாம் ।
தர்மஸம்ஸ்தாபனார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே ॥ 8

கருத்துரை:
சாதுக்கள், சன்மார்க்க நெறியில் உள்ளோர் இவர்களைக் காப்பதற்கும், துன்மார்க்க நெறியில் உள்ள துஷ்டர்களை அழிப்பதற்கும், தர்மத்தை நன்கு நிலை நாட்டுவதற்கும் நான் யுகந்தோறும் அவதரிக்கிறேன்.

ஸ்: **ஜன்ம கர்ம ச மே திவ்ய மேவம் யோ வேத்தி தத்வதஹ |**
**த்யக்த்வா தேஹம் புனர்ஜன்ம நைதி மாமேதி ஸோ அர்ஜுன || 9**

*கருத்துரை:*
*அர்ஜுனா! எவன் இவ்வாறு என் திவ்யமான பிறப்பை, கர்மத்தைப் பற்றி உண்மையாக தெரிந்து கொள்கிறானோ, அத்தகையோன் மரணத்திற்குப் பின் மீண்டும், பிறவாது என்னை வந்தடைகிறான், (மோக்ஷத்தை அடைகிறான்).*

ஸ்: **வீ தராகபயக்ரோதா மன்மயா மாமுபாச்ரிதாஹா |**
**பஹவோ ஞானதபஸா பூதா மத்பாவமா கதாஹா || 10**

*கருத்துரை:*
*ஆசை, அச்சம், சினம் நீங்கியவர்களாய், என் வசமாய், என்னை அடைக்கலம் புகுந்து, ஞானத்தவத்தால் புனிதர்களாய் என் இயல்பை (மோக்ஷத்தை) எய்தினர்.*

**ஸ்: யே யதா மாம் ப்ரபத்யந்தே தாம்ஸ்ததைவ பஜாம்யஹம் |**
**மம வர்த்மானுவர்தந்தே மனுஷ்யாஹ் பார்த்த ஸர்வஹ || 11**

கருத்துரை:
ஏ அர்ஜுனா! எவர் என்னை எப்படி வழிபடுகிறாரோ அவர்க்கு நான் அப்படியே அருள் புரிகிறேன். மனிதர்கள் எல்லா விதத்திலும் யாண்டும் என் வழியையே பின்பற்றுகிறார்கள்.

**ஸ்: காங்க்ஷந்தஹ் கர்மணாம் சித்திம் யஜந்த இஹ தேவதாஹா |**
**க்ஷிப்ரம் ஹி மானுஷே லோகே ஸித்திர் பவதி கர்மஜா || 12**

கருத்துரை:
கர்மங்களின் பலனை விரும்புபவர்கள் இம்மையில் தேவதைகளை ஆராதிக்கிறார்கள். ஏனெனில் வையகத்தில் வினைப்பயன் விரைவில் வாய்க்கிறது.

**ஸ்: சாதுர்வர்ண்யம் மயா ஸ்ருஷ்டம் குணகர்மவிபாகசஹ |**
**தஸ்ய கர்தாரமபி மாம் வித்த்யகர்தாரமவ்யயம் || 13**

கருத்துரை:

பிரம்ம, க்ஷத்திரியர்கள் முதலான நான்கு வர்ணத்தினரை, சத்வம் முதலான குணங்களின் அக்குணங்களினால் செய்யப்படும் கர்மாக்களினாலும், வேறுபாட்டைக் கருதி என்னால் படைக்கப்பட்டது. அவற்றிற்கு நானே கர்த்தாவாயினும் (இயற்கைக்கப்பாற்பட்டவன் ஆதலால்) உண்மையில் நான் கர்த்தாவன்று (விகாரமற்றவன்) என்று அறிக.

**ஸ்:** **ந மாம் கர்மாணி லிம்பந்தி ந மே கர்மபலே ஸ்ப்ருஹா |**
**இதி மாம் யோ அபிஜானாதி கர்மபிர் ந ஸ பத்யதே ||** **14**

கருத்துரை:

என்னைக் கர்மங்கள் தொடுவதில்லை. எனக்கு கர்மபலத்தின் மீது ஆசையில்லை. இவ்வாறு என்னை அறிபவன் கர்மங்களால் பந்திக்கப் படுவதில்லை

**ஸ்:** **ஏவம் ஞாத்வா க்ருதம் கர்ம பூர்வைரபி முமுக்ஷுபிஹி |**
**குரு கர்மைவ தஸ்மாத்த்வம் பூர்வைஹ் பூர்வதரம் க்ருதம் || 15**

கருத்துரை;

(தான் உண்மையில் கர்த்தா அல்ல, தனக்கு கர்மபலத்தில் ஆசையில்லை - என்று) இவ்வாறு (இறைவனின் கர்ம ஆசரணையினால்) அறிந்து கொண்டு முன்பே எத்துணையோ முமுக்ஷுக்கள் நிஷ்காமமாக கர்மங்களைச் செய்து வந்துள்ளனர். எனவே (ஏ அர்ஜுனா) நீயும் முன்னோரைப் போல் புராதன நிஷ்காம கர்மத்தையே செய்வாயாக.

**ஸ்: கிம் கர்ம கிமகர்மேதி கவயோஅப்யத்ர மோஹிதாஹா ।**
**தத்தே கர்ம ப்ரவக்ஷ்யாமி யஜ்ஞாத்வா மோக்ஷ்யஸே**
**அசுபாத் ॥ 16**

கருத்துரை:

கர்மா எத்தகையது, அகர்மம் எத்தகையது என்ற இவ்விஷயத்தில் ஞானிகளே சரியாக அறிய முடியாமல் இருக்கின்றனர். எதனை அறியின் நீ சம்சார பந்தத்திலிருந்தும் விடுபடுவாயோ அத்தகைய கர்ம இரகசியத்தை உனக்கு இப்போது தெரிவிக்கிறேன்.

**ஸ்: கர்மணோ ஹ்யபி போத்தவ்யம் போத்தவ்யம் ச விகர்மணஹ ।**
**அகர்மணஸ்ச போத்தவ்யம் கஹனா கர்மணோ கதிஹி ॥ 17**

*கருத்துரை:*
*சாஸ்திரங்களால் விதிக்கப்பட்ட கர்மங்களையும், விலக்கப்பட்ட விகர்மங்களைப் பற்றியும், கர்மத்தை கடந்த நிலையையும் நன்றாக அறிந்து கொள்ள வேண்டும். ஏனெனில் கர்மத்தின் உண்மையான தத்துவம் மிகவும் ஆழமானது (அறிவதற்கு மிகக் கடினமானது)*

**ஸ்: கர்மண்யகர்ம யஹ் பச்யேதகர்மணி ச கர்ம யஹ |**
**ஸபுத்திமான் மனுஷ்யேஷு ஸயுக்தஹ் க்ருத்ஸன**
**கர்மக்ருத் || 18**

*கருத்துரை:*
*எவன் கர்மத்தில் அகர்மத்தையும், அகர்மத்தில் கர்மத்தையும் பார்க்கிறானோ, அவன் மனிதர்களுள் விவேகத்துடன் கூடியவன், யோகி. அவனே எல்லா கர்மங்களையும் செய்தவன் ஆவான்.*

**ஸ்: யஸ்ய ஸர்வே ஸமாரம்பாஹ் காமஸங்கல்பவர்ஜிதாஹ |**
**ஞானாக்னிதக்தகர்மாணம் தமாஹுஹ் பண்டிதம்**
**புதாஹா || 19**

கருத்துரை:
எவனது கர்மங்கள் எல்லாம் ஆசையும் சங்கற்பமும் அற்றனவோ, எவனது கர்மங்கள் ஞானத்தீயால் எரிக்கப்பட்டனவோ, அவனை பண்டிதன் என்று ஞானிகள் சொல்கிறார்கள்.

**ஸ்: த்யக்த்வா கர்மபலாஸங்கம் நித்யத்ருப்தோ நிராச்ரயஹ |**
**கர்மண்யபிப்ரவ்ருத்தோ அபி நைவ கிஞ்சித் கரோதி**
**ஸஹ || 20**

கருத்துரை:
எவன் வினைப்பயனில் பற்றற்றவனாய், எப்போதும் திருப்தியுடன், எதையும் சாராது இருக்கிறானோ, அவன், கர்மாக்களில் ஈடுபட்டாலும் சிறிதளவும் செய்யாதவனே ஆவான்.

**ஸ்: நிராசீர்யதசித்தாத்மா த்யக்தஸர்வபரிக்ரஹஹ |**
**சாரீரம் கேவலம் கர்ம குர்வன்னாப்னோதி கில்பிஷம் || 21**

கருத்துரை:
ஆசையற்றவனும், இந்திரியங்களைக் கட்டுப்படுத்தியவனும்,

உடமைகளைத் துறந்தவனும் ஆன மனிதன் சரீரத்தால் மட்டுமே வினையாற்றுபவன் பாவத்தை அடையமாட்டான்.

**ஸ்: யத்ருச்சாலாபஸந்துஷ்டோ த்வந்த்வாதீதோ விமத்ஸரஹ |**
**ஸமஹ ஸித்தாவஸித்தௌ ச க்ருத்வாபி ந நிபத்யதே || 22**

கருத்துரை:
தற்செயலாய்க் கிடைப்பதில் திருப்தியடைபவன், இருமைகளைக் கடந்தவன், பொறாமையில்லாதவன், பலனின் வெற்றி தோல்விகளில் சமபுத்தியுடன் (நடுவு நிலையில் நிற்பவன்), ஆனவன் கர்மம் செய்யினும் பந்தப்படுவதில்லை.

**ஸ்: கதஸங்கஸ்ய முக்தஸ்ய ஞானாவஸ்திதசேதஸஹ |**
**யக்ஞாயாசரதஹ கர்ம ஸமக்ரம் ப்ரவிலீயதே || 23**

கருத்துரை:
எதன்மீதும் பற்றில்லாது, விருப்பு வெறுப்பு, காமம் குரோதம் முதலான சம்சார பந்தங்களினின்றும் விடுபட்டவனாய்,

ஆத்மஞானத்திலேயே மனம் நிலைபெற்றவனாய் இறைவனுக்குப் பிடித்தமான (அல்லது சக உயிர்களின் நன்மைக்காக, தர்மத்திற்காக) கர்மாவைச் செய்பவனும் ஆன மனிதனின் கர்மாவானது முழுவதுமாக கரைந்து போகிறது. (பிறப்பெனும் பந்தமில்லாது போகிறது).

ஸ்: **ப்ரஹ்மார்ப்பணம் ப்ரஹ்மஹவிர் ப்ரஹ்மாக்னௌ**
**ப்ரஹ்மணாஹுதம் ।**
**ப்ரஹ்மைவ தேன கந்தவ்யம் ப்ரஹ்மகர்மஸமாதினா ॥ 24**

கருத்துரை:
யக்ஞத்தின் ஹோமசாதனங்கள், ஹோம திரவியங்கள், ஹோமாக்னி, ஹோமம் செய்பவன், ஹோமம் செய்யப்படுவது - ஆகிய அனைத்துமே பிரம்ம சொரூபங்களே எனும் ஏகாக்கிர சம்பாவத்துடன் யக்ஞாதி கர்மங்களைச் செய்பவன் பிரம்மத்தையே அடைவான்.

**ஸ்: தைவமேவாபரே யக்ஞம் யோகினஹ் பர்யுபாஸதே ।**
**ப்ரஹ்மாக்னாவபரே யக்ஞம்**
**யக்ஞேனைவோபஜுஹ்வதி ॥ 25**

*கருத்துரை:*
*சில யோகிகள் தேவதைகளுக்காக யாகங்களையே செய்கிறார்கள். இன்னும் சிலர் ஜீவபிரம்ம ஐக்கிய பாவனையில் ஜீவனைப் பரபிரம்மம் எனும் அக்னியில் ஹோமம் செய்கிறார்கள் (ஆஹுதியாக்குகிறார்கள்).*

**ஸ்: ச்ரோத்ராதீனீந்திரியாண்யன்யே ஸம்யமாக்னிஷு ஜுஹ்வதி ।**
**சப்தாதீன்விஷயானன்ய இந்திரியாக்னிஷு ஜுஹ்வதி ॥ 26**

*கருத்துரை:*
*சில்ர் செவி முதலான இந்திரியங்களை அடக்குதல் என்ற அக்னியிலும், சில்ர் சப்தாதி விஷயங்களை இந்திரியங்கள் என்ற அக்னியிலும் ஹோமம் செய்கிறார்கள்.*

**ஸ்: ஸர்வாணீந்திரியகர்மாணி ப்ராணகர்மாணி சாபரே ।**
**ஆத்மஸம்யமயோகாக்னௌ ஜுஹ்வதி ஞானதீபிதே ॥ 27**

கருத்துரை:
இன்னும் சிலர் இந்திரியங்களின் கர்மங்களையும், பிராண கர்மங்களையும், மனதை ஆத்மாவின் கண் அடக்குதல் என்ற ஞான ஒளி வீசும் யோகத்தீயில் ஆகுதியாகக் கொடுக்கின்றனர்.

ஸ்: **த்ரவ்யயக்ஞாஸ்தபோயக்ஞா யோகயக்ஞாஸ்ததாபரே ।**
**ஸ்வாத்யாய ஞானயக்ஞாஸ்ச யதயஹ ஸம்சிதவ்ரதாஹா ॥ 28**

கருத்துரை:
சிலர் பொருளைத் (திரவியங்களை) தானம் செய்தல், நல்ல காரியங்களில் செலவிடுதல் இவையே யக்ஞமாகக் கொண்டுள்ளனர். சிலர் தவமே யக்ஞமாகவும், இன்னும் சிலர் (பிராணயாமம் முதலான) யோகமே யக்ஞமாகவும் கொண்டுள்ளனர். அவர்கள் அனைவரும் தன்னடக்கமும், உறுதியான விரதமுடையவர்களாகவும் கருதப்படுவர்.

ஸ்: **அபானே ஜுஹ்வதி பிராணம் ப்ராணே அபானம் ததாபரே ।**
**ப்ராணாபானகதீ ருத்த்வா ப்ராணயாமபராயணாஹா ॥ 29**

கருத்துரை:

பிராணயாமத்தைப் பின்பற்றுவோராகிய சிலர் பிராண அபான வாயுக்களின் போக்கை (மார்க்கத்தை) கட்டுப்படுத்தி அபான வாயுவில் பிராணவாயுவை, பிராணவாயுவில் அபான வாயுவை ஹோமம் செய்கிறார்கள் (பூரகம், கும்பகம், ரேசகங்களை செய்கிறார்கள்).

**ஸ்: அபரே நியதாஹாராஃ ப்ராணான் ப்ராணேஷு ஜுஹ்வதி ।**
**ஸர்வே அப்யேதே யக்ஞவிதோ யக்ஞ க்ஷபிதகல்மஷாஹா ॥ 30**

கருத்துரை:

இன்னும் சிலர் ஆகார நியமத்தில் கட்டுப்பாடுடையவராய், பிராணன் முதலான வாயுக்களை பிராணவாயுவிலேயே ஹோமம் செய்கிறார்கள் (அல்லது இந்திரியங்களின் செயல்களை வசீக்ருதேந்திரியங்களில் இடுகின்றனர்) இவர்களும் யக்ஞத்தை அறிந்தவர்களாக, யக்ஞத்தினால் பாவம் நீங்கப் பெற்றவர்கள் ஆகிறார்கள்.

**ஸ்: யக்ஞசிஷ்டாம்ருதபுஜோ யாந்தி ப்ரஹ்ம ஸநாதனம் |**
**நாயம் லோகோ அஸ்த்யயக்ஞஸ்ய குதோ அன்யஹ்ற**
**குருஸத்தம || 31**

*கருத்துரை:*
*குருவம்சத்தில் சிறந்தவனான அர்ஜுனனே! (மேற் சொன்ன) யக்ஞங்களைச் செய்து அதில் எஞ்சும் அமுதினை உண்போர் அழியாப் பொருள் ஆகிய பிரம்மத்தை அடைகிறார்கள். யக்ஞம் செய்யாதவர்களுக்கு இவ்வுலகே இல்லையென்றால் பரலோகம் ஏது?*

**ஸ்: ஏவம் பஹுவிதா யக்ஞா விததா ப்ரஹ்மணோ முகே |**
**கர்மஜான்வித்தி தான்ஸர்வானேவம் ஞாத்வா**
**விமோக்ஷ்யஸே || 32**

*கருத்துரை:*
*இவ்வாறாக பலவிதமான யக்ஞங்களைக் குறித்து விரிவாக வேதத்தில் தெரிவிக்கப்பட்டிருக்கின்றன. அவை அனைத்தும்*

கர்மத்தினால் ஜனித்தவை என்று அறிவாய். அவ்வாறு அறியின் நீ விமுக்தியடைவாய்.

**ஸ்: ச்ரேயான்த்ரவ்யமாயத் யக்ஞாஜ்ஞானயக்ஞஹ் பரந்தப ।**
**ஸர்வம் கர்மாகிலம் பார்த்த ஞானே பரிஸமாப்யதே ॥ 33**

*கருத்துரை:*
*ஓ அர்ஜுனா! திரவியத்தால் சாதிக்கப்படும் யக்ஞத்தைவிட ஞான யக்ஞம் சிறந்தது, ஏனெனில் எல்லா கர்மங்களும் அழிவற்ற (பலனோடு கூடிய) ஞானத்தில்தான் முற்றுப் பெறுகின்றது. (மறைகிறது).*

**ஸ்: தத்வித்தி ப்ரணிபாதேன பரிப்ரச்னேன ஸேவயா ।**
**உபதே க்ஷ்யந்தி தே ஞானம் ஞானினஸ் தத்வதர்சினஹ ॥ 34**

*கருத்துரை:*
*(ஓ அர்ஜுனா) அத்தகைய ஞானத்தை நீ தத்துவ ஞானிகளிடம், சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து, சமயமறிந்து வினயத்துடன்*

கேட்டும், சேவைசெய்தும், அவர்களின் உதவியால் அறிவாய். அவர்கள் உனக்குத் தத்துவ உபதேசிப்பர்.

**ஸ்: யஜ்ஞாத்வா ந புனர்மோஹமேவம் யாஸ்யஸி பாண்டவ ।**
**யேன பூதான்யசேஷேண த்ரக்ஷ்யஸ்யாத்மன்யதோ மயி ॥ 35**

கருத்துரை:
ஏ அர்ஜுனா! எதனை அறிந்தால் மறுபடியும் இத்தகைய மோஹத்தை நீ அடையமாட்டாயோ; மேலும் எதனால் எல்லா பிராணி கோடிகளையும் உன்னிலும், என்னிடத்திலும் காண்பாயோ அத்தகைய ஞானத்தைத் தத்துவ அறிஞர்களிடத்தே அறிந்து கொள்வாய்.

**ஸ்: அபி சேதஸி பாபேப்யஹ் ஸர்வேப்யஹ் பாபக்ருத்தமஹ ।**
**ஸர்வம் ஞானப்லவேனைவ வ்ருஜினம் ஸந்தரிஷ்யஸி ॥ 36**

கருத்துரை:
(ஒருவேளை) பாவிகளனைவரையும் விட மிகுந்த பாவம்

செய்தவனாயினும், எல்லாப் பாவங்களையும் சேர்ந்தக் கடலை ஞானமெனும் தெப்பத்தாலேயே சுலபமாகக் கடப்பாய்.

**ஸ்:** **யதைதாம்ஸி ஸமித்தோ அக்னிர் பஸ்மஸாத் குருதே அர்ஜுன ।**
**ஞானாக்னிஹ் ஸர்வகர்மாணி பஸ்மஸாத் குருதே ததா ॥ 37**

*கருத்துரை:*
*அர்ஜுனா! நன்கு சுடர்விட்டு எரியும் தீயானது விறகுகளை எவ்வாறு சாம்பலாக்கி விடுகிறதோ, அவ்வாறே ஞானமெனும் அக்னி எல்லா கர்மங்களையும் சாம்பலாக்குகின்றது.*

**ஸ்:** **ந ஹி ஞானேன ஸத்ருசம் பவித்ரமிஹ வித்யதே ।**
**தத்ஸ்வயம் யோகஸம்ஸித்தஹ காலேனாத்மனி விந்ததி ॥ 38**

*கருத்துரை:*
*இவ்வுலகில் ஞானத்திற்கு ஈடானது எதுவுமில்லை. அத்தகைய ஞானத்தை (கர்ம) யோக சித்தியை அடைந்தவன் காலக்கிரமத்தில் தன் உள்ளத்திலேயே தானே அறிகிறான்.*

ஸ்: **ச்ரத்தாவான் லபதே ஞானம் தத்பரஹ் ஸம்யதேந்த்ரியஹ |**
**ஞானம் லபத்வா பராம் சாந்திமசிரேணாதிகச்சதி || 39**

*கருத்துரை:*
*(கு ந, சாஸ்திர வாக்கியங்களில்) சிரத்தையுடையவனாய் (ஆன்மிக சாதனையில்) ததேக நிஷ்டையுடையவனாய், இந்திரியங்களை நன்கு வென்றவனாய் உள்ள மனிதன் ஞானத்தை அடைகிறான், ஞானத்தினால் பரம சாந்தியை அதிவிரைவில் அடைகிறான்.*

ஸ்: **அக்ஞஸ்சாச்ரத்ததானஸ்ச ஸம்சயாத்மா விநச்யதி |**
**நாயம் லோகோ அஸ்தி ந பரோ ந ஸுகம்**
**ஸம்சயாத்மனஹ || 40**

*கருத்துரை:*
*ஞானமில்லாதவன், சிரத்தையில்லாதவன், சந்தேகமுடையவன் விநாசத்தையே அடைகிறான். சந்தேக எண்ணம் கொண்ட மனதுக்கு இகலோகமோ, பரலோகமோ, சௌக்கியமோ இல்லை.*

**ஸ்:** **யோகஸந்யஸ்தகர்மாணம் ஞானஸம்சின்னஸம்சயம் |**
**ஆத்மவந்தம் ந கர்மாணி நிபத்னந்தி தனஞ்ஜய || 41**

*கருத்துரை:*
*ஓ அர்ஜுனா! நிஷ்காம கர்ம யோகத்தினால் கர்மபலத்தைத் துறந்தவன், அல்லது அதனை ஈசுவரார்ப்பணம் செய்தவன், ஞானத்தினால் ஐயங்களை நீக்கியவன் ஆன ஆத்மாவில் நிலைத்திருப்பவனுக்கு (பிரம்ம ஞானிக்கு) கர்மங்கள் பந்தத்தை ஏற்படுத்துவதில்லை.*

**ஸ்:** **தஸ்மாதக்ஞானஸம்பூதம் ஹ்ருத்ஸ்தம் ஞானாஸினாத்மனஹ |**
**சித்த்வைனம் ஸம்சயம் யோகமாதிஷ்டோத்திஷ்ட பாரத || 42**

*கருத்துரை:*
*அர்ஜுனா! ஆகையால் உன் இதயத்தில் பீடித்திருக்கும், அஞ்ஞானத்தினால் ஏற்பட்ட ஐயங்களை, ஞானமெனும் வாளினால் வெட்டி, நிஷ்காம கர்மயோகத்தினைக் கைக்கொள்வாயாக! எழுந்திரு!*

*****

# ஐந்தாம் அத்தியாயம்
# கர்ம ஸந்யாஸ யோகம்

ஸ்: ஸந்யாஸம் கர்மணாம் கிருஷ்ண புனர் யோகம் ச சம்ஸஸி ।
யச்ச்ரேய ஏதயோரேகம் தன்மே ப்ரூஹி ஸுநிஸ்சிதம் ॥ 1

கருத்துரை
கிருஷ்ணா! வினையை (கர்மத்தை) கைவிடவும் கூறுகிறாய்,
பிறகு வினையை மேற்கொள் என்றும் அறிவுறுத்துகின்றாய்.
இந்த இரண்டு வழியில் எது சிறந்தது என்பதை எனக்கு
கூறுவாயாக.

ஸ்: ஸந்யாஸஹ் கர்மயோகஸ்ச நிச்ரேயஸகராவுபௌ ।
தயோஸ்து கர்மஸந்யாஸாத் கர்மயோகோ விசிஷ்யதே ॥ 2

கருத்துரை:
கர்மத்தியாகம் (ஞானயோகம்), கர்மயோகம் என்ற இரண்டும்
மோக்ஷத்தைத் தருபவையே. ஆயினும் இவ்விரண்டிலும் (ஆரம்ப
நிலையில்) கர்மத்தியாகத்தை விட, கர்மயோகமே சிறந்தது.

**ஸ்: ஜ்ஞேய ஸ நித்யஸந்யாஸீ யோ ந த்வேஷ்டி ந காங்க்ஷதி |**
**நிர்த்வந்த்வோ ஹி மஹாபாஹோ ஸுகம் பந்தாத்**
**ப்ரமுச்யதே || 3**

*கருத்துரை:*
*மிக்க புஜபலமுடைய அர்ஜுனா! எவன் (எந்த கர்மயோகி) எவற்றின் மீதும் வெறுப்புக் கொள்ளாது, எதனையும் விரும்பாது இருக்கின்றானோ, அத்தகையோன் எப்போதும் ஸந்நியாசியே (தியாகி) என்று அறிக, ஏனெனில் (விருப்பு வெறுப்பு முதலான) இருமைகளற்றவன் எளிதாக ஸம்ஸார பந்தத்திலின்றும் விடுபடுவான்.*

**ஸ்: ஸாங்க்யயோகௌ ப்ருதக்பாலாஹ ப்ரவதந்தி ந**
**பண்டிதாஹா |**
**ஏகமப்யாஸ்திதஹ ஸம்யகுபயோர்விந்ததே பலம் || 4**

*கருத்துரை:*
*(கர்மஸந்நியாஸத்தை விட) ஞானயோகம் கர்மயோகம் இவ்விரண்டும் வேறுவேறென்று (வெவ்வேறான பலனை) பாலகர்*

யென்று) விவேகமற்றவர்கள் கருதுகின்றனரேயன்றி, விவேகிகள் அல்ல. அவ்விரண்டிலும் எந்த வொன்றையாவது நன்கு அனுஷ்டித்தால் இரண்டின் பலனும் ஆன (மோக்ஷமெனும்) பதவியை மனிதன் அடைவான்.

**ஸ்: யத்ஸாங்க்யைஹ் ப்ராப்யதே ஸ்தானம் தத்யோகைரபி கம்யதே |**
**ஏகம் ஸாங்க்யம் ச யோகம் ச யஹ் பச்யதி ஸ பச்யதி || 5**

கருத்துரை:
ஞானயோகிகளால் எந்த நிலை (மோக்ஷம்) அடையப்படுகிறதோ, அந்நிலை கர்மயோகிகளாலும் அடையப்படுகிறது. ஞானயோகத்தையும், கர்மயோகத்தையும் ஒன்றாகக் (ஒரே பலனைத் தரக்கூடியதாக) கருதுபவனே உண்மையான பார்வை கொண்டவன் (அறிந்தவன்).

**ஸ்: ஸந்யாஸஸ்து மஹாபாஹோ துஹ்காமாப்துமயோகதஹ |**
**யோகயுக்தோ முனிர்ப்ரஹ்ம நசிரேணாதி கச்சதி || 6**

கருத்துரை:
தோள்வலிபடைத்த அர்ஜுனா (கர்ம சந்யாச யோகமான) ஞானயோகமாயினும் கர்மயோகமின்றிப் பெறுதல் மிகவும் கடினமானது. கர்மயோகத்துடன் கூடிய முனிவர்கள் விரைவில் (இலக்கினை) பிரமத்தை அடைகிறார்கள்.

**ஸ்: யோகயுக்தோ விசுத்தாத்மா விஜிதாத்மா ஜிதேந்த்ரியஹ |**
**ஸர்வபூதாத்மபூதாத்மா குர்வன்னபி ந லிப்யதே || 7**

கருத்துரை:
(நிஷ்காம) கர்ம யோகத்தினைப் பின்பற்றுபவனும், பரிசுத்தமான இதயமுடையவனும் நன்கு கட்டுப்படுத்தப்பட்ட மனமுடையவனும், இந்திரியங்களை வென்றவனும், எல்லா பிராணிகோடிகளிடமும் உள்ள ஆன்மாவும் தனது ஆன்மாவும் ஒன்றேயென்று அறிந்து கொண்டவனுமான மனிதன் கர்மாக்களைச் செய்து வந்தாலும் அதனால் கட்டுறான்.

**ஸ்: நைவ கிஞ்சித்கரோமீதி யுக்தோ மன்யேத தத்வவித் |**
**பச்யஞ் ச்ருண்வன் ஸ்ப்ருசஞ் ஜிக்ரன்னச்னன் கச்சன்**
**ஸ்வபஞ்ச்வஸன் || 8**

**ஸ்: ப்ரலபன் விஸ்ருஜன் க்ருஹ்ணன்னுன்மிஷந் நிமிஷன்னபி! |**
**இந்த்ரியாணீந்த்ரியார்த்தேஷு வர்தந்த இதி தாரயன் || 9**

*கருத்துரை:*
*தத்துவம் தெரிந்த யோகி (ஆன்மாவில் நிலைத்திருக்கும் சித்தம் கொண்டவன்) பார்க்கினும், கேட்கினும், தீண்டினும், வாசனை பார்க்கினும், சுவாசித்தாலும், பேசினாலும், விடுத்தாலும், பிடித்தாலும், கண்திறப்பினும், கண் மூடினாலும் பொறிகள் (இந்திரியங்கள்) (அவ்வவற்றின்) செயல்களில் பிரவர்த்திக்கின்றன என உறுதிப்படுத்திக் கொண்டு நான் எதனையும் செய்கிறேனில்லை என்று நினைப்பான். (அக்காரியங்களைத் தான் செய்வதாக நினையான்).*

**ஸ்: ப்ரஹ்மண்யாதாய கர்மாணி ஸங்கம் த்யக்த்வா கரோதி யஹ |**
**லிப்யதே ந ஸ பாபேன பத்மபத்ரமிவாம்பஸா || 10**

கருத்துரை:
எவனொருவன் தான் செய்யும் கர்மங்களை, இறைவனிடம் அர்ப்பித்து, பற்றுதலைத்துறந்து செய்கிறானோ, அத்தகையோன் தாமரை இலைத் தண்ணீரைப் போன்று, பாவத்தினால் பந்தப்படுவதில்லை.

**ஸ்: காயேன மனஸா புத்த்யா கேவலைரிந்திரியைரபி |**
**யோகினஹ் கர்ம குர்வந்தி ஸங்கம் த்யக்த்வாத்மசுத்தயே || 11**

கருத்துரை:
(நிஷ்காம கர்ம) யோகிகள் சித்த சுத்திக்காக, பற்றைத் துறந்து, சரீரத்தாலும், மனதாலும், புத்தியினாலும், இந்திரியங்களாலும் கர்மம் செய்கிறார்கள்.

**ஸ்: யுக்தஹ் கர்மபலம் த்யக்த்வாசாந்தி மாப்னோதி நைஷ்டிகீம் |**
**அயுக்தஹ் காமகாரேண பலே ஸக்தோ நிபத்யதே || 12**

*கருத்துரை:*
*யோகியானவன் (நிஷ்காமகர்மயோகி) கர்மாக்களின் பலனைவிடுத்து (சித்த சுத்தியினால்) ஆன்மநிட்டை சம்பந்தமான நிலையான சாந்தியை அடைகிறான். யோகியல்லாதவன் (பலனைக் கருதி கர்மாக்களைச் செய்கிறவன்) ஆசையினால் தூண்டப்பெற்று கர்ம பலனில் பற்றுக்கொண்டு பந்தத்தில் கட்டுப்படுகிறான்.*

**ஸ்: ஸர்வ கர்மாணி மனஸா ஸந்யஸ்யாஸ்தே ஸுகம் வசீ |**
**நவத்வாரே புரே தேஹீநைவ குர்வன்ன காரயன் || 13**

*கருத்துரை:*
*இந்திரியக்கட்டுப்பாடுடைய தேகியானவன் கர்மங்களனைத்தையும் மனத்தால் (பலனை) விலக்கிவிட்டு, எதுவும் செய்யாதவனாய், செய்விக்காதவனாய், ஒன்பது*

துவாரங்களையுடைய பட்டணமான தேகத்தில் நிம்மதியாக விற்றிருக்கிறான்.

**ஸ்: ந கர்த்ருத்வம் ந கர்மாணி லோகஸ்ய ஸ்ருஜதி ப்ரபுஹு |**
**ந கர்மபலஸம்யோகம் ஸ்வபாவஸ்து ப்ரவர்ததே || 14**

கருத்துரை:
பரமாத்மா ஜீவன்களுக்கு கர்த்ருத்வமோ, கர்மாக்களையோ, கர்மபலனையோ, அவற்றுடன் தொடர்பையோ ஏற்படுத்துவதில்லை, இவற்றை இயற்கையே (இயற்கையுடன் தொடர்புடைய ஜன்மத்தொடர்பே) அக்கர்த்ருத்வம் முதலானவற்றை ஏற்படுத்துகிறது.

**ஸ்: நாதத்தே கஸ்யசித் பாபம் ந சைவ சுக்ருதம் விபுஹு |**
**அக்ஞானேனாவ்ருதம் ஞானம் தேன முஹ்யந்தி ஜந்தவஹ || 15**

கருத்துரை:
பரமாத்மா எவரின் பாவத்தையோ, புண்ணியத்தையோ வாங்கிக்

கொள்வதில்லை. அஞ்ஞானத்தினால் ஞானம் மூடப்பட்டிருக்கின்றது. அதனால் ஜீவர்கள் மயக்கமடைகிறார்கள் (பிரமை).

ஸ்: **ஞானேன து ததக்ஞானம் யேஷாம் நாசிதமாத்மனஹ |**
**தேஷாமாதித்யவஜ்ஞானம் ப்ரகாசயதி தத்பரம் ||** 16

கருத்துரை:
ஆத்ம ஞானத்தினால் எவரின் அஞ்ஞானம் அழிக்கப்படுகின்றதோ, அவரின் ஞானம் சூரியனைப் போல பரப்பிரம்ம சொரூபத்தைப் பிரகாசிக்கச் செய்கின்றது. (சுஸ்வரூப அனுபவத்தை பெறச் செய்கின்றது).

ஸ்: **தத்புத்தயஸ் ததாத்மானஸ் தந்நிஷ்டாஸ் தத்பராயணாஹா |**
**கச்சந்த்யபுனராவ்ருத்திம் ஞான நிர்தூதகல்மஷாஹா ||** 17

கருத்துரை:
பிரம்மத்தில் புத்தியை வைப்பவர், மனதை நிலைநிறுத்தியவர்,

பிரம்ம நிட்டையுடையவர், அவரையே புகலிடமாகக் கொண்டு சரணடைந்தவர், ஞானத்தால் பாவங்களை தொலைத்தவர் ஆகியோர் மீண்டும் பிறவாத (புனர் ஜன்மம் இல்லாத) நிலையான மோக்ஷபதவியை அடைகிறார்கள்.

**ஸ்: வித்யா வினாயஸம்பன்னே ப்ராஹ்மணே கவிஹஸ்தினி |**
**சுனி சைவ ச்வபாகே ச பண்டிதாஹ் ஸமதர்சினஹ || 18**

கருத்துரை:
கல்வி, பணிவு இவற்றுடன் கூடிய பிராம்மணனிடத்தும், பசுவினிடத்தும், யானையிடத்தும், நாயினிடத்தும், நாயினைச் சமைத்து உண்ணும் சண்டாளனிடத்தும் சமதிருஷ்டியுடையவரே (அவர்களைச் சமமாகக் கருதுபவரே) ஞானிகள் (ஆத்ம பாவம் உடையவர்) என்று சொல்லப்படுகின்றனர்.

**ஸ்: இஹைவ தைர்ஜிதஹ் ஸர்கோ யேஷாம் ஸாம்யே ஸ்திதம் மனஹ |**
**நிர்தோஷம் ஹி ஸமம் ப்ரஹ்ம தஸ்மாத் ப்ரஹ்மணி தே ஸ்திதாஹ || 19**

கருத்துரை:
எவரின் மனம் சமநோக்குடன் (சலனமற்ற சமநிலையில், அல்லது எல்லாப் பிராணிகளிடத்தும் ஆன்மாவைக் காணுவதில்) நிலைத்திருக்கிறதோ, அத்தகையோர் இம்மையிலேயே பிறப்பிறப்பெனும் சம்சாரத்தை வென்றவராகின்றனர். ஏனெனில் பிரம்மம் தோஷமற்றது, சமமானது. எனவே (சமத்துவத்தில் நிலை பெற்றவர்) அவர்கள் பிரம்மத்தில் நிலைத்தவரேயாவர்.

**ந ப்ரஹ்ருஷ்யேத் ப்ரியம் ப்ராப்ய நோத்விஜேத் ப்ராப்ய சாப்ரியம் ।**
**ஸ்திரபுத்திரஸம்மூடோ ப்ரஹ்மவித் ப்ரஹ்மணி ஸ்திதஹ ॥ 20**

கருத்துரை:
நிலையான புத்தியுடையவனும், மோகமற்றவனும், பிரம்மத்தில் நிலைத்தவனும் ஆன பிரம்மஞானி தனக்குப் பிரியமானதை அடைந்தபோது மகிழ்ச்சியோ, பிரியம் இல்லாததை அடைந்தபோது துக்கமோ அடைவதில்லை.

**ஸ்: பாஹ்யஸ்பர்சேஷ்வஸக்தாத்மா விந்தத்யாத்மனி யத்ஸுகம் ।**
**ஸ ப்ரஹ்மயோகயுக்தாத்மா ஸுகமக்ஷயமச்னுதே ॥ 21**

கருத்துரை:
வெளிப்புறத்தே சப்தாதி விஷயங்களில் பற்றில்லாதவன் ஆத்மாவில் எத்தகைய (நிரதிசய) சுகம் உள்ளதோ, அத்தகைய சுகத்தையே அடைகிறான். அவன் பிரம்மநிட்டையெனும் சமாதியில் நிலைத்தவனாய் (பிரம்மத்தில் திளைத்தவனாய்) அழியாத சுகத்தை அடைகிறான்.

**ஸ்: யே ஹி ஸம்ஸ்பர்சஜா போகா துஹ்கயோனய ஏவ தே ।**
**ஆத்யந்தவந்தஹ் கௌந்தேய ந தேஷு ரமதே புதஹ ॥ 22**

கருத்துரை:
அர்ஜுனா! (இந்திரிய) விஷயங்களில் தோன்றிய போகங்களே துக்கத்திற்கு காரணமானவைகளாம். அவை சிறிது காலமே நிலைப்பவை எனவே ஞானியர் அவற்றினால் இன்புறுவதில்லை (பற்றுக்கொள்வதில்லை).

**ஸ்: சக்னோதீஹைவ யஹ் ஸோடும் ப்ராக்சரீரவிமோக்ஷணாத் |**
**காமக்குரோதோத்பவம் வேகம் ஸ யுக்தஹ் ஸ ஸுகீ நரஹ || 23**

*கருத்துரை:*
எவனொருவன் இம்மையில் (இப்பிறவியிலேயே) சரீரத்தை விடுவதற்கு முன்பே காமக்குரோதங்களின் வேகத்தை அடக்குவதற்கு இயன்றவனாகின்றானோ, அவனே யோகி, சுகவான் ஆகிறான்.

**ஸ்: யோ அந்தஹ் ஸுகோ அந்தராராமஸ் ததாந்தர்ஜ்யோதிரேவ யஹ |**
**ஸயோகீ ப்ரஹ்மநிர்வாணம் ப்ரஹ்மபூதோ அதிகச்சதி || 24**

*கருத்துரை:*
எவனொருவன் உள்ளிருக்கும் ஆத்மாவிலேயே சுகித்து, ஆத்மாவில் கிரீடித்து, அதனாலேயே உள்ளொளி காண்கிறானோ, அத்தகைய யோகி தானே பிரம்மமாகி பிரம்ம நிர்வாணத்தை யடைகிறான்.

**ஸ்: லபந்தே ப்ரஹ்மநிர்வாணம் ருஷயஹ் க்ஷீணகல்மஷாஹா |**
**சின்னத்வைதா யதாத்மானஹ் ஸர்வபூதஹிதே ரதாஹா || 25**

*கருத்துரை:*
*பாவங்களை களைந்து, ஐயங்களை அகற்றி, இந்திரியங்களை அடக்கி, எல்லா உயிர்களின் நன்மையில் மகிழ்வடையும் ரிஷிகள் பிரம்ம நிர்வாணம் அடைகிறார்கள்.*

**ஸ்: காமக்ரோதவியுக்தானாம் யதீனாம் யதசேதஸாம் |**
**அபிதோ ப்ரஹ்ம நிர்வாணம் வர்த்ததே விதிதாத்மனாம் || 26**

*கருத்துரை:*
*காமக்குரோதங்களற்றவரும், மனக்கட்டுப்பாடுடையவர்களும், ஆத்ம தத்துவத்தையறிந்தவர்களும் ஆன சந்நியாசிகளுக்கு பிரம்ம ஸாயுஜ்யம் (மோக்ஷம். பிரம்மானந்தம்) யாண்டும், எப்போதும் இருக்கின்றது. (சரீரம் இருக்கும் போதும், இல்லாதிருக்கும் போதும் எப்போதும்).*

**ஸ்: ஸ்பர்சான் க்ருத்வா பஹிர்பாஹ்யாம்ஸ் சக்ஷுஸ்கை வாந்தரே**
**ப்ருவோஹோ ।**
**ப்ராணாபானௌ ஸமௌ க்ருத்வா**
**நாஸாப்யந்தரசாரிணௌ ॥ 27**

**ஸ்: யதேந்த்ரியமனோபுத்திர் முனிர்மோக்ஷபராயன ।**
**விகதேச்சாபயக்ரோதோ யஹ் ஸதாமுக்தஏவஸஹ ॥ 28**

*கருத்துரை:*
*எவனொருவன் வெளியில் உள்ள சப்தஸ்பர்சாதி விஷயங்களை, வெளியிலேயே நிறுத்தி, (உள்ளே நுழையவிடாமல் தடுத்து), கண்களை புருவங்களுக்கிடையில் நிறுத்தி, மூக்கில் இயங்கும் பிராண, அபான வாயுக்களை சமப்படுத்தி, இந்திரியங்கள், மனம், புத்தி இவைகளையடக்கி, ஆசை, அச்சம், சினம் இவைகளை விட்டு, மோக்ஷத்தை நாடியிருப்பவனாய் (ஆத்ம) மன சீலனாய் இருக்கின்றானோ. அத்தகையோன் எப்போதும் முக்தனேயாவான்.*

**ஸ்: போக்தாரம் யக்ஞதபஸாம் ஸர்வலோகமஹேச்வரம் |**
**ஸுஹ்ருதம் ஸர்வபூதானாம் ஞாத்வா மாம்**
**சாந்திம்ருச்சதி || 29**

கருத்துரை:

யக்ஞம், தவம் இவைகளின் பலனை அனுபவிப்பவன் என்றும், எல்லா உலகங்களுக்கும் ஈசுவரன் (தலைவன், ஆள்பவன்) என்றும், எல்லா உயிர்களின் நன்மையைக் கோருபவன் என்றும் என்னை அறிந்த மனிதன் சாந்தியை அடைகிறான்.

****

# ஆறாம் அத்தியாயம்
# ஆத்ம ஸம்யம யோகம்

**ஸ்: அனாச்சரிதஹ் கர்ம பலம் கார்யம் கர்ம கரோதி யஹ |**
**ஸ ஸந்யாஸீ ச யோகீ ச ந நிரக் நிர் ன சாக்ரியஹ || 1**

*கருத்துரை*
*எவன் தான் செய்ய வேண்டிய காரியங்களை கர்ம பலனைக் கருதாது செய்கின்றானோ, அவனே சந்நியாசியும், யோகியும் ஆவான். அக்னி ஹோத்திரத்தை நிறுத்தியவனும், கர்மத்தை விட்டவனும் சந்நியாசியோ, யோகியோ அல்லன்.*

**ஸ்: யம் ஸந்யாஸமிதி ப்ராஹுர் யோகம் தம் வித்தி பாண்டவ |**
**ந ஹ்யஸந்ய ஸ்தஸங்கல்போ யோகீ பவதி கஸ்சன || 2**

*கருத்துரை:*
*அர்ஜுனனே! எதனைச் சந்நியாசம் என்கிறார்களோ அதனையே யோகம் என்றறிக, ஏனெனில் (காமம் முதலான) சங்கல்பங்களைத் துறவாதவன் எவனும் யோகியாவதில்லை.*

**ஸ்:** **ஆருருக்ஷோர் முனேர்யோகம் கர்மகாரண முச்யதே |**
**யோகாரூடஸ்ய தஸ்யைவ சமஹ காரண முச்யதே || 3**

கருத்துரை:
யோகத்தினை அடைய விரும்பும், முனிவனுக்கு கர்மா சாதனமென்றும், அதனை நன்கு பயின்று அடைந்தவனுக்கு மாத்திரமே செயலின்மை சாதனமென்றும் சொல்லப்படுகிறது.

**ஸ்:** **யதா ஹிநேந்த்ரியார்த் கேஷு ந கர்ம ஸ்வனுஷஜ்ஜதே |**
**ஸர்வ ஸங்கல்ப ஸ்நயாஸீ யோகாரூட ஸ்ததோச்யதே || 4**

கருத்துரை:
எப்போது சப்தாதி விஷயங்களிலும், கர்மங்களிலும் கருத்து வைக்காது, எல்லா சங்கல்பங்களையும் விட்டொழிக்கிறானோ, அப்போது மனிதன் யோகாரூடன் எனப்படுகிறான்.

**ஸ்:** **உத்தரே தாத் மானாம் நாத்மான மவஸாத யேத் |**
**ஆத்மைவ ஹ்யாத்மனோ பந்துராத்மைவ ரிபுராத்மனஹ || 5**

கருத்துரை:
தன்னைத்தானே உயர்த்திக் கொள்ள வேண்டும். தன்னை இழிவுறுத்திக் கொண்டு கீழ்நிலையை அடையக் கூடாது. ஏனென்றால் தானே தனக்கு நண்பன் (இந்திரியங்களை வென்றால்), (இல்லையெனில்), தனக்குத்தானே பகைவன்.

ஸ்: பந்துராத் மாத் மனஸ்தஸ்ய யேனாத்மை வாத்மனா ஜிதஹ ।
அனாத்மன ஸ்து சத்ருத்வே வர்தே தாத்மைவ சத்ருவத் ॥ 6

கருத்துரை:
எவன் (விவேக வைராக்கியத்தினால்) தன் மனதினைத் தானே வெல்கிறானோ, அவனது ஜயிக்கப்பட்ட மனம் அவனுக்கு உறவாகிறது. (உதவுகிறது) அவ்வாறின்றி மனதினை வெல்லாவிடின், அதுவே பகையாகிறது. (கேடு செய்கிறது).

ஸ்: ஜிதாத்மனஹ ப்ரசாந்தஸ்ய பரமாத்மா ஸமாஹிதஹ ।
சீதோஷ்ண ஸுகதுக்கேஷு ததா மானாபமான யோஹ ॥ 7

*கருத்துரை:*

*மனதை வென்றவனும், பரம சாந்தியுடனும் இருப்பவனும் ஆன மனிதனுக்கு குளிர், வெப்பம், இன்ப துன்பங்களிலும், அவ்வாறே மான, அவமானங்களிலும் பரமாத்மா அனுபவம் சிதறிவிடாமல் நிலைத்திருக்கும் (அல்லது அத்தகையோனுக்கு குளிர் வெப்பங்களிலும் மனம் மட்டும் ஆத்மானுபவத்திலேயே இருக்கும்)*

**ஸ்: ஞான விக்ஞானத் ருப்தாத்மா கூடஸ்தோ விஜிதேந்திரியஹ |**
**யுக்த இத்யுச்யதே யோகீ ஸமலோஷ்டாச்ம காஞ்சனஹ || 8**

*கருத்துரை:*

*சாஸ்திர ஞானம், அனுபவ ஞானங்களால் திருப்தியடைந்த மனம் உடையவனும், அசையாத மனம் கொண்டவனும், இந்திரியங்களை நன்கு வென்றவனும், மண்கட்டி, கல், பொன் என்ற மூன்றையும் சமமாக நோக்குபவனும் ஆன யோகி, யோகாரூடன் (யோகத்தில் நிலை பெற்றவன். ஆத்மானுபவம் பெற்றவன்) எனப்படுகிறான்.*

**ஸ்: ஸுஹ்ருன் மித்ரார்யுதாஸீன மத்யஸ்த த்வேஷ்ய பந்துஷு |**
**ஸாதுஷ்வபி ச பாபேஷுஸமபுத்திர் விசிஷ்யதே || 9**

*கருத்துரை:*
*பலனை எதிர்பாராது நன்மையையே நாடுபவரிடத்தும், பலனை எதிர்பார்த்து உதவி செய்வோரிடத்தும், எதிரிகளிடத்தும், சமநிலையில் இருப்பவன், மத்யஸ்தர், வெறுக்கத் தக்கவர், (விரோதிகள்), சுற்றத்தார், நல்லோர், பாவிகள் இவர்களனைவரிடத்தும் சம பாவம் கொண்டவனே மேலோன் (சிறந்தவன்).*

**ஸ்: யோகீ யுஞ்ஜீத ஸததமாத்மானம் ரஹஸி ஸ்திதஹ |**
**ஏகாகீ யதசித்தாத்மா நிராசீபரிக்ரஹஹ || 10**

*கருத்துரை:*
*(தியான யோகத்தினை பயிலக் கருதும்) யோகீ தனியான இடத்தில், தனிமையில் இருந்து, மனம், தேகம், இந்திரியங்களைத் தன்வயப் படுத்திக் கொண்டு, ஆசைகள் ஏதுமின்றி, பிறரிடமிருந்து*

எதனையும் பெறாது எப்போதும் மனதை ஆன்மாவிலேயே நிலை நிறுத்தவேண்டும்.

ஸ்: **சுசௌ தேசே ப்ரதிஷ்டாப்ய ஸ்திர மாஸனமாத் மனஹ |**
**நாத்யுச்சித்ரம் நாதிநீசம் சைலாஜின குசோத்ரம் ||** 11

ஸ்: **தத்ரைகாக்ரம் மனஹ க்ருத்வா யத சித்தேந்திரிய க்ரியஹ |**
**உபவிச்யாஸனே யுஞ்ஜ்யாத் யோக மாத்ம விசுத்தயே ||** 12

கருத்துரை:
தூய்மையான இடத்தில், அதிக உயரமில்லாததும், மிகத் தாழ்ந்து இல்லாததும், கீழே தர்ப்பை, அதன் மீது தோல் (மான் அல்லது புலித்தோல்), அதன் மீது துணியால் ஆன, அசைவற்ற ஆசனத்தில் (பீடம்) மீதமர்ந்து, மனத்தை ஒருமைப்படுத்தி, இந்திரியங்கள் இவற்றின் செயல்களை அடக்கி, அந்தக்கரண தூய்மைக்காக (பரமாத்ம) தியானத்தினைப் பயிற்சி செய்தல் வேண்டும்.

ஸ்: **ஸமம் காயசிரோக்ரீவம் தாரயன்னசலம் ஸ்திரஹ |**
**ஸம்ப்ரேக்ஷ்ய நாஸிகாக்ரம் ஸ்வம் திசஸ்சான வலோகயன் ||** 13

**ஸ்: ப்ரசாந்தாத்மா விகதபீர் ப்ரஹ்மசாரி வ்ரதே ஸ்திதஹ |**
**மனஹ் ஸம்யம்ய மச்சித்தோ யுக்த ஆஸீத மத்பரஹ || 14**

கருத்துரை:

(தியானம் செய்பவன்) தேகம், தலை, கழுத்து இவற்றை உறுதியாக அசையாது நிறுத்தி, உறுதியாக இருந்து, திசைகளைப் பாராது, நாசி முனையை நோக்கியிருந்து. அமைதியான மனமுடையவனாய், அச்சத்தை யகற்றி, பிரம்மச்சாரி விரத நிஷ்டையில் இருந்து, மனத்தை நன்கு கட்டுப்படுத்தி, என்னிடத்தே சித்தத்தை வைத்து, என்னையே பரகதியென்று நம்பி, ஸமாதி (தியான) யுக்தனாய் இருத்தல் வேண்டும்.

**ஸ்: யுஞ்ஜன்னேவம் ஸ்தாத்மானம் யோகீ நியதமானஸஹ |**
**சாந்திம் நிர்வாண பரமாம் மத்ஸம்ஸ்தாம மதிகச்சதி || 15**

கருத்துரை:

மனக்கட்டுப்பாடுடைய யோகி, இவ்வாறாக எப்போதும் மனதை ஆத்ம தியானத்தில் நிறுத்தி, என்னிடத்துள்ள (என்

சொரூபமானதும்), மோக்ஷத்திலே முற்றுப்பெறுவதும் (பரமானந்த ரூபமானதும்) ஆன சாந்தியை அடைகிறான்.

**ஸ: நாத்யச்னதஸ்து யோகோஅஸ்தி ந சைகாந்த மனச்னதஹ |**
**நசாதி ஸ்வப்ன சீலஸ்ய ஜாக்ரதோ நைவ சார்ஜுன || 16**

கருத்துரை:
அர்ஜுனா! இந்த தியான யோகமானது அதிகமாக உண்பவனுக்கும், அறவே உண்ணாதவனுக்குக் கூடுவதில்லை. அவ்வாறே மிகப்பட உறங்குபவனுக்கும், மிகைப்பட விழித்திருப்பவனுக்கும் யோகம் கூடுவதேயில்லை.

**ஸ: யுக்தாஹார விஹாரஸ்ய யுக்த சேஷ்டஸ்ய கர்மஸு |**
**யுக்தஸ்வப்னாவ போதஸ்ய யோகோ பவதி துக்கஹா || 17**

கருத்துரை:
மிதமாய் உண்டு, உடற்பயிற்சி செய்வோனுக்கு, கர்மங்களையும்

அளவுடன் செய்து, உறக்கத்திலும் விழிப்பிலும் முறையாக மிதமாக இருப்பவனுக்கு, யோகம், (ஜனன மரணம்) முதலான சம்சார துக்கங்களைப் போக்குவதாக உள்ளது.

**ஸ்: யதா விநியதம் சித்தமாத்மன்யேவா வதிஷ்டதே ।**
**நிஸ்ப்ருஹ ஸ்ப்ருஷஹ ஸர்வ காமேப்யோ யுக்த இத்யுச்யதே**
**ததா ॥ 18**

கருத்துரை:
எப்போது மனம் நன்கு அடக்கப்பட்டு, ஆன்மாவிலேயே நிலைக்கின்றதோ, மேலும் எப்போது யோகி எல்லாவிதமான ஆசைகளினின்றும் விடுபடுகிறானோ, அப்போதே அவன் யோகசித்தியை அடைந்தவன் (சமாதி யுக்தன்) என்று சொல்லப் படுகிறான்.

**ஸ்: யதா தீபோ நிவாதஸ்தோ நேங்கதே ஸோபமா ஸ்ம்ருதா ।**
**யோகினோ யதசித்தஸ்ய யுஞ்ஜதோ யோக மாத் மன ஹ ॥ 19**

*கருத்துரை:*

*காற்று வீசாத இடத்தில் உள்ள தீபம் எவ்வாறு அசையாது சலனமின்றி இருக்கிறதோ, அவ்வாறே ஆத்ம தியானத்தைப் பயிலுகின்ற யோகியின் அடங்கிய மனதும் சலனமின்றி இருக்கும். ஆகவேதான் சலனமற்ற மனதிற்குக் காற்றில்லாத இடத்தில் வைக்கப்பட்ட தீபம் உபமானமாகச் சொல்லப்படுகின்றது.*

**ஸ்: யத்ரோ பரமதே சித்தம் நிருத்தம் யோக சேவயா |**
**யத்ர சைவாத் மனாத்மானம் பச்யன் னாத்மணி துஷ்யதி || 20**

**ஸ்: ஸுகமாத்யந்திகம் யந்தத்புத்தி க்ராஹ்ய மதீந்த்ரியம் |**
**வேத்தி யத்ர சைவாயம் ஸ்திதஸ் சலதி தத்வத ஹ ||  21**

**ஸ்: யம் லப்தவா சாபரம் லாபம் மன்யதே நாதிகம் ததஹ |**
**யஸ்மின்ஸ்திதோ ந துக்கேன குருணாபி விசால்யதே || 22**

**ஸ்: தம் வித்யாத்துக்க ஸம்யோக வியோகம் யோக ஸம்ஜிதம் ।
ஸ நிஸ்சயேன யோகிதவ்யோ யோகோ அநிர்விண்ண
சேதஸா ॥ 23**

கருத்துரை:
யோகாப்பியாசத்தால் அடக்கப்பெற்ற மனம் எப்போது அமைதி அடைகிறதோ, எப்போது (தூய்மையான) மனதினால் ஆத்மாவைக் கண்டு (அனுபவித்துக் கொண்டு) யோகி தன்னிலேயே ஆனந்தத்தைக் காண்கின்றானோ, எங்கிருப்பினும், யோகி இந்திரியங்களுக்குப் புலப்படாததும் (நிர்மலமான) புத்தியினால் கிரகிக்கப்படுவதும், முடிவில்லாததும் ஆன சுகத்தினை அனுபவிக்கிறானோ, மேலும் தன் அனுபவத்தினால் சிறிதளவும் அசைவற்றிருக்கிறானோ, எதனை அடைந்த பின்பு ஏனைய லாபங்களை அதனினும் மேலாகக் கருதுவதில்லையோ, எதில் நிலைத்திருந்து மிகப் பெரிய துக்கத்தினால்கூட அசைவதில்லையோ, துக்கம் சிறிதளவேனும், இல்லாத அந்த நிலையையே யோகம் (ஆத்ம ஐக்கியம், ஆத்ம சாட்சாத்காரம்)

என்றறிதல் வேண்டும். அத்தகைய ஆத்ம சாட்சாத்காரமான யோகத்தினை துக்கத்தினால் கலப்புறாத திரமான மனத்தினால் ஊக்கத்துடன் செயல்பட்டு சாதித்தல் வேண்டும்.

**ஸ்: ஸங்கல்ப ப்ரபவான் காமான்ஸ்த்யக்த்வா ஸர்வான சேஷதஹ |**
**மனஸை வேந்த்ரியக்ராமம் வினியமிய ஸமந்ததஹ || 24**

**ஸ்: சனைஹசனைரு பரமேத் புத்தியா த்ருதிக்ருஹீதயா |**
**ஆத்ம ஸம்ஸ்தம் மனஹ க்ருத்வா ந சிஞ்சிதபி சிந்தயேத் || 25**

கருத்துரை:
எண்ணத்தினால் (சங்கற்பத்தினால்) ஏற்படும் ஆசைகளனைத்தையும் முழுவதும் விடுத்து, மனதினால் இந்திரியங்களை நான்கு பக்கங்களிலிருந்தும், நன்கு அடக்கி, தைரியத்துடன் கூடிய புத்தியினால் மெல்ல மெல்ல வெளி உலகிலிருந்தும் அம் மனத்தினை மாற்றி அந்தரங்கத்தில் உள் மனதில் ஆற அமரச் செய்ய வேண்டும். மேலும் மனத்தினை

ஆன்மாவில் நிலை நிறுத்தி ஆன்மாவைத் தவிர வேறு எதனைப் பற்றியும் சிந்திக்காது இருத்தல் வேண்டும்.

**ஸ்: யதோ யதோ நிஸ்சரதி மனஸ் சஞ்சல மஸ்திரம் |**
**ததஸ்ததோ நியம்யைத தாத்மன்யேவ வசம் நயேத் || 26**

கருத்துரை:
சபலத்துடன் கூடியதும், நிலையற்றதுமான மனத்தினை எங்கெங்கு (எவ்வெவ் விஷயங்களில்) சஞ்சரிக்கின்றதோ அங்கிருந்து அதனை அடக்கிக் கொணர்ந்து ஆன்மாவிலேயே நிலைநிறுத்துதல் வேண்டும். ஆன்மாவின் வசத்தில் ஒப்படைத்தல் வேண்டும்.

**ஸ்: ப்ரசாந்தமனஸம் ஹ்யேனம் யோகினம் ஸுகமுத்தமம் |**
**உபைதி சாந்தரஜஸம் ப்ரஹ்மபூதம கல்மஷம் || 27**

கருத்துரை:
மிகச் சாந்தமான மனத்தையுடைய, ரஜோகுண விகாரமற்ற,

பாவங்களற்ற, பிரம்மரூபத்தையடைந்த யோகியை மிக உத்தமமான சுகம் (ஆத்மானந்தம்) வந்தடைகிறது. (அவ்வாறு அடைதல் சாஸ்திரங்களில் காணலாகும் என்பது பொருள்).

**ஸ்: யுஞ்ஜன்னேவம் ஸதாத்மானம் யோகீ விகத கல்மஷஹ |**
**ஸுகேன ப்ரஹ்ம ஸம்ஸ்பர்ச மந்யந்தம் ஸுகமச்னுதே || 28**

கருத்துரை:
இவ்வாறு மனத்தினை எப்போதும் ஆத்மாவிலேயே நிறுத்திக் குற்றமற்றவனான யோகி பிரம்மானுபவமான பரமசுகத்தை எளிதாக அடைகிறான்.

**ஸ்: ஸர்வ பூதஸ்தமாத்மானம் ஸர்வபூதானி சாத்மனி |**
**ஈக்ஷதே யோகயுக்தாத்மா ஸர்வத்ர ஸமதர்சனஹ || 29**

கருத்துரை:
யோகத்தில் உறுதிபெற்று எங்கும் சமதிருஷ்டியுடையவன் தன்னை எல்லா உயிர்களிடத்தும், எல்லா உயிர்களைத் தன்னிடத்தும் காண்கிறான்.

**ஸ்: யோ மாம் பச்யதி ஸர்வத்ர ஸர்வம் சமயிபச்யதி ।**
**தஸ்யாஹம் ந ப்ரணச்யாமி ஸசமே ந ப்ரணச்யதி ॥ 30**

*கருத்துரை:*
*எவனொருவன் எல்லா உயிர்களிடத்தும் என்னைக் காண்கிறானோ, மேலும் என்னை எல்லாவற்றிலும் காண்கிறானோ அவன் காட்சியினின்று நான் மறைவதில்லை; அவனும் என் காட்சியினின்று மறைவதில்லை.*

**ஸ்: ஸர்வபூதஸ்திதம் யோமாம் பஜத்யேகத்வா மாஸ்திதஹ ।**
**ஸர்வதா வர்தமானோஅபி ஸயோகீ மயிவர்ததே ॥ 31**

*கருத்துரை:*
*எவன் எல்லா உயிர்களிலுமிருக்கிற என்னை வேற்றுமையின்றி, அனைத்தும் பிரம்மமே என்கிற உறுதியுடன் என்னை போற்றிச் சேவிக்கும் யோகி எந்நிலையில் எப்பாங்கில் இருப்பினும் (சமாதி நிஷ்டையிருந்தாலும், அல்லது செயலாற்றிக் கொண்டிருப்பினும்) என்னிடத்திலேயே (ஆத்மாவிலேயே) இருப்பவன் ஆகிறான்.*

**ஸ்: ஆத்மௌபம்யேன ஸர்வத்ர ஸமம்பச்யதி யோ அர்ஜுன ।**
**ஸுகம் வாயதிவா துக்கம் ஸ யோகீ பரமோ மதஹ ॥ 32**

கருத்துரை:
ஓ அர்ஜுனா! எல்லா உயிர்களின் சுகத்தையும், துக்கத்தையும் தன்னுடையதாகவே எண்ணி, தன்னையே உவமையாகக் காண்பவன் பரமயோகியெனக் கருதப்படுகிறான்

**ஸ்: யோஅயம் யோகஸ்த்வயா ப்ரோக்தஹ ஸாம்யேன மதுசூதன ।**
**ஏதஸ்யாஹம் ந பச்யாமி சஞ்சலத்வாத் ஸ்திதம் ஸ்திராம் ॥ 33**

கருத்துரை:
ஏ கிருஷ்ணா! மனம் சலனமற்றதாக இருப்பின் சித்திக்கும் என்று நீ சொன்ன இந்த யோகத்தின் நிலையானதன்மை அலைகின்ற என் மனதிற்குப் புரிபடவில்லை.

**ஸ்: சஞ்சலம் ஹி மனஹ க்ருஷ்ண ப்ரமாதி பலவத் த்ருடம் ।**
**தஸ்யாஹம் நிக்ரஹம் மன்யே வாயோரிவ ஸுதுஷ்கரம் ॥ 34**

கருத்துரை.

கிருஷ்ணா! மனம் சலனமுடையதும், கலக்கம் தரக் கூடியது என்றும், பலமுடையது என்றும், அடங்காதது என்றும் அறிகிறேன். எனவே அதனைக் கட்டுவது காற்றை அடக்குவதைப் போல மிக்கக் கடினமானதாக நான் கருதுகிறேன்.

**ஸ்: அஸம்சயம் மஹாபாஹோ மனோ துர்நிக்ரஹம் சலம் ।**
**அப்யாஸேன து கௌந்தேய வைராக்யேண ச க்ருஹ்யதே ॥ 35**

கருத்துரை:

சிறந்த தோள்வலியுடைய அர்ஜுனா! மனத்தினைக் கட்டுப்படுத்துதல் கடினமே, மேலும் அது சஞ்சலமானதே. இதில் எத்தகைய ஐயமும் இல்லை. ஆயினும் பயிற்சியினாலும், வைராக்கியத்தினாலும் அதனைக் கட்டுப்படுத்த இயலும்.

**ஸ்: அஸம்யதாத்மணா யோகோ துஷ்ப்ராப இதிமே மதிஹ ।**
**வச்யாத்மனாது யததா சக்யோ அவாப்து முபாயதஹ ॥ 36**

கருத்துரை:
மனதை அடக்காதவன் யோகத்தினை அடைய முடியாது என்பது என் கருத்து. தன்வயப்பட்ட மனத்துடன் முயற்சி செய்பவனுக்கே அது அடையக்கூடியது.

**ஸ்: அயதிஹ ச்ரத்தயோபேதோ யோகாச்சலித மானஸஹ ।**
**அப்ராப்ய யோகஸம்ஸித்திம் காம் கதிம் க்ருஷ்ண கச்சதி ॥ 37**

கருத்துரை:
கிருஷ்ணா! சிரத்தையுடன் கூடியவனாயினும், முயற்சிக் குறைவால் யோகத்தினின்றும் மனம் தவறியவன், யோகம் நிறைவேறாது எந்த கதியினை அடைகிறான்?

**ஸ்: கச்சின்னோபய விப்ரஷ்ட ஸ்சின்னா ப்ரமிவ நச்யதி ।**
**அபரதிஷ்டோ மஹாபாஹோ விமூடோ ப்ரஹ்மண: பதி ॥ 38**

கருத்துரை:
பெருந்தோளுடைய ஸ்ரீ கிருஷ்ணா! பிரம்மமார்க்கத்தில்.

மோசமடைந்த மூடன் இகபரம் இரண்டுமிழந்து சிதறிய மேகம் போல் அழிந்து போகிறானல்லவா?

**ஸ்: ஏதன்மே ஸம்சயம் க்ருஷ்ண சேத்துமர்ஹஸ்ய சேஷதஹ |**
**த்வதன்யஹ ஸம்சயஸ்யாஸ்ய சேத்தா ந ஹ்யுபபத்யதே || 39**

கருத்துரை:
ஸ்ரீ கிருஷ்ணா! இந்த சந்தேகத்தினை முழுமையாகத் தொலைப்பதற்கு நீயே தகுந்தவன். உன்னைத் தவிர வேறொருவரும் இதனை போக்க இயலாது.

**ஸ்: பார்த்த நைவேஹ நாமுத்ர விநாசஸ் தஸ்ய வித்யதே |**
**ந ஹி கல்யாண க்ருத்கஸ் சித்துர் கதிம் தாத கச்சதி || 40**

கருத்துரை:
அர்ஜுனா! அத்தகையே யோகத்தினின்றும் வழுவியவர்களுக்கு இவ்வுலகிலும், மேலுலகிலும் அழிவென்பதில்லை. நலஞ்செய்வோன் எவரும் துர்கதியடைவதில்லையப்பா!

**ஸ்: ப்ராப்ய புண்யக்ருதாம் லோகானுஷித்வா சாஸ்வதீஹி**
**ஸமாஹ் |**
**சுசீனாம் ஸ்ரீ மதாம் கேஹே யோகப் ப்ரஷ்டோ**
**அபிஜாயதே || 41**

கருத்துரை:
யோகத்தினின்று வழுவிய (மரணத்திற்குப் பின்) புண்யாத்மா மேலுலகை அடைந்து, அங்குப் பல வருடங்கள் வாழ்ந்திருந்து, இறுதியில் நன்நெறியாளர்களான செல்வம் நிறைந்த இல்லத்தில் பிறக்கிறான்.

**ஸ்: அதவா யோகினாமேவ குலே பவதி தீமாதாம் |**
**எதத்தி துர்பதரம் லோகே ஜன்மயதீ த்ருசம் || 42**

கருத்துரை:
அல்லது (உத்தம யோகியானவர்) ஞானத்துடன் கூடிய வம்சத்திலேயே பிறக்கிறான். இவ்வாறான பிறவி உலகில் மிக மிக பெறுதற்கரியதாகும்.

**ஸ்: தத்ர தம் புத்திஸம் யோகம் லபதே பௌர் வதே ஹிகம் |**
**யததே ச ததோ பூயஹ ஸம்ஸித்தௌ குருநந்தன || 43**

*கருத்துரை:*
*அர்ஜுனா! அவ்வாறு அவன் யோகிகளின் வம்சத்தில் பிறந்து முன் பிறவியின் தேகத் தொடர்பால் அத்தகைய யோக சாதனை அறிவைத் திரும்பவும் பெறுகிறான். அத்தகைய பண்பாட்டினால் அவன் முழுமையான யோக நிலையை அடை வதற்கு மறுபடியும் தீவிரமாக முயலுகிறான்.*

**ஸ்: பூர்வாப்யாஸேன தேனைவ ஹ்ரியதே ஹ்யவ சோ அபி ஸஹ |**
**ஜிக்ஞாஸேரபி யோகஸ்ய சப்தப்ரஹ்மாதி வர்ததே || 44**

*கருத்துரை:*
*அவன் (யோக விரஷ்டன்) யோக அப்பியாயசத்திற்குத் தானே நிச்சயித்துக் கொள்ளாவிட்டாலும் முன் பிறவியில் செய்த பயிற்சியினால் யோக சாதனைக்கே இழுக்கப்படுகிறான்.*

யோகத்தினை ஆராய்ச்சி செய்யும் தத்வ ஆராய்ச்சியாளான் கூட வேதத்தைக் கடப்பவனாகிறான்.

ஸ்: **ப்ரயத்னாத்யத மானஸ்து யோகீ ஸம்சுத்த கில்பிஷஹ |**
**அநேக ஜன்ம ஸம்ஸித்தஸ்த தோ யாதி பராம் கதிம் || 45**

கருத்துரை:
ஈடுபாட்டுடன் முயற்சிக்கின்ற யோகியானவன் பாவங்களற்றவனாய், பல பிறவிகளாகத் தொடர்ந்து செய்யப்பட்டு வந்த பயிற்சியினால் யோக சித்தியடைந்தவனாய். அதன்பின் மிக உத்தமமான கதியினை (மோட்சத்தினை) அடைகிறான்.

ஸ்: **தபஸ்விப்யோ அதிகோ யோகீ ஞானிப் யோஅபி மதோ அதிகஹ |**
**கர்மிப்யஸ்சாதிகோ யோகீ தஸ்மாத் யோகீ பவார்ஜுன || 46**

*கருத்துரை:*

*அர்ஜுனா! யோகியானவன் தவசிகளைக்காட்டிலும், சாஸ்திர ஞானம் உடையவர்களைக் காட்டிலும், காமிய கர்மங்கள் செய்பவர்களைக் காட்டிலும் மேலானவன் என்று கருதப்படுகிறான். எனவே நீ யோகியாக ஆவாய்.*

ஸ்: **யோகினா மபி ஸர்வேஷாம் மத் கதேனாந்தராத்மனா |**
**ச்ரத்தாவான் பஜதே யோமாம் ஸமே யுக்த தமோமதஹ || 47**

*கருத்துரை:*

*யோகிகள் அனைவரிலும் எவன் என்னிடத்து மனத்தை நிறுத்தி, சிரத்தையுடன் என்னைத் தியானிக்கிறானோ அவனே மிகவும் சிறந்தவன் என்பது என் கருத்து.*

******

## ஏழாம் அத்தியாயம்
# விஞ்ஞான யோகம்

**ஸ்: மய்யாஸக்த மனாஹ் பார்த்த யோகம் யுஞ்ஜன் மாதச்ரயஹ |**
**அஸம்சயம் ஸமக்ரம் மாம் யதா ஞாஸ்யஸி தச்சருணு || 1**

கருத்துரை:
ஸ்ரீ பகவான் சொன்னார் - அர்ஜுனா! என்னிடத்தே இசைந்த மனத்தினனாய், என்னையே அடைக்கலமாய்க் கொண்டு யோகத்தினை அனுசரித்து ஐயத்திற்கிடமின்றி முழுமையாக என்னை அறிந்து கொள்ளும் முறையைக் கேள்.

**ஸ்: ஞானம் தே அஹம் ஸவிக்ஞான மிதம் வக்ஷ்யாம் யசேஷதஹ |**
**யஜ்ஞாத்வா நேஹ பூயோ அந்யஜ்ஞா த்வயம் வசிஷ்யதே || 2**

கருத்துரை:
எதனை அறிந்திருந்தால் மறுபடியும் இவ்வுலகில் அறிய வேண்டியது வேறொன்று மிருந்திராதோ, அத்தகைய

அனுபவபூர்வமான ஞானத்தை முழுமையாக உனக்கு அளிக்கிறேன்.

**ஸ்: மனுஷ்யாணாம் ஸஹஸ்ரேஷு கஸ்சித் யததி ஸித்தயே |**
**யததாமபி ஸித்தானாம் கஸ்சின்மாம் வேத்தி தத்வதஹ || 3**

கருத்துரை:
பல்லாயிரக்கணக்கான மனிதர்களுள் ஏதோ ஒரு சிலரே மோட்சப்பதவியை அடைவதற்கு முயல்கின்றனர். அவ்வாறு முயற்சி செய்யும் பலரில் எவனோ ஒருவனே என்னை உண்மையில் அறிகிறான்.

**ஸ்: பூமிரா போஅனலோ வாயுஹ்கம் மனோ புத்திரேவச |**
**அஹங்கார இதீயம் மே பின்னா ப்ரக்ருதிரஷ்டதா || 4**

கருத்துரை:
நிலம், நீர், நெருப்பு. காற்று, வானம், மனம். புத்தி, அஹங்காரம் என எட்டுவிதமாக என் பிரகிருதி பிரிவுபட்டிருக்கிறது.

**ஸ்: அபரேய மிதஸ்த வன்யாம் ப்ரக்ருதிம் வித்தி மே பராம் |**
**ஜீவ பூதாம் மஹாபாஹோ யயேதம் தார்யதே ஜகத் || 5**

கருத்துரை:
பெருந்தோள் வலியுடைய அர்ஜுனா! இந்த (அபரா) பிரகிருதி மிகவும் கீழானது. இதைவிட வேறான, இவ்வுலகனைத்தையும் தாங்கக் கூடிய, உயிர் ஆவதும் ஆகிய வேறொரு பிரகிருதியை (பரா பிரகிருதியை) மேலானதாக அறிவாயாக.

**ஸ்: ஏதத் யோனீனி பூதானி ஸர்வாணீ த்யுபதாரய |**
**அஹம் க்ருத்ஸ்னஸ்ய ஜகதஹ ப்ரபவஹ ப்ரலய ஸ்ததா || 6**

கருத்துரை:
(ஜடம், சேதனமான) எல்லா பூதங்களும் இவ்விரண்டு (பரா, அபரா) இயற்கைகளினாலேயே தோன்றுகின்றன என்று அறிவாயாக. (இவ்விரண்டு பிரகிருதிகளின் மூலமே) நானே இவ்வுலகமனைத்தின் தோற்றத்திற்கும், அழிவிற்கும் காரணமானவன்.

ஸ்: **மத்தஹ பரதரம் நான்யத் சிஞ்சிதஸ்தி தனஞ்ஜய ।**
**மயி ஸர்வமிதம் ப்ரோதம் ஸுத்ரே மணிகணா இவ ॥ 7**

கருத்துரை:
அர்ஜுனா! என்னைவிட மேலானது வேறு எதுவும் இல்லை. நூலிலே மணிகள் போன்று இவ்வுலகமனைத்தும் என்மீது கோர்க்கப் பட்டிருக்கின்றன.

ஸ்: **ரஸோ அஹமப்ஸு கௌந்தேய ப்ரபாஸ்மி சசிஸுர்யயோஹ ।**
**ப்ரணவஹ ஸர்வ வேதேஷு சப்தஹகே பௌருஷம் ந்ருஷு ॥ 8**

கருத்துரை:
அர்ஜுனா! நான் நீரில் சுவையாகவும் சந்திர சூரியர்களிடத்தில் ஒளியாகவும், எல்லா வேதங்களிலும் ஓங்காரமாகவும். ஆகாசத்தில் சப்தமாகவும், மனிதர்களில் ஆண்மையாகவும் இருக்கிறேன்.

ஸ்: **புண்யோ கந்தஹ ப்ருதிவ்யாம்ச தேஜஸ்சாஸ்மி விபாவஸௌ ।**
**ஜீவனம் ஸர்வ பூதேஷு தபஸ்சாஸ்மி தபஸ்விஷு ॥ 9**

கருத்துரை:
(மேலும் நான்) மண்ணில் நறுமணமாகவும், அக்னியில் சுடராகவும், எல்லா உயிர்களிலும் உயிராகவும், தபஸ்விகளுக்குள் தபஸாகவும் நான் இருக்கிறேன்.

**ஸ்: பீஜம் மாம் ஸர்வபூதானாம் வித்தி பார்த்த ஸநாதனம் |**
**புத்திர் புத்திமதாமஸ்மி தேஜஸ் தேஜஸ்வினா மஹம் || 10**

கருத்துரை:
அர்ஜுனா! என்னை எல்லாவித உயிர்களின் நிலைபேறுடைய வித்தாக அறிக. மேலும், புத்திமான்களின் புத்தியாகவும், தீரர்களின் தைரியமாகவும் நானே இருக்கிறேன்.

**ஸ்: பலம் பலவதாமஸ்மி காமராக விவர்ஜிதம் |**
**தர்மா விருந்தோ பூதேஷு காமோ அஸ்மி பரதர்ஷப || 11**

கருத்துரை:
பரத குல சிரேஷ்டனே! நான் பலவான்களிடத்து காமம் நீங்கப்

பெற்ற பலமாகவும், உயிர்களிடத்து தர்மத்துக்கு முரண்படாத ஆசையாகவும் இருக்கிறேன்.

ஸ்: **யே சைவ ஸாத்விகா பாவா ராஜாஸாஸ் தாம ஸாஸ்சயே |**
**மத்த ஏவேதி தான் வித்தி நத்வஹம் தேஷுதே மயி ||** 12

*கருத்துரை:*
*சத்வ ரஜோ, தமோ குணங்களால் உண்டான பொருள்கள் (அல்லது இயல்புகள்) எவை உள்ளனவோ அவை என்னால் ஏற்பட்டவை என்று அறிக. ஆயின் நான் அவற்றில் இல்லை. அவை என்னிடத்து உள்ளன. (நான் அவற்றிற்கு வசப்பட்டவன் அல்லன். அவை என் வசத்தில் இருக்கின்றன என்பது பொருள்)*

ஸ்: **த்ரிபிர் குணமயைர் பாவைரேபிஹ் ஸர்மிதம் ஜகத் |**
**மோஹிதம் நாபிஜானாதி மாமேப்யஹ் பரமவ்யயம் ||** 13

*கருத்துரை:*
*இங்குச் சொல்லப்பட்ட மூன்று விதமான சத்வ, ரஜோ, தமோ*

குணங்களின் விகாரங்களான இயற்கையின் இயல்பாய் இவ்வுலகமனைத்தும் மயக்கம் அடைந்து (அஜிவேகம்) அக்குணங்களுக்கு அப்பாற்பட்ட, அழிவற்ற என்னை அறிய இயலாதிருக்கின்றனர்.

**ஸ்: தைவீ ஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா ।**
**மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாமேதாம் தரந்தி தே ॥ 14**

கருத்துரை:
ஏனெனில், இறை சம்பந்தமானதும் திரிகுணங்களால் ஆகியதுமாகிய என் மாயை (தேவ மாயை) தாண்டுவது மிகவும் கடினமானது. (ஆயினும்) எவர் என்னையே அடைக்கலம் அடைகின்றனரோ அவர் மாயையைத் தாண்ட வியலும்.

**ஸ்: ந மாம் துஷ்க்ருதினோ மூடாஹ் ப்ரபத்யந்தே நரதாமாஹ் ।**
**மாய யாப்ஹ்ருத ஞானா ஆஸுரம் பாவமாச்ரிதாஹ் ॥ 15**

கருத்துரை:
பாவம் செய்வோர், மூடர்கள், மாயையினால் அபகரிக்கப்பட்ட ஞானம் உடையவர்கள், அசுர இயல்புடையோர், ஆகிய மனிதர்கள் என்னைப் போற்றுவதில்லை.

**ஸ்: சதுர்விதா பஜந்தே மாம் ஜனாஹ் ஸுக்ருனோ ர்ஜுன ।
ஆர்தோ ஜிக்ஞாஸுரர்த்தார்த்தீ ஞானீச பரதர்ஷப ॥ 16**

கருத்துரை:
பரத வம்சத்து சிறந்தோனான அர்ஜுனா! ஆபத்தில் இருப்பவன், இறைவனை அறிதல் வேண்டுமென்ற ஞான வேட்கையுடையவன், செல்வத்தை விரும்புவோன் (ஆத்ம) ஞானம் உடையவன் என்ற இந்நான்கு விதமான புண்ணியாத்மாக்களாகிய மக்கள் என்னைச் சேவிக்கிறார்கள்(போற்றுகிறார்கள்).

**ஸ்: தேஷாம் ஞானீ நித்யயுக்த ஏகபக்திர் விசிஷ்யதே ।
ப்ரியோ ஹி ஞானினோ அத்யர்த்தமஹம் ஸ ச மம ப்ரியஹ் ॥ 17**

கருத்துரை:

அவர்கள் நால்வரில் தினமும் பரமாத்மாவுடன் கூடியிருக்கிற வனிடத்தே மாறாத பக்தி பூண்ட ஞானி மிகச் சிறந்தவன். அத்தகைய ஞானிக்கு என்னிடத்தே மிகுந்த பிரியம் உண்டு. எனக்கு அவன் மீது பிரியம்.

**ஸ்: உதாராஹ்ற ஸர்வ ஏனவதே ஞானீ த்வாத்மைவ மே மதம் |**
**ஆஸ்திதஹ்ற ஸஹி யுக்தாத்மா மாமேவானுத்த மாம் கதிம் || 18**

கருத்துரை:

இவர்களனைவரும் (மேற்சொன்ன பக்தர்களுள்) நல்லவரே. ஆயின் அதிலும் ஞானியானவன் சாட்சாத் நானே என்பது என் கருத்து. ஏனெனில் அவன் என்னிடத்தே சித்தத்தை நிலையாக நிறுத்தி என்னையே அவன் உத்தமமான யாக நிச்சயித்துக் கொண்டு என்னையே பின்பற்றுகிறான்.

**ஸ்: பஹூனாம் ஜன்மனாமந்தே ஞானவான் மாம் ப்ரபத்யதே |**
**வாஸுதேவஹ்ற ஸர்மிதிஸ மஹாத்மா ஸுதுர்லபஹ || 19**

கருத்துரை:

பல பிறவிகளின் இறுதியில் மனிதன் ஞானம் அடைந்து எல்லாம் வாசுதேவனே என்று ஞானியானவன் அறிந்து என்னை வணங்கி என்னை வந்தடைகிறான். அத்தகைய மகாத்மாக்கள் உலகில் மிகச் சிலரே.

**ஸ்: காமைஸ்தை ஸ்தைர் ஹ்ருத ஞானாஹ் ப்ரபத்யந்தே அன்யதேவதாஹ் |**
**தம் தம் நியமமாஸ்தாய ப்ரக்ருத்யா நியதாஹ் ஸ்வயா || 20**

கருத்துரை:

(சிலர்) தத்தம் இயற்கையால் (பிறவித் தொடர்பால்) தூண்டப்பட்டவராய், விஷயங்களின் மீதான ஆசைகளால், விவேகத்தை இழந்து, தேவதை ஆராதனை தொடர்பான அவ்வவ் நியமங்களைப் பின்பற்றி, இதர தேவதைகளைப் போற்றுகின்றனர்.

**ஸ்: யோ யோ யாம் யாம் தனும் பக்தஹ ச்ரத்த யார் சிது மிச்சதி |**
**தஸ்ய தஸ்யா சலாம் ச்ரத்தாம் தாமேவ விததாம்யஹம் || 21**

கருத்துரை:
எந்தெந்த பக்தன் எந்தெந்த தேவ வடிவத்தை சிரத்தையோடு அர்ச்சிக்க இருக்கிறானோ அவ்வவனுடைய சிரத்தையை அசையாததாக நான் செய்கிறேன்.

ஸ்: **ஸ தயா ச்ரத்தயா யுக்த்ஸ்தஸ்யா ராதன மீஹதே |**
**லபதே சததஹ காமான் மயைவ விஹிதான் ஹி தான் || 22**

கருத்துரை:
சிரத்தையோடு கூடியவனாகிய அவன் அவ்வத் தேவதைகளை ஆராதித்து அதினின்று ஆசைப்பட்டவைகளை அடையப் பெறுகிறான். ஆயினும் அவ்வாசைப் பொருள்களை உண்மையில் வகுத்து வழங்குபவன் நானே.

ஸ்: **அந்தவத்து பலம் தேஷாம் தத்பவத்யல்ப மேதஸாம் |**
**தேவான் தேவயஜோ யாந்தி மத்பக்தா மாமபி || 23**

கருத்துரை:
அற்ப புத்தியுடையவர்களுடைய பலன் அற்பமானதாக

அறிவுடையதாக ஆகிறது (ஏனெனில்) தேவர்களைப் பூசிப்பவர்கள் தேவர்களையே அடைகின்றனர். என் பக்தர்கள் என்னையே அடைகின்றனர்

**ஸ்: அவ்யக்தம் வ்யக்திமாபன்னம் மன்யந்தே மாமபுத்தயஹ ।**
**பரம் பாவமஜானந்தோ மமாவ்யய மனுத்தமம் ॥ 24**

*கருத்துரை:*
*என்னுடைய அழிவற்ற, ஒப்பற்ற பர சொருபத்தை அறியாத அறிவிலிகள், புலன்களுக்கு எட்டாத என்னைப் புலன்களுக்குத் தென்படும் இயல்பை அடைந்தவனாக எண்ணுகின்றனர்.*

**ஸ்: நாஹம் ப்ரகாச ஹ ஸர்வஸ்ய யோகமாயா ஸமாவ்ருதஹ ।**
**மூடோ அயம் நாபிஜானாதி லோகோ மாமஜ மவ்யயம் ॥ 25**

*கருத்துரை:*
*யோக மாயையினால் நன்கு மூடப்பட்டுள்ள நான் எல்லோருடைய அறிவிற்கும் புலப்படுவதில்லை.*

விவேகமற்றவர்களான மக்கள் என்னைப் பிறவாதவனாயும், அழிவில்லாதவனாகவும் அறிகிறதில்லை.

ஸ்: **வேதாஹம் ஸமதீதானி வர்த்மானானி சா அர்ஜுன் |**
**பவிஷ்யாணி ச பூதானி மாம் து வேத ந கஸ்சன ||** 26

கருத்துரை:
அர்ஜுனா! சென்றனவும், இருப்பனவும், வருவனவும் ஆகிய உயிர்களையெல்லாம் நான் அறிவேன். ஆனால் என்னை யாரும் அறியார்.

ஸ்: **இச்சாத் வேஷஸமுத்தேன த்வந்த்வ மோஹேன பாரத |**
**ஸர்வபூதானி ஸம்மோஹம் ஸர்கேயாந்தி பரந்தப ||** 27

கருத்துரை:
எதிரிகளை வாட்டுகின்ற அர்ஜுனா! எல்லா உயிர்களும் பிறந்தவுடனேயே விருப்பு வெறுப்பு இவற்றின் காரணமாக இன்பம் துன்பம் முதலான இருமைகளின் மோகத்தினால் குழப்பமடைகின்றன.

**ஸ்: யேஷாம் த்வந்த கதம் பாபம் ஜனானாம் புண்யகர்மணாம் ।**
**தே த்வந்த வமோஹ நிர்முக்தா பஜந்தே**
**மாம் த்ருடவ்ரதாஹ் ॥ 28**

*கருத்துரை:*
*புண்ணிய கருமங்களையுடைய எந்த ஜனங்களின் பாவங்கள் முடிவடைகின்றதோ, அத்தகையோர் (இன்ப துன்பங்கள்) முதலான இருமைகளின் மோகத்திலிருந்து விடுபட்டவர்களாய், திடமான விரதமுடையவர்களாய் என்னைப் பூசிக்கிறார்கள்.*

**ஸ்: ஜரா மரண மோக்ஷாய மாமாச்ரித்ய யதந்தியே ।**
**தே ப்ரஹ்ம தத்விதுஹ் க்ருதஸ்ன மத்யாத்மம் கர்ம**
**சாகிலம் ॥ 29**

*கருத்துரை:*
*எவர் மூப்பினின்றும் மரணத்தினின்றும் விடுபடுவதற்கு என்னை பற்றிட்டு முயற்சி செய்கிறார்களோ அவர்கள், எல்லா அத்யாத்ம சொரூபம் முழுவதையும், எல்லா கர்மங்களையும் அப்பிரம்மமே என்பதை அறிகின்றனர்.*

**ஸ்: ஸாதி பூதாதி தைவம் மாம் ஸாதியக்ஞம் சயே விதுஹ் ।**
**ப்ரயாண காலே அபி சமாம் தேவிதுர் யுக்த சேதஸஹ ॥ 30**

கருத்துரை:

யார் என்னை அதிபூத, அதி தெய்வ, அதியக்ருத்துடன் கூடினவனாக அறிகிறார்களோ, யோகத்திலே நிலை நின்ற மனதையுடைய அவர்கள், சாகும் தறுவாயிலும் என்னை அறிகின்றனர்.

*****

# எட்டாம் அத்தியாயம்

# அக்ஷர பரபிரம்மயோகம்

ஸ்: கிம் தத்ப்ரஹ்ம கிமத்யாத்மம் கிம்கர்ம புருஷோத்தம |
அதிபூதம் சகிம் ப்ரோக்த மதிதைவம் கிமுச்யதே || 1

ஸ்: அதியக்ஞஹ கதம் கோஅத்ர தேஹே அஸ்மின் மதுஸூதன |
ப்ரயாண காலே சகதம் ஞேயோஅஸி நியதாத்மபிஹி || 2

கருத்துரை:
புருஷர்களில் மேலானான ஸ்ரீ கிருஷ்ணா! பிரம்மம் எது? அதியாத்மம் எது? கர்மமென்றால் என்ன? அதிபூதம் என்று சொல்லப்படுவது எது? அதிதெய்வமென்று எதனைச் சொல்வர்? இந்த தேகத்தில் அதியக்ஞன் என்பவர் யார்? அவனை அறிவது எங்ஙனம்? தன்னடக்கம் பழகியவர்களால் மரண காலத்திலும் நீர் எங்ஙனம் அறியப்படுகின்றீர்?

**ஸ்: அக்ஷரம் ப்ரஹ்ம பரமம் ஸ்வபாவோ அத்யாத்ம முச்யதே |**
**பூதபாவோத்பவகரோ விஸர்கஹ கர்ம ஸம்ஞிதஹ || 3**

கருத்துரை:
ஸ்ரீ பகவான் சொல்கிறார் - மிகவும் உத்தமமான (நிரதிசயமான) அழிவற்ற ஒன்றே பிரம்மம் எனப்படுகிறது. தனிப்பட்ட ஆத்மபாவம் அத்யாத்மம் எனப்படுகிறது. உயிர்களின் உற்பத்தியை ஏற்படுத்தும் (யக்ஞம் முதலான) தியாக பூர்வமான கிரியைகளே கர்மம் என்ற பெயருடன் விளங்குகிறது.

**ஸ்: அதிபூதம் க்ஷரோபாவஹ புருஷஸ்சாதி தைவதம் |**
**அதியக்ஞோ அஹமேவாத்ர தேஹே தேஹப்ருதாம் வர || 4**

கருத்துரை:
உடல் எடுத்தவர்களுள் உயர்ந்த அர்ஜுனா! அழியும் பொருள் அதிபூதம் எனப்படுகிறது. விராட் புருஷன் அல்லது ஹிரண்ய கர்ப்பன் அதிதெய்வம் எனப்படுகின்றான். இந்த தேகத்தில் நானே (பரமாத்மாவே) அதியக்ஞன் எனப்படுகிறேன்.

ஸ்: **அந்தகாலே ச மாமேவ ஸ்மரன் முக்த்வா கலேவரம் |**
**யஹ்ற ப்ரயாதி ஸ மத்பாவம் யாதி நாஸ்தி யத்ர ஸம்சயஹ || 5**

*கருத்துரை:*
எவர் மரண காலத்திலும் என்னையே நினைத்த வண்ணம் சரீரத்தை விடுத்துப் போகிறார்களோ, அவர் என் சொரூபத்தினை அடைகிறார்கள். அதில் ஐயமேதுமில்லை.

ஸ்: **யம்யம் வாபி ஸ்மரன்பாவம் த்யஜத் யந்தே கலேவரம் |**
**தம்தமே வைதி கௌந்தேய ஸதா தத்பாவ பாவித || 6**

*கருத்துரை:*
அர்ஜுனா! மரண காலத்தில் எப்பொருளை, (அல்லது உருவத்தை) எண்ணிக் கொண்டு ஒருவன் தேகத்தை விடுக்கிறானோ, அப்பாவத்தின் நினைப்பிற்குத் தொடர்புடைய பண்பாட்டுடன் இருப்பதால் அந்த உருவத்தினையே அடைகிறான்.

**ஸ்: தஸ்மாத் ஸர்வேஷு காலேஷு மாமனுஸ்மர யுத்யச |**
**மய்யர்பித மனோபுத்திர் மாமே வைஷ்யஸ்ய ஸம்சயஹ || 7**

கருத்துரை:
எனவே எல்லாக் காலத்திலும், என்னை நினைத்த வண்ணம் (உன் சுயதர்மமான) யுத்தத்தினைக் கூட செய்யலாம். இவ்வாறு என்னிடத்தே நிலைபெற்ற மனம் புத்தியுடையவனாய், இருந்தால் நீ என்னையே அடைவாய் இதில் ஐயமில்லை.

**ஸ்: அப்யாஸ யோகயுக்தேன சேதஸா நான்ய காமினா |**
**பரமம் புருஷம் திவ்யம் யாதி பார்த்தானு சிந்தயன் || 8**

கருத்துரை:
ஓ அர்ஜுனா! அப்யாசமெனும் யோகத்துடன் கூடியதும், ஏனைய விஷயங்களின் மீது செல்லாததுமான மனத்தினால், தேஜோமயமான (ஒளிவிட்டுப் பிரகாசிக்கின்ற) பரமாத்மாவான பரம புருஷனை இடைவிடாது எண்ணி, மனிதன் அவனையே அடைகிறான்.

**ஸ்: கவிம் புராண மனுசாஸிதார மணோரணீ யாம்ஸ**
**மனுஸ்மரேத்யஹ |**
**ஸர்வஸ்ய தாதார மசிந்த்யரூப மாதித்யவர்ணம் தமஸஹ**
**பரஸ்தாத் || 9**

**ஸ்: ப்ரயாண் காலே மனஸா அசலேன பக்த்யா யுக்தோ**
**யோகபலேன சைவ |**
**ப்ருவோர்மத்யே ப்ராணமாவேச்ய ஸம்யக் ஸதம் பரம் புருஷமு**
**பைதி திவ்யம் || 10**

*கருத்துரை:*
*எவனொருவன் பக்தியுடன், மரண காலத்தில், யோக பலத்தினால் (தியானப்யாசம் முதலான பண்பாட்ட செயலின் பலத்தினால்) பிராணவாயுவை, புருவங்களின் இடையில் நன்கு நிலைநிறுத்தி அதன் பின் முற்றும் உணர்ந்தவனை, தொல்லோனை, அனைத்தையும் ஆள்பவனை, அணுவிற்கும் நுண்மையானவனை, எல்லா உலகிற்கும் ஆதாரமானவனை (அளித்துக் காப்போனை), சிந்தனைக்கு எட்டாத வடிவுடையோனை, கதிரவனைப் போன்று ஒளிர்பவனை,*

அஞ்ஞான இருளுக்கு அப்பாற்பட்டவனை, சலனமற்ற புத்தியுடன் இடைவிடாது சிந்தனை செய்தால் அவன் அத்திவ்விய பரமபுருஷனை அடைகிறான்.

**ஸ்:** **யதக்ஷரம் வேதவிதோ வதந்தி விசந்தி யத்யதயோ வீத**
**ராகாஹ் |**
**யதிச்சந்தோ ப்ரஹ்மசர்யம் சரந்தி தந்தே பதம் ஸங்க்ரஹேண**
**ப்ரவக்ஷ்யே || 11**

கருத்துரை:
வேதத்தை அறிந்தவர்கள் எதனை அழிவற்றதாகச் சொல்கிறார்களோ, விருப்பு வெறுப்பற்ற சந்நியாசிகள் எதனில் புகுகின்றனரோ, எதனை விரும்பி மக்கள் பிரம்மச்சரியத்தைப் பின்பற்றுகின்றனரோ அத்தகைய (பரமாத்ம) பதத்தைக் குறித்து உனக்குச் சுருக்கமாகச் சொல்கிறேன்.

**ஸ்:** **ஸர்வத்வாராணி ஸம்யம்ய மனோ ஹ்ருதி நிருத்ய ச |**
**மூர்த்ன்யாதாயாத்மனஹ ப்ராண மாஸ்திதோ யோக**
**தாரணாம் || 12**

**ஸ்: ஓமித்யேகாக்ஷரம் ப்ரஹ்ம வ்யாஹரன் மாமனுஸ்மரன் |**
**யஹ் ப்ரயாதி த்யஜன் தேஹம் ஸ யாதி பரமாம் கதிம் || 13**

*கருத்துரை:*
*எவன் இந்திரிய த்வாரங்களனைத்தையும் நன்கு கட்டுப்படுத்தி, மனத்தினை இதயத்தில் ஆத்மாவில் நன்கு நிலைநிறுத்தி, சிரசில் (பிரமரந்திரத்தில்) ப்ராணவாயுவை நிறுத்தி, ஆத்மாவைக் குறித்து ஒருமுனைப்பாட்டுடன் கூடிய சிந்தனை (யோகதாரணை) உடையவனாய், பரப்ரம்மத்தின் வாசகமான 'ஓம்' என்ற அக்ஷரத்தை உச்சரித்த வண்ணம் என்னை இடைவிடாது சிந்தித்த வண்ணம் சரீரத்தை விடுகிறானோ, அவன் உத்தம நிலையான மோக்ஷத்தினைப் பெறுகிறான்.*

**ஸ்: அனன்ய சேதாஹ் ஸததம்யோ மாம் ஸ்மாதி நித்யசஹ |**
**தஸ்யாஹம் ஸுலபஹ பார்த்த நித்யயுக்தஸ்ய**
**யோகினஹ் || 14**

*கருத்துரை:*
*அர்ஜுனா! எவன் வேறு சிந்தனையின்றி என்னைக் குறித்து*

ஒவ்வொரு தினமும், எப்போதும் நினைத்த வண்ணம் இருக்கிறானோ, அத்தகைய தியானம் செய்பவனுக்கு நான் எளிதாக அடையக் கூடியவனாய் உள்ளேன்.

**ஸ்: மாமுபேத்ய புனர்ஜன்ம துஹ்காலயம் அசாச்வதம் |**
**நாப்னுவந்தி மஹாத்மானஹ் ஸம்சித்திம் பரமாம் கதாஹ் || 15**

கருத்துரை:
மிக உத்தமமான மோட்சத்தினை அடைந்த மகாத்மாக்கள் என்னை அடைந்து, அதன்பின் மறுபடியும் துக்கத்திற்கு இருப்பிடமான, நிலையற்ற மறுபிறப்பை எடுப்பதில்லை.

**ஸ்: ஆப்ரஹ்மபுவனால்லோகாஹ் புனராவர்த்தினஹ் அர்ஜுன |**
**மாமுபேத்ய து கௌந்தேய புனர்ஜன்ம ந வித்யதே || 16**

கருத்துரை:
அர்ஜுனா! பிரம்மலோகம் வரையுள்ள உலகங்கள் அனைத்தும் மறுபடியும் வரும் இயல்புடையவை ( அதாவது அழிந்து

அடைந்தவர்கள் மறுபிறவி பெற்றே தீருவர்) என்னை அடைந்தவர்க்கோ மறுபிறவியில்லை.

**ஸ்: ஸஹஸ்ரயுகபர்யந்த மஹர்யத் ப்ரஹ்மணோ விதுஹ் ।**
**ராத்ரிம் யுக ஸகஸ்ராந்தாம் தே அஹோ ராத்ர**
**விதோஜனாஹ் ॥ 17**

*கருத்துரை:*
*மக்களே! ஆயிரம் யுகம் பிரம்மாவிற்கு ஒரு பகல் என்றும், ஆயிரம் யுகம் அவருக்கு ஒரு இரவு என்றும் அறிபவர் இராப்பகலின் தத்துவத்தை அறிந்தவர்களாகின்றனர்.*

**ஸ்: அவ்யக்தாத் வ்யக்தயஹ ஸர்வாஹ் ப்ரபவந்த்ய ஹராகமே ।**
**ராத்ர்யாகமே ப்ரலீயந்தே தத்ரைவாவ்யக்த ஸம்ஞகே ॥ 18**

*கருத்துரை:*
*பிரம்மாவின் பகல் வரும் போது தோன்றா நிலையிலிருக்கும் (இயற்கை) எல்லா சராசரி வஸ்துக்களும் பிறக்கின்றன.*

மறுபடியும் இரவு வரும் போது அவ்வியற்கையிலேயே ஒடுங்கி மறைகின்றன.

**ஸ்: பூதக்ராமஹ் ஸ ஏ வாயம் பூத்வா பூத்வா ப்ரலீயதே |**
**ராத்ரியாக மே அவசஹ பார்த்த ப்ரபவத்ய ஹராகமே || 19**

கருத்துரை:
அர்ஜுனா! இந்த உயிர்த்தொகை (முன்கல்பத்திலிருந்த) கர்மாவிற்கு வசப்பட்டுப் பிறந்து பிறந்து (பிரம்மதேவனின்) இரவின் ஆரம்பத்தில் (மறுபடியும்) ஒடுங்குகின்றது. மறுபடியும் (பிரம்மதேவனின்) பகலின் ஆரம்பத்தில் பிறக்கின்றது.

**ஸ்: பரஸ்தஸ்மாத்து பாவோ அன்யோ அவ்யக்தோ அவ்யக்தாத்**
**ஸநாதனஹ் |**
**யஹ் ஸ ஸர்வேஷு பூதேஷு நச்யத்ஸு ந வினச்யதி || 20**

கருத்துரை:
அந்த பரமாத்மா இயற்கையை விட மேலான நிலைத்துள்ள.

இந்திரியங்களுக்கு எட்டாத, புராதனமான உள்ள இயற்கை ஒன்றுள்ளதோ, அது உலகின் எல்லா உயிர்களும் அழிந்தாலும் அழிவற்றதாகவே இருக்கும்.

**ஸ்: அவ்யக்தோ அக்ஷர இத்யுக்த ஸ்தமாஹு; பரமாம் கதிம் |**
**யம் ப்ராப்ய ந நிவர்தந்தே தத்தாம பரமம்மம || 21**

கருத்துரை:

எந்த பரமாத்மா இந்திரியங்களுக்குப் புலப்படாதவன், அழிவற்றவன் என்று சொல்லப்படுகிறதோ, அவனையே மிக உன்னதமான பரமகதியாக (வேத விற்பன்னர்கள்) சொல்லுகிறார்கள். எதனை அடைந்தால் மறுபிறவி இல்லையோ அதுவே என் மிக உன்னதமான நிலை (சொரூபமாகி)யாக உள்ளது.

**ஸ்: புருஷஹ ஸ பரஹ பார்த்த பக்த்யா லப்யஸ்த்வனன்யயா! |**
**யஸ்யாந்தஹ ஸ்தானி பூதானி யேன ஸர்வமிதம் ததம் || 22**

கருத்துரை:
அர்ஜுனா! எவனிடத்து, உயிர்களனைத்தும் வசிக்கின்றனவோ, எவனால் இவ்வுலகமனைத்தும் வியாபித்து இருக்கின்றதோ, அத்தகைய பரமபுருஷன் (பரமாத்மா) சலனமற்ற அனன்ய பக்தியினாலேயே அடையப்படுகிறான்.

**ஸ்: யத்ர காலே த்வனாவ்ருத்தி மாவ்ருத்திம் சைவ யோகினஹ் ।**
**ப்ரயாதா யாந்தி தம் காலம் வக்ஷ்யாமி பரதர்ஷப ॥ 23**

கருத்துரை:
பரத குல சிரேஷ்டனான அர்ஜுனா! எக்காலத்தில் சரீரத்தை விடுத்துப் போகிற யோகிகள் முக்தியடைந்து மறுபடியும் பிறப்பதில்லையோ, எக்காலத்தில் போகின்றவர்கள் மறுபடியும் பிறக்கின்றனரோ அக்காலத்தைப் பற்றிச் சொல்கிறேன் கேள்.

**ஸ்: அக்னிர் ஜ்யோதி ரஹ ஶுக்ல ஹ்ற ஷண்மாஸா உத்தராயணம் ।**
**தத்ர ப்ரயாதா கச்சந்தி ப்ரஹ்ம ப்ரஹ்ம விதோ ஜனாஹ் ॥ 24**

கருத்துரை:
அக்னி, பிரகாசம், பகல், சுக்ல பட்சம், ஆறு மாதங்களையுடைய உத்தராயணம் இவையுள்ள காலத்தில் உடலை நீத்துப்போகின்ற பிரம்ம ஞானிகள் பிரம்மத்தையே அடைகிறார்கள்.

**ஸ்: தூமோ ராத்ரிஸ்ததா கிருஷ்ணஹ ஷண்மாஸா த க்ஷிணாயனம் ।**
**தத்ர சாந்த்ரமஸம் ஜ்யோதிர் யோகீ ப்ராப்ய நிவர்ததே ॥ 25**

கருத்துரை:
புகை, இரவு, கிருஷ்ணபட்சம், ஆறுமாதங்களையுடைய தக்ஷினாயணம் எந்த மார்க்கத்தில் உள்ளத்தில் அம்மார்க்கத்தில் தேகத்தை விடுத்த சகாமகர்ம யோகி சந்திரனது ஒளியைப் பெற்றிருந்து மறுபிறவியை அடைகிறான்.

ஸ்: சுக்லக்ருஷ்ணே கதீ ஹ்யேதே ஜகதஹ சாச்வதே மதே ।
ஏகயா யாத்யனா வ்ருத்தி மன்யயா வர்ததே புனஹ ॥ 26

கருத்துரை:
சுக்ல, கிருஷ்ண மார்க்கங்கள் இரண்டும், உலகில் எப்போதும் நிலையாக இருப்பவையாக எண்ணப்படுகின்றன. அதில் ஒன்றினில் பிறவாமையும், மற்றொன்றில் பிறப்பையும் யோகி எய்துகிறான்.

ஸ்: நைதே ஸ்ருதீ பார்த்த ஜானன் யோகீ முஹ்யதி கஸ்சன ।
தஸ்மாத் ஸர்வேஷு காலேஷு யோகயுக்தோ பவார்ஜுன ॥ 27

கருத்துரை:
அர்ஜுனா! இவ்விரண்டு மார்க்கங்களையும் அறிந்த எந்த யோகியும் மோகத்தை அடைகிறதில்லை. ஆகையால், அர்ஜுனா நீ எப்போதும் யோகத்தில் நிலைத்தவனாய் இரு.

**ஸ்: வேதேஷு யக்ஞேஷு தபஹ ஸுசைவ தானேஷு யத்புண்யபலம் ப்ரதிஷ்டம் |**
**அத்யேதி தத்ஸர்வமிதம் விசித்வா யோகீ பரம் ஸ்தானமுனர்பதி சாத்யம் || 28**

*கருத்துரை:*
*யோகியானவன் எதனை (இவ்வத்தியாயத்தில் சொல்லப்பட்ட அக்ஷர பரபிரம்ம தத்துவம் முதலானவற்றை) அறிந்து, வேதங்களின் யக்ஞங்களின், தானங்களின் தவங்களின் புண்ய பலன் சொல்லப்பட்டிருக்கிறதோ, அவை அனைத்திற்கும் மேலான பலனை அடைகிறான். மேலும் அநாதியான ஸர்வோத்தம நிலையை (பிரம்ம நிலையை) அடைகிறான்.*

*****

## ஒன்பதாம் அத்தியாயம்
# ராஜ வித்யா ராஜ குஹ்ய யோகம்

**ஸ்: இதம் துதே குஹ்யதமம் ப்ரவக்ஷ்யாம்யனஸூயவே ।
ஞானம் விஞ்ஞான ஸஹிதம் யஜ்ஞாத்வா மோக்ஷ்யஸே
அசுபாத் ॥ 1**

*கருத்துரை:*
அர்ஜுனா! எதனை அறிந்தால், அசுபமான இந்த சம்சார பந்தத்தினின்றும் நீ விடுபடுவாயோ, அத்தகைய மிகவும் இரகசியமான, அனுபவ விஞ்ஞானத்துடன் கூடிய இந்த பிரம்ம ஞானத்தினைப் பொறாமையற்ற உனக்கு நன்கு உரைக்கிறேன்.

**ஸ்: ராஜ வித்யா ராஜகுஹ்யம் பவித்ரமித முத்தமம் ।
ப்ரத்யக்ஷாவகமம் தர்ம்யம் ஸுஸுகம்கர்துமவ்யயம் ॥ 2**

*கருத்துரை:*
இந்த பிரம்மஞானமானது வித்தைகளனைத்திற்கும்

மேன்மையானது, மறைபொருள்களுக்கெல்லாம் மறை பொருளானது, தூய்மையானது, கண்கூடாக உணர்தற்குரியது, பின்பற்றுதற்கு மிகவும் எளிதானது, தர்மத்தோடு கூடியது அழிவற்றது.

**ஸ்: அச்ரத்த தானஹ் புருஷா தர்மஸ் யாஸ்ய பரந்தப ।**
**அப்ராப்ய மாம் நிவர்தந்தே ம்ருதியுஸம்ஸார வர்த்மனி ॥ 3**

*கருத்துரை:*
*அர்ஜுனா! ஆத்ம ஞானமெனும் இத் தர்மத்தில் சிரத்தையில்லாத மனிதர்கள் என்னை அடைய முடியாது மரணத்தோடு கூடிய இந்த சம்சார மார்க்கத்திலேயே திரும்பவும் வருகின்றனர். (திரிகின்றனர் அல்லது இங்கேயே உழலுகின்றனர்).*

**ஸ்: மயா ததமிதம் சர்வம் ஜகதவ்யக்தமூர்தினா ।**
**மத்ஸ்தானி ஸர்வபூதானி நசாஹம் தேஷ்வ வஸ்திதஹ ॥ 4**

*கருத்துரை:*
இவ்வுலகம் அனைத்தும் அவ்யக்த மூர்த்தியான என்னுள்

வியாபிக்கப்பட்டிருக்கிறது. எல்லா உயிர்களும் என்னிடத்து இருக்கின்றன. நான் அவைகளிடத்து இல்லை.

**ஸ்: ந ச மத்ஸ்தானி பூதானி பச்யமே யோக மைச்வரம் |**
**பூத ப்ருன்ன ச பூதஸ்தோ ம மாத்மா பூதபாவனஹ || 5**

கருத்துரை:
உயிர்கள் உண்மையில் என்னிடத்து நிற்பவை அல்ல. ஈஸ்வர சம்பந்தமான என்னுடைய யோக மகிமையைப் பார். என் ஆத்ம ஸ்வரூபம் உயிர்களை ஆக்கவும், காக்கவும் செய்யினும், அவைகளிடத்து இருப்பதில்லை (அவற்றின் மீது ஆதாரப்பட்டு இருப்பதில்லை).

**ஸ்: யதாகாச ஸ்திதோ நித்யம்வாயுஹு சர்வத்ர கோமஹான் |**
**ததாசர்வாணி பூதானி மத்ஸ்தானீஸ்யுபதாரய || 6**

கருத்துரை:
எப்போதும், எங்கும் சஞ்சரிக்கின்ற பெரும் காற்று வானத்தில்

நிலை பெற்றிருப்பது போன்று, பூதங்கள் எல்லாம் என்னிடத்தில் இருக்கின்றன என்று தெரிந்து கொள்.

**ஸ்: சர்வ பூதானி கௌந்தேய ப்ரக்ருதிம் யாந்திமாமிகாம் |**
**கல்பக்ஷயே புனஸ்தானி கல்பாதௌவிஸ்ருஜாம்யஹம் || 7**

கருத்துரை:
அர்ஜுனா! பிரளய காலத்தில் எல்லா உயிர்களும் என் இயற்கையை (மாயையை) அடைந்து அங்கு அடங்கி இருக்கின்றன. மறுபடியும் சிருஷ்டி காலத்தில் நான் அவற்றைத் தோற்றுவிக்கின்றேன்.

**ஸ்: ப்ரக்ருதிம் ஸ்வாம வஷ்டப்ய விஸ்ருஜாமி புனஹ் புனஹ் |**
**பூதக்ராமமிமம் க்ருத்ஸ்னமவசம் ப்ரக்ரு தேர்வஸாத் || 8**

கருத்துரை:
இயற்கைக்கு உட்பட்டு இருப்பதால் சுதந்திரம் அற்ற இவ்வுயிர் சமூகம் அனைத்தையும் நான் என்னுடைய இயற்கையினுள் திரும்பத்திரும்பத் தோற்றுவிக்கிறேன்.

ஸ்: நச மாம் தானி கர்மாணி நிபத்னந்தி தனஞ்ஜய |
உதாஸீனவதாஸீனமஸக்தம் தேஷு கர்மஸு || 9

கருத்துரை:
தனஞ்ஜயா! (அவ்வாறாக ஜீவர்களைத் தோற்றுவிப்பவனாயினும்) அந்த சிருஷ்டிகளின் கர்மங்களில் பற்றற்று, சமநோக்குடன் இருப்பவனான என்னை அவை கட்டுப்படுத்துவதில்லை.

ஸ்: மயாத்யக்ஷேண ப்ரக்ருதிஹ் ஸூயதே ஸசராசரம் |
ஹேதுனானேன கௌந்தேய ஜகத் விபரிவர்ததே || 10

கருத்துரை:
அர்ஜுனா! என்னில் கண்காணிக்கப் பெற்று, பிரகிருதியானது தாவர ஜங்கம பொருட்கள் கொண்ட இவ்வுலகை சிருஷ்டிக்கின்றது. இதன் காரணத்தால் ஜகத் சுழல்கின்றது.

ஸ்: அவஜானந்தி மாம் மூடா மானுஷீம் தனுமாச்ரிதம் |
பரம் பாவமஜானந்தோ மம பூத மஹேச்வரம் || 11

கருத்துரை.
என்னுடைய பரசொரூபத்தையும், நான் உயிர்களுக்கெல்லாம் ஈசுவரனாயிருப்பதையும், அறியாத விவேகமற்ற மூடர்கள் (உலகைக் காப்பதற்காக) மானிட தேகம் எடுத்துள்ள என்னை அமெதிக்கின்றனர் (அலட்சியம் செய்கின்றனர்).

ஸ்: **மோகாசா மோக கர்மாண மோக ஞானா விசேதஸஹ |**
**ராக்ஷஸீ மாஸுரீம் சைவ ப்ரக்ருதிம் மோஹினீம் ச்ரிதாஹ் || 12**

கருத்துரை:
வீண் ஆசையுடையவர்களாயும், வீணான செயல்கள் புரிபவராகவும், வேண்டாத அறிவுடையவர்களாகவும், புத்தியற்றவர்களாகவும் ராக்ஷஸ அசுர இயல்பினை அடைகின்றனர்.

ஸ்: ***மஹாத்மானஸ்து மாம் பார்த்த தைவீம் ப்ரக்ருதி***
***மாச்ரிதாஹ் |***
***பஜந்த்யனன்யமனஸோ ஞாத்வா பூ தாதிமவ்யயம் || 13***

கருத்துரை:

அர்ஜுனா! மஹாத்மாக்களாயின், தெய்வீக இயல்புடையவராய், என்னை எல்லா உயிர்களின் பிறப்பிடமாகவும், அழிவற்றவனாகவும் அறிந்து, வேறெதிலும் மனத்தைச் செலுத்தாதவராய் என்னையே பூசிக்கின்றனர்.

**ஸ்: சததம் கீர்த்தயந்தோ மாம் யதந்தஸ்ச த்ருடவ்ருதாஹ |**
**நமஸ்யந்தஸ்சமாம் பக்த்யா நித்யயுக்தா உபாசதே || 14**

கருத்துரை:

எப்போதும் என்னைப் புகழ்பவராய் உறுதியான நிட்டையுடன் முயல்பவராய், பக்தியுடன் வணங்குபவராய், எப்போதும் என்னிடத்தே சித்தத்தை வைத்தவராய், தெய்வ இயல்புடையோர் என்னை சேவிக்கிறார்கள்.

**ஸ்: ஞான யக்ஞேன சாப்யன்யே யஜந்தோ மாமுபாஸதே |**
**ஏகத்வேன ப்ருதக்த்வேன பஹுதா விச்வதோ முகம் || 15**

கருத்துரை:
மேலும் சிலர் ஞானத்தினால் வழிபடுபவராய், (தானே பிரம்மம்) எனும் அத்வைத பாவனையுடனும், இன்னும் சிலர் (பிரம்மமே பல தேவதைகளை வடிவாகயுள்ளது. அத் தேவதைகளில் நான் ஒன்றைப் பூசிக்கிறேன்) என்ற துவைத பாவனையுடனும், இவர் இவ்வாறாகப் பலவிதமாக என்னை உபாசிக்கின்றனர்.

**ஸ்: அஹம் க்ர தூரஹம் யக்ஞஹ ஸ்வதாஹ மஹ மௌஷதம் ।**
**மந்த்ரோ அஹமஹமேவாஜ்யமஹமக்னிரஹம் ஹுதம் ॥ 16**

கருத்துரை:
நானே கிரது என்ற வைதிக கர்மம்; யக்ஞம் நானே; மந்திரமும் நானே; ஔஷதம் நான்; ஹோமம் செய்யப்படும் நெய் (அவிசும்) நான்; நானே அக்னி; ஹோமகர்மமும் நானே ஆக இருக்கிறேன்.

**ஸ்: பிதாஹமஸ்ய ஜகதோமாதா தாதாபிதாமஹஹ ।**
**வேத்யம் பவித்ரமோம்காரஹ ருக்ஸாமயஜுரேவச ॥ 17**

கருத்துரை:
இந்த ஜகத்தின் தந்தை, தாய், பாட்டனார் ஆனவனும் கர்மபலனைக் கொடுப்பவனும், அறியத்தக்கவனும், தூய்மை செய்பவனும், ஓம்காரம், ரிக்யஜுர்ஸாம வேதங்கள் ஆகின்றவனும் நானே.

**ஸ்: கதிர்பர்தா ப்ரபுஹ ஸாக்ஷிநிவாஸக சரணம் ஸுஹ்ருத் |**
**ப்ரபவஹ ப்ரளயஹ ஸ்தானம் நிதானம் பீஜபவ்யயம் || 18**

கருத்துரை:
அடையக்கூடிய மேன்மையான இலக்காகவும், தாங்குபவனாகவும், தலைவனாகவும், சாக்ஷியாகவும், இருப்பிடமாகவும், அடைக்கலமாகவும், நன்மை செய்பவனாகவும், ஸ்ருஷ்டி, ஸ்திதி, லயகர்த்தாவாகவும், களஞ்சியமாகவும், அழியாத வித்தாகவும் (மூலகாரணமாகவும்) நானே இருக்கிறேன்.

**ஸ்: தபாம்யஹமஹம் வர்ஷம் நிக்ருஹ்ணாம் யுத் ச்ருஜாமிச |**
**அம்ருதம்சைவ ம்ருத்யுஸ்ச சதசச்சாஹமர்ஜுன || 19**

கருத்துரை:
அர்ஜுனா! சூரிய கிரணங்களினால் நான் வெப்பம் தருகிறேன்; மழையைப் பெய்விக்கிறேன், தடுக்கிறேன். மரணம் இன்மையையும் (மோக்ஷத்தையும், மரணத்தையும்) அளிக்கிறேன். அவ்வாறே சத்தாகவும், அசத்தாகவும் நானே இருக்கிறேன்.

**ஸ்: த்ரைவித்யா மாம் சோமபாஹ பூதபாபா யக்ஞை ரிஷ்ட்வா**
**ஸ்வர்கதிம் ப்ரார்தயந்தே |**
**தேபுண்யமாஸாத்ய ஸுரேந்த்ரலோக மச்நந்தி திவ்யான்**
**திவிதேவபோகான் || 20**

கருத்துரை:
3 வேதங்களை அறிந்தவர்களும், சோமபானம் செய்தவரும்,

பாபத்தினின்றும் விடுபட்ட வரும், யாகங்களால் என்னை பூஜித்து ஸ்வர்க்கத்தினை வேண்டுகின்றனர். அவர்கள் தேவலோகத்தை அடைந்து அங்கு திவ்யமான தேவபோகங்களை அனுபவிக்கின்றனர்.

**ஸ்: தே தம் புக்த்வா ஸ்வர்க லோகம் விசாலம் க்ஷீணே புண்யே**
**மர்த்ய லோகம் விசந்தி ।**
**ஏவம் த்ரயீதர்ம மனு ப்ரபன்னா கதாகதம்**
**காமகாமா லபந்தே ॥ 21**

கருத்துரை:
அவர்கள் (சுவர்க்கத்தை விரும்புவோர்) விசாலமான சுவர்க்க லோகத்தை அனுபவித்து புண்ணியம் தீர்ந்த பின்பு மானிடவுலகில் பிறக்கின்றனர். இவ்வாறாக (சகாம) வேத நெறிகளைப் பின்பற்றி போகப் பித்தர்கள் பிறப்பு இறப்பு எய்துகின்றனர்.

**ஸ்: அனன்யாஸ்சிந்தயந்தோ மாம் யே ஜனாஹ் பர்யுபாஸதே |**
**தேஷாம் நித்யாபியுக்தானாம் யோகக்ஷேமம்**
**வஹாம்யஹம் || 22**

எவர் வேறு எண்ணமில்லாதவராய் என்னைப் பற்றியே சிந்தித்த வண்ணம் இடைவிடாது தியானிக்கிறார்களோ, எப்போதும் என்னிடத்திலேயே நிட்டையுடன் இருக்கும் யோகிகளின் யோக க்ஷேமத்தை நான் வழங்குகிறேன்.

**ஸ்: யே அப்யன்யதேவதா பக்தா யஜந்தே ச்ரத்தயான்விதாஹ் |**
**தே அபி மாமேவ கௌந்தேய யஜந்த்யவிதிபூர்வகம் || 23**

கருத்துரை:
அர்ஜுனா! இதர தேவதைகளிடத்து பக்தியுடையவராய், சிரத்தையுடன் ஆராதிக்கிறார்களோ, அவர்களும் என்னை விதி வழுவி (முறை தப்பி) என்னையே வணங்குகிறார்கள்.

**ஸ்: அஹம் ஹி ஸர்வயக்ஞானாம் போக்தா ச ப்ரபுரேவச |**
**நது மாமபிஜானந்தி தத்வேனா தஸ்ச்யவந்திதே || 24**

கருத்துரை:
ஏனெனில் எல்லாவிதமான யாகங்களுக்கும் போக்தாவாகவும் பிரபுவாகவும் (யஜமானன்) நானே ஆகிறேன். அத்தகைய என்னை அவர்கள் உள்ளபடி அறிவதில்லை. இதனால் வழுவிப் போகிறார்கள். (மறுபிறவி அடைகின்றனர்).

**ஸ்: யாந்தி தேவவ்ரதா தேவான் பித்ரூன் யாந்தி பித்ருவ்ரதாஹ் |**
**பூதானி யாந்தி பூ தேஜ்யா யாந்தி மத்யாஜினோ**
**அபிமாம் || 25**

கருத்துரை:
தேவர்களை ஆராதிப்பவர்கள் தேவர்களையும், பிதிர்களைப் போற்றுவோர் பித்ரு தேவர்களையும், பூதங்களை வணங்குவோர் பூதங்களையும், என்னை பூசிப்பவர்கள் என்னையும் அடைகின்றனர்.

**ஸ்: பத்ரம் புஷ்பம் பலம் தோயம் யோமே பக்த்யா ப்ரயச்சதி ।**
**ததஹம் பக்த்யுபஹ்ருதமச்னாமி ப்ரயதாத்மனஹ ॥ 26**

*கருத்துரை:*
எவன் எனக்கு பக்தியுடன், இலையையோ, மலர்களையோ, கனியையோ, நீரையோ சமர்ப்பித்து வணங்கும் தூய்மையான மனத்தினையுடையவனுடைய பக்திபூர்வமாக அளிக்கப்பட்ட அவற்றை நான் விருப்பமுடன் ஏற்கிறேன்.

**ஸ்: யத்கரோமி யதச்னாமி யஜ்ஜுஹோமி ததாமி யத் ।**
**யத்தபஸ்யாமி கௌந்தேய தத்குருஷ்வ மதர் பணம் ॥ 27**

*கருத்துரை:*
அர்ஜுனா! நீ எதனைச் செய்தாலும், புசித்தாலும், ஹோமம் செய்தாலும், தானம் செய்தாலும், தவம் செய்தாலும், அதனை எனக்கு அர்ப்பணம் செய்வாயாக.

**ஸ்: சுபாசுப பலை ரேவம் மோக்ஷ்யஸே கர்மபந்தனைஹ் ।**
**ஸந்யாஸ யோகயுக்தாத்மா விமுக்தோ மாமுபைஷ்யஸி ॥ 28**

*கருத்துரை:*
இவ்வாறாக 'கர்மசமர்ப்பன' யோகத்துடன் கூடியவனாய், புண்ய பாவங்களைப் பலனாகக் கொண்ட கர்ம பந்தங்களினின்றும் நீ விடுபடுவாய். அவ்வாறு விடுபட்டவனாய் என்னை அடைவாய்.

**ஸ்: ஸமோ அஹம் ஸர்வபூதேஷு நமே த்வேஷ்யோ அஸ்தி நப்ரியஹ ।**
**யே பஜந்தி து மாம் ப்க்தியாமயிதே தேஷு சாப்யஹம் ॥ 29**

*கருத்துரை:*
நான் எல்லா உயிர்களிடத்தும் சமமாக இருப்பவன். எனக்கு ஒருவன் வெறுப்பதற்குறியவனாகவோ, இன்னொருவன் பிரியத்திற்குரிய வனாகவோ இருப்பதில்லை. எவர் என்னை பக்தியுடன் பூசிக்கிறார்களோ அவர்கள் என்னிடத்தும் நான் அவர்களிடத்தும் இருக்கிறேன்.

ஸ்: *அபி சேத்ஸு துராசாரோ பஜதே மாமனன்யபாக் ।*
*ஸாதுரேவ ஸ மந்தவ்யஹ ஸம்யக்யவஸிதோ*
*ஹிஸ: ॥* 30

கருத்துரை:
மிக்க கேடு கெட்டவனாயினும், வேறு எதனையும் எண்ணாமல் என்னையே பூசிப்பானானால், அவனை சாது என்றே கருத வேண்டும். ஏனென்றால் அவன் நல்ல தீர்மானத்திற்கு வந்தவனாகிறான்.

ஸ்: *க்ஷிப்ரம் பவதி தர்மாத்மா சச்வச்சாந்திம் நிகச்சதி ।*
*கௌந்தேய ப்ரதிஜானீஹி நமே பக்தஹ ப்ரணச்யதி ॥* 31

கருத்துரை:
(என்னை அடைக்கலமடைந்த பாவாத்மா) அவன் விரைவில தர்மபுத்தியுடையவனாய் ஆகிறான். மேலும் நிலையான

அமைதியைப் பெறுகிறான். அர்ஜுனா! 'என் பக்தன் எப்போதும் நாசமடைவதில்லையென்று நன்கு அறிவுறுத்துக!'.

ஸ்: **மாம்ஹி பார்த்த வ்யபாச்ரித்ய யேஅபி ஸ்யுஹ்**
**பாப்யோனயஹ** ।
**ஸ்த்ரியோ வைச்யாஸ்ததா சூத்ராஸ்தேஅபி**
**யாந்திபராம்கதிம்** ॥ 32

*கருத்துரை:*
அர்ஜுனா! எவர் பாவப்பிறவியை உடையவராயினும், அவர்களும், பெண்டிரும், வைசியர், சூத்திரர் எவராயினும் என்னைச் சார்ந்திருந்தால் மேலான பதவியை (மோட்சத்தினை அடைகின்றார்கள்).

ஸ்: **கிம் புனர்ப்ராஹ்மணாஹ் புண்யாபக்தா ராஜரிஷியஸ்ததா** ।
**அநித்யமஸுகம் லோகமிமம் ப்ராப்ய பஜஸ்வ மாம்** ॥ 33

கருத்துரை:
இனி புண்யாத்மாக்கள் ஆன பிராம்மணர்களைப் பற்றியும், பக்தர்கள் ஆன ராஜரிஷிகளைப் பற்றியும் மறுபடியும் சொல்வானேன்? (இறைவனைச் சார்ந்து அவர்களும் தவறாது முக்தியடைவர் என்பது பொருள்). எனவே நீ என்னைப் பூசிப்பாயாக!

**ஸ்: மன்மனா பவ மத்பக்தோ மத்யாஜீ மாம் நமஸ்குரு ।**
**மாமேவைஷ்யஸி யுக்த்வைவ மாத்மானம் மத் பராயண ॥ 34**

கருத்துரை:
என்னிடத்தேயே மனம் வைத்தவனாய், என் பக்தனாக, என்னைப் பூசிப்பவனாக ஆகுக. என்னையே வணங்கு. இங்ஙனம் சித்தத்தை என்னிடத்தேயே நிறுத்தி என்னையே மேலான கதியாக எண்ணியவனாய் இறுதியில் என்னையே அடைவாய்.

****

## பத்தாம் அத்தியாயம்
## விபூதி யோகம்

ஸ்: ***பூய ஏவ மஹாபாஹோ ச்ருணுமே பரமம் வசஹ |***
***யத்தே அஹம் ப்ரீயமாணாய வக்ஷ்யாமி ஹிதகாம்யயா || 1***

*கருத்துரை:*
பெருந்தோள்களுடைய அர்ஜுனா! எனது மொழியைக் கேட்கும் விருப்பமுள்ள உன் நன்மையைக் கருதி இனி நான் சொல்லப் போகும் சீரிய சொற்களைக் கேட்பாயாக!

ஸ்: ***நமே விதுஹு ஸுரகணாஹ்ப்ரபவம் மஹர்ஷயஹ |***
***அஹமாதிர்ஹி தேவானாம் மஹர்ஷீணாம் சர்வஷஹ || 2***

*கருத்துரை:*
என்னுடைய தோற்றத்தை! அவதார இரகசியத்தை அல்லது

தன்மையை தேவர்களும், மகரிஷிகளும் உணரார். ஏனெனில் அத் தேவர்களுக்கும் மாமுனிவர்கட்கும் முற்றிலும் முதற் காரணம் நானே.

**ஸ்: யோ மாமஜனாதிம் ச வேத்தி லோக மஹேச்வரம் |**
**அஸம் மூடஹ ஸ மர்த்யேஷு ஸர்வபாபைஹ**
**ப்ரமுக்யதே || 3**

கருத்துரை:
எவனொருவன் என்னை ஆதியில்லாதவன் என்றும், பிறவாதவன் என்றும், உலகுக்குத் தலைவன் என்றும் அறிகிறானோ, அவன் மானுடருள் மயக்கமில்லாதவன். அவன் பாவங்களனைத்தினின்றும் விடுபடுகிறான்.

**ஸ்: புத்திர் ஞானமஸம் மோஹஹ க்ஷமா ஸத்யம் தமஹ சமஹ |**
**ஸுகம் துக்கம் பவோ அபாவோ பயம் சாபயமேவச || 4**

**ஸ்: அஹிம்சா ஸமதா துஷ்டிஸ்தபோ தானம் யசோ அயசஹ |**
**பவந்தி பாவா பூதானாம் மத்தஏவ ப்ருதக் விதாஹ் || 5**

கருத்துரை:

புத்தி, ஞானம், மயக்கமின்மை, பொறுமை, சத்தியம், அடக்கம், அமைதி, இன்பம், துன்பம், பிறப்பு, இறப்பு, அஞ்சுதல், அச்சமின்மை, அஹிம்சை, மனநடுவு நிலைமை, திருப்தி, தவம், தானம், புகழ்ச்சி, இகழ்ச்சி ஆகிய பல தன்மைகள் உயிர்களுக்கு என்னாலேயே உண்டாகின்றன.

ஸ்: மஹர்ஷயஹ ஸப்த பூர்வே சத்வாரோ மனவஸ்ததா ।
மத்பாவா மானஸ ஜாதாயேஷாம் லோக இமாஹ் ப்ரஜாஹ் ॥ 6

கருத்துரை:

உலகிலுள்ள மக்கள் யாருடைய வம்சாவளிகளாக இருக்கின்றாரோ அப்படிப்பட்ட முன்னோர்களாகிய மஹரிஷிகள் எழுவரும் சனகாதி தேவமுனிவர் நால்வரும், பதினான்கு மனுக்களும் என்னுடைய இயல்பை (தெய்வத் தன்மை) உடையவராய் எனது சங்கல்பத்தில் தோன்றினார்.

**ஸ்: ஏதாம் விபூதிம் யோகம் சமமயோ வேத்தி தத்வதஹ |**
**ஸோ அவிகம்பேன யோகேன யுஜ்யதே நாத்ர ஸம்சயஹ || 7**

*கருத்துரை:*
*எனது விபூதிகளையும், யோகத்தையும் உள்ளபடி அறிபவன், சலனமற்ற யோகத்தைச் சார்ந்திடுவான். அதில் ஐயமேதுமில்லை.*

**ஸ்: அஹம் ஸர்வஸ்ய பிரபவோ மத்தஹ ஸர்வம் ப்ரவர்ததே |**
**இதி மத்வா பஜந்தே மாம் புதா பாவ ஸமன்விதாஹ் || 8**

*கருத்துரை:*
*நான் அனைத்திற்கும் பிறப்பிடம்; யாவும் என்னிடத்திருந்தே தோன்றுகின்றன. இதை அறியும் ஞானியர் என்னை அன்புடன் வாழ்த்தி வணங்குகின்றனர்.*

**ஸ்: மச்சித்தா மத்கதப்ராணா போதயந்தஹ பரஸ்பரம் |**
**கதயந்தஸ்ச மாம் நித்யம் துஷ்யந்தி சரமந்தி ச || 9**

கருத்துரை:
அவர்கள் சித்தத்தை என்பால் வைத்து, உயிரை எனக்குரிய தாக்கி (அர்ப்பித்து) ஒருவருக்கொருவர் என்னை விளக்கிக் கொண்டும், எப்போதும் என்னைப் புகழ்ந்து பேசியும் மனநிறைவடைந்தும் மகிழ்வடைந்து மிருக்கின்றனர்.

ஸ்: **தோஷாம் ஸதத யுக்தானாம் பஜதாம் ப்ரீதிபூர்வகம் |**
**ததாமி புத்தியோகம் தம்யேன மாமுயாந்திதே ||** 10

கருத்துரை:
எப்போதும் என்பால் மனத்தைச் செலுத்தி அன்புடன் என்னைத் தொழுவோர்க்கு எதனால் என்னை அடையக்கூடுமோ அத்தகைய ஞான யோகத்தை (ஆத்மா அநாத்மாவைப் பற்றிய அறிவினை) நான் அளிக்கிறேன்.

ஸ்: **தேஷாமேவானு கம்பார்த்த மஹமக்ஞானஜம் தமஹ |**
**நாசயாம் யாத்ம பாவஸ்தோ ஞான தீபேனே பாஸ்வதா || 11**

கருத்துரை:
நான் அவர்களுக்கு அருளால் இரங்கி, அந்தக்கரணத்தில் வீற்றிருந்து, மெய்ஞானச் சுடர் விளக்கால் அஞ்ஞானத்தைத் துதித்த ஆரிருளை அகற்றி விடுகிறேன்.

**ஸ்: பரம் ப்ரஹ்ம பரம் தாம பவித்ரம் பரமம் பவான் |**
**புருஷம் சாச்வதம் திவ்யமாதி தேவமஜம்விபும் || 12**

**ஸ்: அஹுஸ்த்வாம்ருஷயஹ ஸர்வே தேவர்ஷிர் நாரதஸ்ததா |**
**அஸிதோ தேவலோ வ்யாஸஹ ஸ்வயம் சைவ**
**ப்ரவீஷிமே || 13**

கருத்துரை:
மேலாம் பிரம்மம், உயர்ந்த இருப்பிடம், ஒப்பற்ற புனிதம் தாம் ஆவீர் உம்மை நித்யமானவன், திவ்ய புருஷன், ஆதி தேவன், பிறவாதவன், எங்கும் நிறை பொருள் என்று எல்லா ரிஷிகளும், தேவ ரிஷி நாரதர் அப்படியே அஸிதர், தேவர். வியாசர் ஆகியோர் நம் இயம்புகின்றனர். தாமும் அவ்வாறே சொல்கின்றீர்.

ஸ்: **ஸர்வமேதத்ருதம் மன்யே யன்மாம் வதஸி கேசவ |**
**நஹிதே பகவன் வ்யக்திம் விதுர்தேவா ந தானவாஹ் ||** 14

கருத்துரை:
கேசவா! நீர் எனக்கு, ஓதுவது யாவும் உண்மையென்றே கருதுகின்றேன். பகவானே! உமது தோற்றத்தை உனது இயல்பான வடிவத்தை தேவர்களும் அறியார், தானவர்களும் அறியார்.

ஸ்: **ஸ்வயமே வாத்மனாத்மானம் வேத்த த்வம் புருஷோத்தம |**
**பூதபாவன பூதேச தேவதேவ ஜகத்பதே ||** 15

கருத்துரை:
புருஷோத்தமா! எல்லா உயிர்களையும் படைத்துக் காப்பவனே! தேவ தேவா இவ்வண்டத்தின் நாயகனே! உம்மை உம்மால் நீரே உள்ளபடி அறிவீர்! (ஏனையோர்க்கு எளிதில் அறிதல் இயலாது என்பது பொருள்).

**ஸ்: வக்து மர்ஹஸ்ய சேஷேண திவ்யா ஹ்யாத்மவிபூதயஹ I**
**யாபிர் விபூதி பிர்லோ கானி மாம் ஸ்த்வம் வ்யாப்ய**
**திஷ்டஸி II 16**

கருத்துரை:
எனவே, எந்த விபூதிகளால் இந்த உலகங்கள் அனைத்திலும் வியாபித்துள்ளீரோ அத்தகைய தெய்வப் பெற்றியுடன் கூடிய உன் ஆன்ம விபூதிகளை, முழுமையாகச் சொல்வதற்கு நீயே ஏற்றவன்.

**ஸ்: கதம் வித்யாமஹம் யோகிம்ஸ்த்வாம் ஸதா பரிசிந்தயன் I**
**கேஷுகேஷு ச பாவேஷு சிந்த்யோ அஸி பகவன் மயா II 17**

கருத்துரை:
யோகீஸ்வரனே! யாண்டும் உம்மையே சிந்தித்து உம்மை அறிவது எப்படி? பகவானே! என்னென்ன விதங்களில் நீர் என்னால் சிந்திக்கத் தக்கவர்? எவ்வப் பொருள்களில் நான் உம்மை தியானிக்க வேண்டும்?

**ஸ்: விஸ்தரேணாத்மனோ யோகம் விபூதிம் ச ஜனார்தன |**
**பூயஹ கதய த்ருப்திர்ஹி ச்ருண்வதோ நாஸ்தி மே**
**அம்ருதம் || 18**

கருத்துரை:

*கிருஷ்ணா! உன்னுடைய யோக மகிமைகளையும், லீலா வைபவங்களையும் விரிவாக மீண்டும் தெரிவிப்பாயாக. ஏனெனில் உனது அமுத மொழிகள் எனக்குத் தெவிட்டவில்லை. (மேலும் கேட்க வேண்டுமென்ற ஆர்வம் உண்டாயிருக்கின்றது).*

**ஸ்: ஹந்த தே கதயிஷ்யாமி திவ்யா ஹ்யாத்ம விபூதயஹ |**
**ப்ராதான்யத ஹ குருச்ரேஷ்ட நாஸ்த்யந்தோ**
**விஸதரஸ்யமே || 19**

கருத்துரை:

*குருகுல வம்சத்திற் சிறந்தோனே! தெய்வீகமான எனது மகிமைகளில் முக்கியமானவற்றை உனக்கு மொழிகிறேன். ஏனெனில் என் பரந்த வைபவத்திற்கு முடிவே கிடையாது.*

ஸ்: அஹமாத்மா குடாகேச ஸர்வபூதாசயஸ்திதஹ |
அஹமாதிஸ்ச மத்யம் ச பூதானாமந்த ஏவச || 20

கருத்துரை:
அர்ஜுனா! எல்லா உயிர்களுடைய இதயத்திலிருக்கும் ஆத்மாவாக நானேயிருக்கிறேன். மேலும் உயிர்களுடைய முதல், இடை, முடிவு (தோற்றம், நிலைத்தல், அழிவு) ஆகியவையாகவும் இருக்கிறேன்.

ஸ்: ஆதித்யானாமஹம் விஷ்ணுர் ஜ்யோதிஷாம் ரவிரம்சுமான் |
மரீசிர் ம்ருதாமஸ்மி நக்ஷத்ரானாமஹம் சசீ || 21

கருத்துரை:
நான் ஆதித்யர்களில் விஷ்ணு, ஒளிர்பவைகளுள் கதிர் நிறைந்த சூரியனு நான். மருத்துக்களுள் மரீசி, நட்சத்திரங்களுள் சந்திரன்.

ஸ்: **வேதானாம் ஸாமவேதோ அஸ்மி தேவனா மஸ்மி**
**வாஸவஹ |**
**இந்திரியானாம் மனஸ்சாஸ்மி பூதானாமஸ்மி சேதனா || 22**

கருத்துரை:
வேதங்களுள் நான் சாமவேதம், தேவர்களுள் இந்திரன், இந்திரியங்களில் மனம், உயிர்களில் உணர்வுமாக இருக்கிறேன்.

ஸ்: ***ருத்ரானாம் சங்கரஸ்சாஸ்மி வித்தே சோ யக்ஷர க்ஷஸாம் |***
***வஸூனாம் பாவகஸ்சாமி மேருஹ சிகரிண மஹம் || 23***

கருத்துரை:
ருத்திரர்களுள் சங்கரனாகவும், யக்ஷ ராக்ஷசர்களுள் குபேரனாகவும், வஸூக்களில் அக்னியாகவும், மலைகளுள் மேருமலையாகவும் நான் இருக்கிறேன்.

ஸ்: ***புரோதஸாம் சமுக்யம்மாம் வித்தி பார்த்த ப்ருஹஸ்பதிம் |***
***ஸேனானீனாமஹம் ஸ்கந்தஹ ஸரஸாமஸ்மி ஸாகரஹ || 24***

கருத்துரை:
அர்ஜுனா! மறை ஓதுபவர்களில் நான் பிரகஸ்பதி என்பதை அறிந்து கொள்வாயாக. படைத்தலைவர்களுள் ஸ்கந்தனாகவும், நீர்நிலைகளுள் கடலாகவும் நான் விளங்குகிறேன்.

**ஸ்: மஹர்ஷிணாம் ப்ருகுஹு கிராமஸஸ்ம்யேக மக்ஷரம் ।**
**யக்ஞானாம் ஜபயக்ஞோ அஸ்மி ஸ்தாவராணாம்**
**ஹிமாலையஹ ॥ 25**

கருத்துரை:
மாமுனிவர்களுள் நான் பிருகு. சொற்களில் நான் பிரணவ எழுத்தாவேன். வேள்விகளில் நான் ஜப வேள்வியாகத் திகழ்கின்றேன். இயங்காமல் நிலைத்த பொருள்களில் நான் இமயமாக விளங்குகிறேன்.

**ஸ: அஸ்வத்தஹ ஸர்வவ்ருக்ஷானாம் தேவர்ஷீணாம் ச நாரத ।**
**கந்தர்வானாம் சித்ரதஹ ஸித்தானாம்**
**கபிலோ முனிஹு ॥ 26**

கருத்துரை:
நான் மரங்களுள் ஆலமரமாகவும், தேவ ரிஷிகளில் நாரதராகவும், கந்தவர்களில் சித்ர ரதனாகவும், சித்தர்களில் கபில முனிவராகவும் இருக்கிறேன்.

**ஸ்: உச்சை ஹ ச்ரவஸமச்வானாம் வித்தி மாமம்ரு தோத்பவம் |**
**ஐராவதம் கஜேந்த்ரானாம் நராணாம் ச நராதிபம் || 27**

கருத்துரை:
குதிரைகளில் அமிர்தத்துடன் பிறந்த 'உச்சை ஸ்வரஸ்' என்னும் குதிரையாகவும் யானைகளில் ஐராவதமாகவும், மனிதருள் அரசனாகவும் என்னை அறிவாயாக.

**ஸ்: ஆயுதானாமஹம் வஜ்ரம் தேனுனா மஸ்மி காமதுக் |**
**ப்ரஜனஸ்சாஸ்மி கந்தர்பஹ ஸர்ப்பாணா**
**மஸ்மி வாஸுகி || 28**

கருத்துரை:
ஆயுதங்களில் வஜ்ராயுதமாகவும், பசுக்களில் காமதேனுவாகவும்;

பிரஜைகளைப் பிறப்பிக்கிற மன்மதனாகவும், வாசுகி என்ற பாம்பாகவும் நான் இருக்கிறேன்.

**ஸ்: அனந்தஸ்சாஸ்மி நாகானாம் வருணோ யாதஸாமஹம் |**
**பித்ருணாமர்யமா சாஸ்மி யமஹ ஸம்யமதா மஹம் || 29**

கருத்துரை:
நான் நாகங்களில் அனந்தன்; நீர் தேவதைகளில் வருணன், பித்ருக்களில் அரியமா, தண்டனை அளிப்பவர்களில் யமனாகவும் இருக்கிறேன்.

**ஸ்: ப்ரஹ்லாத ஸ்சாஸ்மி தைத்யானாம் காலஹ கலயதாமஹம் |**
**ம்ருகானாம் சம்ருகேந்ரோ அஹம் வைநதேயஸ்ச**
**பக்ஷிணாம் || 30**

கருத்துரை:
அரக்கர்களுள் பிரஹ்லாதன்; கணிப்பவர்களுள் காலன், விலங்குகளுள் சிம்மம், பறவைகளுள் கருடன் ஆகவும் நான் இருக்கிறேன்.

**ஸ்: பவனஹ பவதாஸ்மி ராமஹ சஸ்த்ர ப்ருதாமஹம் ।**
**ஜஷாணாம் மகரஸ்சாஸ்மி ஸ்ரோத ஸாமஸ்மி ஜாஹ்னவீ ॥ 31**

*கருத்துரை:*
நான் தூய்மைப்படுத்துவனவைகளுள் காற்றாகவும், ஆயுதம் தரித்தவர்களுள் இராமனாகவும், மகரமீனாகவும், நதிகளில் கங்கை நதியாகவும் இருக்கிறேன்.

**ஸ்: ஸர்காணா மாதிரந்தஸ்ச மத்யம் சைவாஹ மர்ஜுன! ।**
**அத்யாத்ம வித்யா வித்யானாம் வாதஹ**
**ப்ரவத தாமஹம்!! ॥ 32**

*கருத்துரை:*
அர்ஜுனனே! படைப்புகளுக்கு நான் ஆதி, நடு, அந்தமாகிறேன். வித்தைகளுள் நான் ஆத்மவித்தை. தர்க்கிப்பவர்கள் பால் (விருப்பு வெறுப்பின்றி தத்துவத்தை நிர்ணயிப்பதற்காகச் செய்யும் வாதத்தில்) நான் வாதமாகிறேன்.

ஸ்: **அக்ஷ ராணா மகாரோ அஸ்மி த்வ்ந்த்வஹ ஸாமஸி கஸ்யச ।**
**அஹமேவாக்ஷயஹ காலஹ தாதாஹம்**
**விச்வதோ முகஹ. ॥ 33**

கருத்துரை:
எழுத்துக்களில், அகரமாகவும், கூட்டுச் சொற்களுள் இருசொல் கூட்டாகவும், ஓயாத காலமாகவும், எங்கும் பரந்திருந்து வினைப்பயனை வழங்குவதும் நானேயாக இருக்கின்றேன்.

ஸ்: **ம்ருத்யுஹ ஸர்வஹரஸ்சாஹம் உத்பவஸ்ச பவிஷ்யதாம் ।**
**கீர்த்திஹி ஸ்ரீர்வாக்ச நாரீணாம் ஸ்ம்ருதிர்மேதா**
**த்ருதிஹிக்ஷமா ॥ 34**

கருத்துரை:
எல்லாவற்றையும் அழிக்கும் மரணமும் நான், இனிப் பிறக்கப்போகும் தோற்றமும் நானே. பெண்மக்களுள் நான் புகழ், திரு, சொல், நினைவு, அறிவு, திண்மை, பொறை ஆகியவையாக இருக்கிறேன்.

ஸ்: ப்ருஹத் ஸாம ததாஸாம்னாம் காயத்ரீ சந்த ஸாமஹம் |
மாஸானாம் மார்கசீர்ஷோ அஹம் ருதூனாம்
குஸுமாகரஹ || 35

கருத்துரை:
அவ்வாறே நான் சாம வேத காலங்களில் ப்ருஹத்சாமம், யாப்புகளில் காயத்ரீ, மாதங்களில் மார்கழி, பருவங்களில் வசந்த காலமாகவும் இருக்கிறேன்.

ஸ்: த்யூதம் சலயதாமஸ்மி தேஜஸ் தேஜஸ்வினாமஹம் |
ஜயோ அஸ்மி வ்யவஸாயோ அஸ்மி ஸத்வம்
ஸத்வமதாமஹம் || 36

கருத்துரை:
தீயோர் விளையாடும் சூதாட்டமாகவும், ஒளி பொருந்தியோரின் ஒளியாகவும், வெற்றியாகவும், முயற்சியாகவும், நல்லோரின் சத்துவ குணமாகவும் நான் விளங்குகிறேன்.

ஸ்: வ்ருஷ்ணீனாம் வாஸுதேவோ (அ)ஸ்மி பாண்டவானாம்
தனஞ்ஜயஹ |
முனீனாமப் யஹம் வ்யாஸஹ கவீனா முசனா கவிஹி || 37

கருத்துரை:
நான் வ்ருஷ்ணி வம்சத்தில் வாசுதேவனாகவும், பாண்டவர்களுள் அர்ஜுனனாகவும், முனிவர்களில் வேத வியாசராகவும், கவிகளில் சுக்கிராச்சாரியராகவும் இருக்கிறேன்.

**ஸ்: தண்டோ தமயதாமஸ்மி நீதிரஸ்மி ஜிகீஷதாம் |**
**மௌனம் சைவாஸ்மி குஹ்யானாம் ஞானம்**
**ஞானவதாமஹம் || 38**

கருத்துரை:
தண்டிப்பவர்பால் செங்கோலாகவும், வெற்றியை நாட்டுபவரிடத்து நீதியாகவும், இரகசியங்களுள் மௌனமாகவும், ஞானிகளுடைய ஞானமாகவும் நான் இருக்கிறேன்.

**ஸ்: யச்சாபி ஸர்வபூதானாம் பீஜம் ததஹமர்ஜுன |**
**ந ததஸ்தி வினா யத்ஸ்யான் மயா பூதம் சராசரம் || 39**

கருத்துரை:
அர்ஜுனனே! எல்லா உயிர்களுக்கும் வித்தாக எது இருக்கிறதோ

அது நானாகவே இருக்கிறேன். அசைவன அசையாத பொருட்களும் நான் இன்றி வேறில்லை.

**ஸ்: நாந்தோ அஸ்தி மம திவ்யானாம் விபூதினாம் பரந்தப ।**
**ஏஷ தூத்தேசதஹ ப்ரோக்தோவிபூதேர் விஸ்தரோ மயா ॥ 40**

கருத்துரை:
எதிரியை வாட்டுபவனே அர்ஜுனா! எனது தெய்வீக விபூதிகளுக்கு எல்லையில்லை. என் விபூதியின் விரிவுகளில் ஒரு சிறிதே என்னால் இயம்பப்பட்டது.

**ஸ்: யத் யத் விபூதி மத்ஸத்வம் ஸ்ரீ மதுரார்ஜிதமேவவா ।**
**தத்ததேவாவகச்ச த்வம் மம தேஜோம் சஸம்பவம் ॥ 41**

கருத்துரை:
ஞான ஐசுவரியம், மனத்தூய்மை (அகப், பிறத் தூய்மை) தர்மத்தின் மீதும், மோட்சத்தின் மீதும் உற்சாகம் எங்கு இருக்குமோ அங்கு சாட்சாத் இறைவனே ஒளிர்கிறார் என்பதாக உணர்தல் வேண்டும்.

இறைவனின் தேஜஸின் அம்சத்தினால் அத்தகைய தூயகுணம் ஏற்படுமென்று சொல்வதால் அவரது ஒளி, ஆற்றல் எல்லையில்லாதது என்பதும், அதில் ஏதேனும் ஒரு சிறிது இருந்தாலும் இத்தகைய சிறப்பு, ஊக்கம் முதலியவை ஏற்படுமென்பதும் தெரிகிறது. எனவே மக்கள் அத்தகைய நற்குணங்களுக்குத் தமது இதயத்தில் இடம் கொடுத்து அதன் மூலம் இறைவனது சாந்நித்யத்தை அனுபவித்தல் வேண்டும். அதுவுமின்றி இத்தகைய நற்குணங்கள் எவரிடத்து இருப்பினும் அவன் இறைவனைப் போல் வணங்கத் தக்கவனாவான்.

ஸ்: **அதவா பஹுனை தேன கிம் ஞாதேன தவார்ஜுன ।**
**விஷ்டப் யாஹமிதம் க்ருத்ஸ்னம் ஏகாம் சேன**
**ஸ்திதோ ஜகத் ॥ 42**

*கருத்துரை:*
*அர்ஜுனா! விரிவான பலவிதமாக இந்த வைபவ ஞானத்தால் உனக்கு என்ன பயன்? நான் இந்த உலகனைத்தையும் எனது ஓர் அம்சத்தால் தாங்கியுள்ளேன் என்பதை அறிவாயாக*

****

## பதினோறாம் அத்தியாயம்
# விஸ்வரூப சந்தர்சன யோகம்

**ஸ்:** ***மதனுக்ரஹாய பரமம் குஹ்யமத்யாத்மஸம்ஞிதம் |***
***யத்வயோக்தம் வசஸ்தேன மோஹோஅயம்விகதோ மம || 1***

கருத்துரை:
கிருஷ்ணா! என்னைக் காத்தருளுதற்கு உம்மால் உரைக்கப்பட்ட மேலானதும் ரஹஸ்யமானதும் ஆன ஆத்மதத்துவத்தைப் பற்றிய மொழிகளால் என் அக்ஞானம் ஒழிந்தது.

**ஸ்:** ***பவாப்யயௌ ஹி பூதானாம் ச்ருதௌ விஸ்தரசோ மயா |***
***த்வதத: கமல பத்ராக்ஷ மாஹாத்ம்யமபி சாவ்யயம் || 2***

கருத்துரை.

கமலக்கண்ணா! உன்னுடைய உயிர்களின் உற்பத்தி அழிவு இவற்றைக் குறித்தும், உமது முடிவற்ற மகிமையைக் குறித்தும், விரிவாக என்னால் கேட்கப்பட்டது.

**ஸ்: ஏவமே தத்யதாத்த த்வமாத்மானாம் பரமேச்வர |**
**த்ரஷ்டுமிச்சாமி தே ரூபமைச்வரம் புருஷோத்தம || 3**

கருத்துரை:

பரமேஸ்வரா! உம்மைப்பற்றி நீர் பகர்ந்தது முற்றிலும் சரியே என்று நான் நம்புகிறேன். ஏ! புருஷோத்தமா உன்னுடைய ஈஸ்வர வடிவத்தினைக் காண விரும்புகிறேன்.

**ஸ்: மன்யஸேயதி தச்சக்யம் மயாத்ரஷ்டுமிதி ப்ரபோ |**
**யோகேச்வரததோ மேத்வம் தர்சயாத் மானமவ்யயம் || 4**

கருத்துரை.

ப்ரபோ! உன் வடிவினைக்காண்பதற்கு எனக்கு இயலும் என்று

எண்ணுவீராயின் யோகேஸ்வரா! உனது அழிவற்ற உருவத்தினைக் காட்டி அருள்க.

**ஸ்: பச்யமே பார்த்த ரூபாணிசத சோஅத ஸஹஸ்ரசஹ |**
**நானாவிதானி திவ்யானி நானாவர்ணாக்ருதீனி ச ‖ 5**

கருத்துரை:
அர்ஜுனா! அநேகவிதமான தெய்வீகத்தன்மை வாய்ந்த பலவித நிறங்களும் வடிவங்களும் உடைய, எண்ணிக்கையற்ற என் உருவங்களைப் பார்.

**ஸ்: பச்யாதித்யான் வஸுன் ருத்ரானச்வினௌ மருதஸ்ததா |**
**பஹுன்யத்ருஷ்ட பூர்வாணி பச்யாஸ்சர்யாணி பாரத ‖ 6**

கருத்துரை:
அர்ஜுனா! சூரியர்களை, வசுக்களையும், ருத்திரர்களையும் அச்வினி தேவதைகளையும் மருத்துக்களையும் பார். அவ்வாறே இதுவரை நீ கண்டிராத பல அதிசயங்களைப் பார்.

ஸ்: இஹைகஸ்தம் ஜகத்க்ருத்ஸ்னம் பச்யாத்யஸ சராசரம் |
மமதேஹே குடாகேசயச்சான்யத் த்ரஷ்டு மிச்சஸி || 7

கருத்துரை:
அர்ஜுனா, இவ்வண்ட சராசரங்களனைத்தும் இன்னும் நீ எவ்வவற்றைக் காண விரும்புகிறாயோ அவை அனைத்தையும் என் சரீரத்திலேயே (அவயவயங்களாக) ஒன்று சேர்ந்திருப்பதாக இப்போது காண்பாய்

ஸ்: நது மாம் சக்யஸே த்ரஷ்டு மனேனைவ ஸ்வச க்ஷுஷா |
திவ்யம் ததாமி தே சக்ஷுஹ் பச்ய மே யோகமைச்வரம் || 8

கருத்துரை:
ஆனால் உனது இந்த ஊனக் கண்ணால் என்னை நீ காணவியலாது உனக்கு ஞானக் கண்ணை வழங்குகின்றேன். அதனால் எனது ஈசுவர யோகத்தினைப் பார்

ஸ்: ஏவ முக்த்வா ததோ ராஜன் மஹாயோகேஸ்வரோ ஹரிஹி ।
தர்சயா மாஸ பார்த்தாய பரமம் ரூபனமச்வரம் ॥ 9

கருத்துரை:
ஸஞ்சயன் சொன்னார் - திரிதராட்டிர மஹாராஜா! மஹா யோகேசுவரனாகிய ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா இங்ஙனம் உரைத்த பின்பு பார்த்தனுக்குத் தம்மேலான ஈசுவர வடிவத்தினைக் காட்டியருளினார்

ஸ்: அநேக வக்த்ர நயன மநேகாத்புத தர்சனம் ।
அநேக திவ்யாபரணம் திவ்யாநே கோத் யதாயுதம் ॥ 10

ஸ்: திவ்ய மால்யாம்வரதரம் திவ்யகந்தானுலேபனம் ।
ஸர்வாஸ்சர்யமயம் தேவம் அனந்தம் விச்வதோ முகம் ॥ 11

கருத்துரை:
(அதன் பின்) அநேக முகங்கள் கண்கள் உடையது அவ்வடிவம் பலவிதமான அதிசயக் காட்சிகள் கொண்டது தெய்விக

கருத்துரை:
ஜீவனானவன் அதாவது மனிதன் தன் பிறவியில் காது, மூக்கு, கண், உடம்பு, மனது ஆகியவற்றை தன்னுடையதாக எண்ணிக்கொண்டு உலக இன்பங்களை அனுபவிக்கிறான்.

**ஸ்: உத்க்ராமந்தம் ஸ்திதம் வாபி புஞ்ஞானம் வா குணான்விதம் |**
**விமூடா நானுபச்யந்தி ஞான சக்ஷுஷஹ || 10**

கருத்துரை:
உடலிற்குச் செல்பவனும், உடலிலேயே இருக்கும் போதும், அனுபவிக்கும் பொழுதும், குணங்களோடு கூடியிருக்கும் பொழுதும், ஜீவனை மூடர்கள் (அஞ்ஞானிகள்) அறியார்; ஞானக் கண்ணுடையார் அறிவர்.

**ஸ்: யதந்தோ யோகினஸ்சைனம் பச்யந்த்யாத் மன்யவஸ்திதம் |**
**யதந்தோ அப்யக்ருதாத்மானோ நைனம் பச்யந்த்ய சேதஸ || 11**

கருத்துரை:
முயற்சியுடைய யோகிகள் தம்முள் இருக்கும் ஆன்மாவைப் பார்க்கிறார்கள் (அனுபவத்திற்குக் கொண்டு வருகிறார்கள்) அவ்வாறு முயற்சியுடையவராயினும் அறிவிலிகள் அந்த ஆத்மாவை பார்க்கிறார்களில்லை.

**ஸ்: யாதித்யகதம் தேஜோ ஜகத்பாஸயதே அகிலம் |**
**யச்சந்த்ரமஸி யச்சாக்னௌதத்தேஜோ வித்தி மாமகம் || 12**

கருத்துரை:
சூரியனிடத்திருந்து வந்து உலகம் முழுவதையும் பிரகாசிக்கச் செய்கின்ற ஒளியும், சந்திரன், அக்னி ஆகியவற்றிடமிருந்து வரும் ஒளியும் என்னிடமிருந்து வந்தவை என அறிவாயாக.

**ஸ்: காமாவிச்ய ச பூதானி தாரயாம்யஹமோஜஸா |**
**புஷ்ணாமி சௌஷதீஹ்ஸர்வாஹ் ஸோமோ பூத்வா**
**ரஸாத்மகஹ || 13**

கருத்துரை:
மற்றும் நான் எனது வலிவால் பூமியினுள் பிரவேசித்து உயிர்களைத் தாங்குகிறேன்; இனிமை வடிவாகிய சந்திரனாகவும் ஆகிப் பயிர்களையெல்லாம் போஷிக்கிறேன்.

**ஸ்: அஹம் வைச் வானரோ பூத்வா ப்ராணினாம் தேஹமாச்ரிதஹ |**
**ப்ராணா பானஸமாயுக்தஹ பசாம்யன்னம் சதுர்விதம் || 14**

கருத்துரை:
நான் வைஸ்வானரன் என்னும் உதரக் கனலாகி உயிர்களின் உடலில் இருந்து கொண்டு, பிராண அபான வாயுக்களுடன் கூடி நான்கு விதமான உணவு வகைகளைச் செறிக்கச் செய்கிறேன்.

**ஸ்: ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி ஸன்னிவிஷ்டோ மத்தஹ ஸ்ம்ருதிர் ஞானமபோஹனம்ச |**
**வேனதஸ்ச ஸர்வைரஹமேவ வேத்யோ வேதாந்த க்ருத் வேத விதேவ சாஹம் || 15**

கருத்துரை:

எல்லோருடைய உள்ளத்திலும் நான் வீற்றிருக்கிறேன். நினைவும், ஞானமும் அவற்றின் அழிவும் என்னிடமிருந்தே உண்டாகின்றன. வேதங்கள் எல்லாவற்றிலும் அறியப்படும் பொருளாக இருப்பவனும் நானே வேதாந்தத்தைச் செய்தவனும், வேதத்தை அறிந்தவனும் நானே

ஸ்: த்வாவிமௌ புருஷௌ லோகே க்ஷரஸ்சாக்ஷர ஏவச ।
க்ஷரஹ ஸர்வாணிபூதானி கூடஸ்தோ அக்ஷர உச்யதே ॥ 16

கருத்துரை:

உலகில் க்ஷரன் என்றும் அக்ஷரன் என்றம் இரண்டே புருஷர்கள் இருக்கிறார்கள். வடிவெடுத்த உயிர்கள் அனைத்தின் சரீரமும் (உபாதின்) க்ஷரன் என்றும், கூடஸ்தனான ஜீவன் அக்ஷரன் என்றும் சொல்லப்படுகிறான்.

**ஸ்: உத்தமஹ புருஷஸ்த்வன்யஹ பரமாத்மேத் யுதாஹ்ருதஹ ।**
**யோ லோகத்ரய மாவிச்ய பிவர்த்யவ்யய ஈச்வரஹ ॥ 17**

கருத்துரை:
எவர் மூவுலகினும் புகுந்து அவற்றைத் தாங்குகின்றாரோ, அத்தகைய அழிவற்ற, உலக நியமனனும் (அக்ஷர க்ஷர புருஷர்களை விட) வேறானவனும் ஆன உத்தம புருஷன் பரமாத்மாவென்று அழைக்கப்படுகிறான்

**ஸ்: யத்மாத் க்ஷர மதீதோ (அ) ஹம க்ஷராதபி சோத்தமஹ**
**அதோஅஸ்மி லோகே வேதே ச ப்ரதிதஹ**
**புருஷோத்தமஹ ॥ 18**

கருத்துரை:
எக்காரணத்தினால் நான், க்ஷரவடிவினை கடந்தவனாகவும், அக்ஷர வடிவினை (ஜீவனை) விடவும் சிறந்தவனாக உள்ளேனோ, அதனால்தான் உலகிலும் வேதத்திலும் 'புருஷோத்தமன்' என்று புகழ் பெற்றிருக்கிறேன்.

**ஸ்: யோ மாமேவமஸம் மூடோ ஜானாதி புருஷோத்தமம் |**
**ஸ ஸர்வவித்பஜதி மாம் ஸர்வபாவேன பாரத ||** 19

கருத்துரை:
அர்ஜுனா! யார் அஞ்ஞானமற்று, இங்ஙனம் என்னைப் புருஷோத்தமன் என்று அறிகிறானோ, எல்லாம் அறிந்த அவன் என்னை முழுமனதோடு பூசிக்கிறான்.

**ஸ்: இதி குஹ்யதமம் சாஸ்த்ரமிதமுக்தம் மயா(அ)கை |**
**ஏதத்புத்த்வா புத்திமான் ஸ்யாத் க்ருதக்ருத்யஸ்ய பாரத || 20**

கருத்துரை:
குற்றமற்றவனே! இவ்வாறாக ஆழ்ந்த இரகசியமான இச்சாஸ் திரம் என்னால் உரைக்கப்பட்டது. அர்ஜுனா இதை அறிபவன் ஞானியும், கிருதார்த்தனுமாகிறான்.

*****

## பதினாறாம் அத்தியாயம்
# தெய்வாசுர ஸம்பத் விபாகயோகம்

***ஸ்: அபயம் ஸத்வஸம் சுத்திர் ஞானயோகவ்ய வஸ்திதிஹ் |***
***தானம் தமஸ்ச யக்ஞஸ்ச ஸ்வாத்யாயஸ்தப ஆர்ஜவம் || 1***

***ஸ்: அஹிம்ஸா ஸத்யமக்ரோதஸ் த்யாகஹ் காந்திரபைசுனம் |***
***தயா பூ தேஷ்வயோலுப்த்வம் மார்தவம் ஹ்ரீர சாபலம் || 2***

***ஸ்: தேஜஹ க்ஷமாத்ருதிஹ் சௌசமத் ரோஹோ நாதி மானிதா |***
***பவந்தி ஸம்பதம் தைவீமபி ஜாதஸ்ய பாரத || 3***

*கருத்துரை:*
*ஏ அர்ஜுனா! 1.பயமின்மை, 2.உள்ளத் தூய்மை, 3.ஞானயோகத் திலிருத்தல், 4.கொடை, 5.வெளிகரணங்களின் கட்டுப்பாடு,*

6.(ஞான) யக்ஞம், 7.(வேதசாஸ்திர) அத்யயனம், 8.தவம், 9.நேர்மை (கபடமின்மை), 10.தியாகபுத்தி, 11.அமைதியுடன் இருத்தல். 12.கோள் சொல்லாமை, 13.உயிர்களிடத்து கருணை, 14.விஷயங்களின் மீது பற்றின்றிருத்தல், 15.இனிமையாக இருத்தல், 16.நாணம் (தர்மத்திற்கு எதிரானவற்றைச் செய்வதில்), 20.மனத்திட்பம், 21.பிரம்ம தேஜஸ், 22.உள்ளும் புறமும் தூய்மை, 23.பொறுமை, 24.தைரியம், 25.துரோகமின்மை, 26.செருக்கின்மை என்ற இந்நற்குணங்கள் தெய்வ இயல்புடன் பிறந்தவனுக்கு உண்டு.

**ஸ்: தம்போ தர்போ அபிமானஸ்ச க்ரோதஹ் பாருஷ்யமேவ ச |**
**அக்ஞானம் சாபிஜாதஸ்ய பார்த்த ஸம்பத மாஸுரீம் || 4**

கருத்துரை:
ஓ அர்ஜுனா! பகட்டும், இறுமாப்பும், தற்பெருமையும், சினமும், கடுமையும், அக்ஞானமும் அசுர குணத்தோடு பிறந்தவனுக்கு இயல்பாகின்றன.

ஸ்: **தைவீ ஸம்பத் விமோக்ஷாய நிபந்தாயாஸுர் மதா |**
**மாசுசஹ் ஸம்பதம் தைவீ மபிஜா தோஅஸி பாண்டவ || 5**

கருத்துரை:
அர்ஜுனா! தெய்வ சம்பத்து மோட்சம் தருவதென்றும், அசுர சம்பத்து சம்சார பந்தத்தை ஏற்படுத்துவதென்றும் கருதப்படுகின்றன. நீ தெய்வ சம்பத்தினை அடைந்தவனாகவே பிறந்துள்ளாய். எனவே வருந்தாதே!

ஸ்: **த்வௌ பூத ஸர்கௌ லோகேஅஸ்மின் தைவ**
**ஆஸுர ஏவச |**
**தைவோ விஸ்தரசஹ் ப்ரோக்த ஆஸுரம்**
**பார்த்த மேச்ருணு || 6**

கருத்துரை:
அர்ஜுனா! இவ்வுலகில் தெய்வீகம், அசுரம் என்று இருவகை உயிர்ப்பிறப்புகள் உண்டு. தெய்வ இயல்பு விரிவாகச் சொல்லப்பட்டது. அசுர இயல்பை இனி என்னிடம் கேள்.

**ஸ்ல: ப்ரவிருத்திம் ச நிவிருத்திம் சஜனாந விதுராஸுராஹ் |**
**ந சௌசம் நாபி சாசாரோ நஸத்யம் தேஷு வித்யதே || 7**

கருத்துரை:
அசுர இயல்புடைய மக்கள் செய்யத் தகுந்த நல்வினையையோ, செய்யத் தகாத தீவினையையோ அறியார். அவரிடத்து தூய்மை, நல்லொழுக்கம், உண்மை இவை இருப்பதில்லை.

**ஸ்ல: அஸத்யமப்ரதிஷ்டம் தே ஜகதாஹுரநீச்வரம் |**
**அபரஸ்பர ஸம்பூதம் கிமன்யத்காமஹைதுகம் || 8**

கருத்துரை:
அவர்கள் உலகம் உண்மையில்லாதது என்றும் (வேதங்கள் முதலானவற்றை) தர்மம், அதர்ம வ்யவஸ்தைகள் இல்லாதது, (கர்த்தாவான) ஈச்வரன் இல்லாதது காமமே காரணமாக ஆண், பெண் இணைக்கத்தினாலேயே ஆனதன்றி வேறு காரணமில்லாதது என்றும் சொல்கின்றனர்.

ஸ்: **ஏதாம் த்ருஷ்டிமவஷ்டப்ய நஷ்டாத்மானோ அல்பபுத்தயஹ |**
**ப்ரபவந்த்யுக்ரகர் மாணஹ க்ஷயாய ஜகதோ அஹிதாஹ் || 9**

*கருத்துரை:*
அவர்கள் இத்தகைய நாஸ்திக நோக்குடையவராய்த் தீயமனதுடன் புல்லறிவு கொண்டவராய், கொடும் செயல்கள் புரிபவராய், உலகிற்குப் பகைவர்களாய், அதன் அழிவிற்கென்றே பிறக்கின்றனர்.

ஸ்: **காமமாச்ரித்ய துஷ்பூரம் தம்பமானமதான்விதாஹ் |**
**மோஹாத் க்ருஹீத்வா அஸத்க்ராஹான் ப்ரவர்தந்தே அசுசி**
**வ்ரதாஹ || 10**

*கருத்துரை:*
அவர்கள் நிறைவேறாத நெடும் காமம் உடையவர்களாய், ஆடம்பரம், பெருமை, மதம் பொருந்தியவர்களாய், விவேகம் இன்மையால், கெட்ட எண்ணங்களைக் கொண்டு, தீய தொழில் புரிபவராய் இருக்கின்றனர். 'துஷ்பூ ரோனான லேனா' - என்று

இதற்குமுன் மூன்றாவது அத்யாயத்தில் இதனைக் குறித்துச் சொல்லப்பட்டது. இத்தகைய நிறைவேறாத காமத்தைக் கொண்டவராதலால் எப்போதும் அமைதி இன்றி இருக்கின்றனர். 'தம்பமானமத அன்விதாஹ்' - ஆடம்பரம் தற்பெருமை, மதம் ஆகியவற்றில் ஏதேனும் ஒன்றிருந்தாலும், ஜீவனுக்கு அழிவே ஏற்படும். அவ்வாறிருக்கையில் மூன்றும் சேர்ந்திருந்தால் அவனது நிலை எவ்வாறிருக்கும்? இருப்பது மோஹாத் - விவேஹமின்மையால் அக்ஞானத்தின் மயக்கத்தில் அவர்கள் செய்யக்கூடாதவற்றைச் செய்பவர் என்றும் க்ரஹிக்கக் கூடாதவற்றை க்ரஹிப்பவர் என்றும் பொருள்.

அசுசவ்ருதாஹ் - அவர்கள் தீயதீர்மானங்களை உடையவராய், தூய்மை அல்லாத மாமிசம் புசிப்பவராய், அதாவது தினமும் அவற்றைச் செய்ய வேண்டும் என்று பற்றுடையவராய் இருப்பர். விரதங்கள் தூய்மையான காரியங்களுடன் தொடர்புடையவையாய் இருக்கும் போதே நற்பலனை அளிக்கும். எனவே நன்மை செய்யும் விரதங்களை மேற்கொள்ள வேண்டுமே அன்றித் தூய்மை அற்றவைகளை

அல்ல. நல்ல தீர்மானங்களையே க்ரஹிக்க வேண்டுமே அன்றித் தீயவைகளை அல்ல.

**ஸ்: சிந்தாம பரிமேயாம் ச ப்ரலயாந்தாமு பாச்ரிதாஹ |**
**காமோபபோக பரமா ஏதாவதிதி நிஸ்சிதாஹ || 11**

**ஸ்: ஆசாபாச சதைர்பத்தாஹ காமக்ரோத பராயணாஹ |**
**ஈஹந்தே காம போகார்த்தமன்யாயேனார்த்த ஸஞ்சயான் || 12**

கருத்துரை:

மேலும் அவர்கள் அளவுகடந்ததும் சாகும் வரையிலும், கவலையை உடையவர்களாய் காம நுகர்ச்சியையே அனைத்திலும் மேலானதாகக் கருதி அடைவிட மேலானது ஒன்றும் இல்லை என்று தீர்மானம் செய்தவர்களாய், மிக்க ஆசை, பாசம் என்ற கயிறுகளால் கட்டப்பட்டவராய், காமக் க்ரோதம் இவற்றில் வசப்பட்டவராய் காம போகத்தின் பொருட்டுச் செல்வக் குவியலைத் தேட முயல்கின்றனர்.

11

ஸ்: **இதமத்ய மயாலப்தமிதம் ப்ராப்ஸ்யே மனோரதம் ।**
**இதமஸ்தீதமபி மே பவிஷ்யதி புனர்தனம் ॥ 13**

ஸ்: **அஸௌ மயா ஹதஹ சத்ருர்ஹனிஷ்யே சாபரானபி ।**
**ஈச்வரோஹ மஹம் போகீஸித்தோ அஹம் பலவான்ஸுகீ ॥ 14**

ஸ்: **ஆட்யோ அபிஜனவானஸ்மி கோஅன்யோ அஸ்தி ஸத்ருசோமயா ।**
**யக்ஷ்யே தாஸ்யாமி மோதிஷ்ய இத்ய க்ஞான விமோஹிதாஹ் ॥ 15**

ஸ்: **அநேகசித்த விப்ராந்தா மோஹஜால ஸமாவ்ருதாஹ் ।**
**ப்ரஸக்தாஹ் காமபோகேஷு பதந்தி நரகே அசுசௌ ॥ 16**

*கருத்துரை:*
"இன்று நான் விரும்பியதை அடைந்தேன். என் விருப்பங்கள் இனியும் நிறைவேறும். இந்த செல்வம் எனக்குள்ளது. இனியும்

எத்துணையோர் செல்வத்தை நான் அடைவேன். இந்தப் பகைவனை நான் கொன்றேன். ஏனைய பகைவர்களையும் என்னால் கொல்ல முடியும்; நான் தலைவன்; எல்லாப் போகங்களையும் அனுபவிப்பவன். நினைத்த காரியத்தை நிறைவேற்றும் சக்தி படைத்தவன்; பலவான்; சுகத்தையனுபவிப்பவன், தனவான், சிறந்த குலத்தில் பிறந்தவன்; எனக்கு சமமானவர் வேறொருவரும் இல்லை. நான் யக்ஞங்கள் செய்வேன். தானங்கள் கொடுப்பேன். ஆனந்தத்தை அனுபவிப்பேன்" என்று இவ்வாறாக அக்ஞானத்தினால் மோகமடைந்தவர்கள், பலவிதமாக சித்தம் குழப்பமடைந்து, மோகத்தினாலும், வலையால் மூடப்பட்ட, காமத்தினையனுபவிப்பதில் மிக்க ஆசையுடையவர்கள் மிக்க கீழ்த்தரமான நரகத்தையடைகின்றனர்.

**ஸ்: ஆத்மஸம் பாவிதாஹ் ஸதப்தா தனமான மதான்விதாஹ |**
**யஜந்தே நாமயக்ஞஸ்தே தம்பேனா விதி பூர்வகம் || 17**

ஸ்: **அஹங்காரம் பலம் தர்பம் காம் க்ரோதம் ச ஸம்ச்ரிதாஹ |**
**மாமாத்ம பரதே ஹேஷு ப்ரத் விஷந்தோ அப்யஸூய**
**காஹ ||** 18

கருத்துரை:
தற்புகழ்ச்சியில் விருப்பம் உள்ளவர், பணிவு இல்லாதவர், செல்வச் செருக்கும் (நான் எனும்) அகந்தையும் கொண்டவர்கள் ஆகியோர் பெயரளவில் விதிப்படி ஆடம்பரத்திற்காக வேள்விகளை நடத்துகின்றனர். அகங்காரம், வலிமை (பலம்) இறுமாப்பு, காமம், குரோதம் ஆகியவற்றை உடையவர்கள், தங்கள் உடலிலும் மற்றைய உயிர் உடல்களிடத்தும் உறைகின்ற என்னை வெறுத்து அவமதிக்கின்றனர்.

ஸ்: **தானஹம் த்விஷதஹ் க்ரூரான் ஸம்ஸாரேஷு நராதமான் |**
**க்ஷிபாம்யஜஸ் ரமசுபானா ஸுரீஷ்வேவ யோனிஷு ||** 19

கருத்துரை:
எல்லாப் பிராணிகளிடத்தும் ஆத்மாவாக இருக்கும் என்னை,

வெறுப்போரை, கொடியவர்களை, பாவகாரியங்கள் செய்வோரை, இழிந்தோரை, தான் பிறந்து இறந்து உழலும் இவ்வுலகில் அசுரப் பிறவியிலேயே, திரும்பத்திரும்ப அவர்களைத் தள்ளுகிறேன்.

**ஸ்: ஆஸுரீம் யோனிமாபன்னா மூடாஜன்மனி ஜன்மனி ।**
**மாமப்ராப்யைவகௌந்தேய ததோ யாந்த்ய தமாம்கதிம் ॥ 20**

கருத்துரை:
அர்ஜுனா! அசுர இயல்புடைய கீழ்த்தரமான பிறவியை அடைந்த அந்த மூடர்கள் ஒவ்வொரு பிறவியிலும் என்னை அடைய முடியாது. அதனைவிட கீழ்த்தரமான பிறவியையே அடைகிறார்கள்.

**ஸ்: த்ரிவிதம் நரகஸ்யேதம் த்வாரம் நாசன மாத்மனஹ ।**
**காமஹ் க்ரோத ஸ்ததா லோபஸ்தஸ் மாதேதத் த்ரயம்**
**த்யஜேத் ॥ 21**

கருத்துரை:
காமம், குரோதம், லோபம் என்ற இம்மூன்றும் மூன்றுவிதமான நரகத்தின் வாயில்கள். இவை தனக்கு (ஜீவனுக்கு) அழிவைத் தருவது - எனவே இம்மூன்றையும் துறத்தல் வேண்டும். (அல்லது காமம், குரோதம், லோபம் ஆகிய மூன்றவிதமான அசுர இயல்புகளை நரகத்தின் வாயில்கள் - என்றும் சொல்லலாம்).

**ஸ்: ஏனாதர் விமுக்தஹ கௌந்தேய தமோத்வாரை ஸ்த்ரிபிர்நரஹ ।**
**ஆசரத் யாத்மனஹ ச்ரேயஸ்ததோ யாதி பராம் கதிம் ॥ 22**

கருத்துரை:
அர்ஜுனா! இம்மூன்று நரகத்தின் வாயில்களினின்றும் விடுபட்டவன் தனக்கு நலனைச் செய்து கொண்டவனாகிறான். அதனால் மிக மேன்மையான மோட்ச பதவியை அடைகிறான்.

**ஸ்: யஹ் சாஸ்திரவிதி முத்ஸ்ருஜ்ய வர்ததே காம காரதஹ ।**
**நஸ ஸித்தி மவாப்னோதி ந ஸுகம் ந பராம் கதிம் ॥ 23**

கருத்துரை:
எவன், சாஸ்திரங்களின் ஆணையைமீறித் தன் இஷ்டத்திற்கு நடக்கிறானோ, அவன் புருஷார்த்த ஸ்திதியையோ, சுகத்தினையோ, மோட்சத்தினையோ அடையான்.

**ஸ்: தஸ்மாச்சாஸ்த்ரம் ப்ரமாணம் தே கார்யாகார்ய**
**வ்யவஸ்தி தௌ ।**
**ஞாத்வா சாஸ்த்ர விதா னோக்தம் கர்ம கர்து மிஹார்ஹஸி ॥ 24**

கருத்துரை:
ஆகையினால் உனக்குச் செய்யத்தகுந்தது, செய்யத் தகாதது இரண்டையும் நிச்சயிப்பதில் சாஸ்திரம் ப்ரமாணமாகிறது. சாஸ்திரத்தில் சொல்லப்பட்டவற்றை அறிந்து நீ கர்மம் செய்யக் கடவாய்.

******

## பதினேழாம் அத்தியாயம்
## சிரத்தாத்ரய விபாகயோகம்

**ஸ்: யே சாஸ்த்ரவிதிமுத்ஸ்ருஜ்ய யஜந்தே ச்ரத்த யான்விதாஹ் ।**
**தேஷாம் நிஷ்டா துகா க்ருஷ்ண ஸத்வமாஹோ**
**ரஜஸ்தம ஹ ।  1**

*கருத்துரை:*
*கிருஷ்ணா! யார் சாஸ்திர விதியை மீறி, ஆனால் சிரத்தையோடு கூடியவர்களாய் உபாசிக்கிறார்களோ அவர்களது நிலை சத்துவமா, ரஜஸா, தமஸா? எதுவாக உள்ளது?*

**ஸ்: த்ரிவிதா பவதி ச்ரத்தா தேஹினாம் ஸா ஸ்வபாவஜா ।**
**ஸாத்விகீ ராஜஸீசைவ தாமஸீ சேதி தாம்ச்ருணு ॥  2**

*கருத்துரை:*
உயிர்களின் முன் பிறவியின் தொடர்பின் இயல்பினால்

ஏற்பட்ட அந்த ச்ரத்தையானது, ஸாத்விகம் என்றும், ராஜஸம் என்றும், தாமஸம் என்றும் மூன்று விதமாய் இருக்கின்றது. அதனைக்கேள்.

**ஸ்: ஸத்வானுரூபா ஸர்வஸ்ய ச்ரத்தா பவதிபாரத |**
**ஸ்ரத்தாமயோ அயம்புருஷோயோ யச்ச்ரத்தஹ**
**ஸஏவஸஹ || 3**

கருத்துரை:
அர்ஜுனா! ஒவ்வொருவருக்கும் அவரவர் மனப்பாங்கிற்கு ஏற்ப சிரத்தை அமைகிறது. மனிதன் சிரத்தைமயமானவன். எவன் எத்தகைய சிரத்தையுடன் இருக்கிறானோ அத்தகைய சிரத்தையும் அவனே ஆவான்.

**ஸ்: ய ஜந்தே ஸாத்விகா தேவான் யக்ஷரக்ஷாம்ஸி ராஜஸாஹா |**
**ப்ரேதான் பூதகணான்ஸ்சான்யே யஜந்தே**
**தாமஸா ஜனாஹ || 4**

கருத்துரை:
ஸாத்விகர்கள் தேவர்களை, ரஜோ குணமுடையவர்கள், யக்ஷ ராக்ஷஸர்களையும், தமோ குணமுடையார்கள், பிரேத பூத குணமுடையவர்களையும் வணங்குகிறார்கள்.

**ஸ்: அசாஸ்த்ரவிஹிதம் கோரம் தப்யந்தேயே தபோஜனாஹ |**
**தம்பாஹங்கார ஸம்யுத்தாஹ காமராகபலான் விதாஹ || 5**

**ஸ்: கர்ஷயந்தஹசரீரஸ்தம் பூதக்ராமம்சேதஸஹ |**
**மாம் சைவாந்தஹ சரீரஸ்தம்தான் வித்தியாஸுர நிஸ்சயான் || 6**

கருத்துரை:
எந்த மக்கள் உடலில் உள்ள இந்திரியங்களையும் உள்ளத்தில் உறையும் என்னையும் துன்புறுத்தி, வீம்பும் அஹங்காரமும் உடையவர்களாய், காமமும் பற்றுதலும் வலுத்தவராய், ஸாஸ்திரத்திற்கு ஒவ்வாத கொடுந்தவம்புரிகிறார்களோ அவர்களை அசுர இயல்புடையவராக அறிக.

**ஸ்: ஆஹாரஸ்த்வபி ஸர்வஸ்ய த்ரிவிதோ பவதி ப்ரியஹ |**
**யக்ஞஸ்த பஸ்ததா தானம் தேஷாம் பேதமிமம் ச்ருணு || 7**

*கருத்துரை:*
*ஒவ்வொருவருக்கும் விருப்பமான உணவும் (முக்குணங்களின்படி) மூன்று விதமாகின்றது. அவ்வாறே, யாகம், தவம், தானமும் மூன்று வகைப்படுகின்றன. அவ்வுணவின் பேதங்களைக் (கூறுகிறேன்) கேட்பாயாக!*

**ஸ்: ஆயுஹ ஸத்வபலாரோக்ய ஸுகப்ரீதிவிவர்தனாஹ |**
**ரஸ்யாஹ் ஸ்நிக்தாஹ் ஸ்திரா ஹ்ருத்யா ஆஹாராஹ**
**ஸாத்விக ப்ரியா || 8**

*கருத்துரை:*
*ஆயிள், அறிவு, மனோபலம், தேகபலம், ஆரோக்கியம், சுகம், ருசி ஆகியவற்றை வளர்ப்பவை, ரசமுள்ளவை, பசையுள்ளவை, தேகத்திற்கு வலிவு தருபவைகள். இன்பமானவைகள் ஆகிய ஆகாரங்கள் சாத்விகர்களுக்கு மிகவும் பிரியமானவைகள்.*

**ஸ்: கட்வம் லவணாத்யுஷ்ண தீக்ஷ்ண ருக்ஷ விதாஹினஹ ।**
**ஆஹாரா ராஜஸஸ்யேஷ்டா துக்க சோகாமயப் ப்ரதாஹ் ॥ 9**

*கருத்துரை:*
கசப்பு, புளிப்பு, உவர்ப்பு, பெருவெப்பம், காரம், வறட்சி, எரிச்சல் மிகுந்தவையும், துன்பம், சோகம், நோய் இவற்றை உண்டு பண்ணக்கூடிய விருப்பமானவைகள். அவை எப்போதும் தள்ளத்தக்கவை.

**ஸ்: யாத யாமம் கதரஸம் பூதி பர்யுஷிதம் சயத் ।**
**உச்சிஷ்டமபி சாமேத்யம் போஜனம் தாமஸ ப்ரியம் ॥ 10**

*கருத்துரை:*
சமைத்து ஒரு யாமம் கழிந்த உணவு, சுவையற்ற, துர்நாற்றமுடைய, பழைய, எச்சிலான, தூய்மையற்ற உணவு தமோ குணத்தாருக்குப் பிரியமானது.

**ஸ்: அபலா காங்க்ஷிபிர்யக்ஞோ - விதித்ருஷ்டோ ய இஜ்யதே |
யஷ்டவ்யமேவேதி மனஹ ஸமாதாயஸ ஸாத்விகஹ || 11**

கருத்துரை:
இது செய்யத் தகுந்ததே என்று மனம் ஸமாதானம் அடைந்து சாஸ்த்திரத்திற்கு ஒத்த எந்த யாகம் பலனைக் கருதாதவர்களால் செய்யப்படுகின்றதோ அது சாத்வீக யாகம் எனப்படும்.

**ஸ்: அபி ஸந்தாய துபலம் தம் பார்த்த மபி சைவயத் |
இஜ்யதே பரத சிரேஷ்ட தம் யக்ஞம் வித்திராஜஸம் || 12**

கருத்துரை:
பாரதகுல சிரேஷ்டனே! பலனைக் கருதியும், ஆடம்பரத்துக்காகவோ செய்யப்படுகின்ற ஆராதனையை ராஜஸமானதென்று அறிக.

**ஸ்: விதிஹீனம் ஸ்ருஷ்டான்னம் மந்த்ரஹீன மதக்ஷிணம் |**
**ச்ரத்தாவிரஹிதம் யக்ஞம் தாமஸம் பரிசக்ஷதே || 13**

*கருத்துரை:*
*சாஸ்திரநெறி வழுவியதும், அன்னதானமில்லாததும், மந்திர மற்றதும், தக்ஷிணை இல்லாததும், சிரத்தையற்றதுமான யக்ஞம் தாமஸ யக்ஞம் எனப்படுகிறது.*

**ஸ்: தேவத்விஜ குருப்ராக்ஞபூஜனம் சௌச மார்ஜவம் |**
**ப்ரஹ்மசர்யமஹிம்சா ச சாரீரம் தப உச்யதே || 14**

*கருத்துரை:*
*தேவர்கள், பிராம்மணர், குருமார், ஞானிகள் ஆகியவர்களைப் போற்றுவதும், உள்ளும் புறமும் தூய்மையாய் இருத்தலும், நேர்மையுடன் பிரம்மச்சரியம், அஹிம்சை இவற்றுடன் இருப்பதும் சரீரத்தவம் எனப்படுகின்றது.*

**ஸ்: அனுத்வே ஹ கரம் வாக்யம் சத்யம் ப்ரியஹிதம் சயத் ।**
**ஸ்வாத்யாயாப்ய ஸனம் சைவ வாங்மயம் தப உச்யதே ॥ 15**

கருத்துரை:
பிறருடைய மனத்தைத் துன்புறுத்தாத வாய்மையும் இனிமையும் நலனும் தரக்கூடிய வார்த்தை மற்றும் வேதம் ஓதுதல் ஆகிய இவை வாக்குமயமான தவம் எனப்படுகிறது.

**ஸ்: மனஹ் ப்ரஸாதஹ சௌம்யத்வம் மௌனமாத்ம**
**வினிக்ரஹஹ ।**
**பாவஸம் சுத்திரித்யேதத்தபோ மானஸமுச்யதே ॥ 16**

கருத்துரை:
மன அமைதி, அன்புடைமை, இனிய தோற்றம், மௌனம், தன்னடக்கம், தூய நோக்கம் ஆகிய இவை மானஸதவம் எனப்படுகிறது.

**ஸ்: ஸ்ரத்தையா பரயா தப்தம் தபஸ்தத் த்ரிவிதம் நரைஹ ।**
***அபலா காங்க்க்ஷி பிர்யுக்தைஹ் ஸாத்விகம்பரி சக்ஷதே ॥ 17***

கருத்துரை:
பலனைக் கருதாத, உறுதி உடைய நரர்களால் பெருமுயற்சியுடன் செய்யப்படும் மேற்சொன்ன மூன்றுவிதமான தவங்களும், ஸாத்வீகமானதென்று சொல்லப்படுகின்றது.

**ஸ்: ஸத்காரமான பூஜார்த்தம் தபோ தம்பேன சைவயத் ।**
**க்ரியதே ததிஹ ப்ரோக்தம் ராஜஸம் சலமத்ருவம் ॥ 18**

கருத்துரை:
பிறரால் பாராட்டுதலையும், பெருமையையும், போற்றுதலையும், கருதி ஆடம்பரத்தோடு செய்யப்படும் தவம், நிலையற்ற, உறுதியற்ற பலனை யுடையதான அது ராஜஸ தவம் எனப் சொல்லப்படுகிறது.

**ஸ்: மூடக்ராஹேணாத்மனோ யத்பீடயா க்ரியதே தபஹ |**
**பரஸ்யோத்ஸாதனார்த்தம் வா தத்தாமஸமுதாஹ்ருதம் || 19**

*கருத்துரை:*
*மூர்க்கத்தனமான பற்றுதலுடன் தன் சரீரத்தை (கடுமையான உபவாசங்களால்) துன்புறுத்தியோ அல்லது பிறரை அழிப்பதற்காகவோ செய்யப்படும் தவம் தாமஸத்தவம் எனச் சொல்லப்படுகின்றது.*

**ஸ்: தாதவ்யமிதி யத்தானம் தீயதே அனுபகாரிணே |**
**தேசே காலே சபாத்ரே சதத்தானம் ஸாத்விகம் ஸ்ம்ருதம் || 20**

*கருத்துரை:*
*தக்க இடத்திலே, புண்ய காலத்தில், தகுந்தவனுக்கு, பிரதியுபகாரம் செய்யும் சக்தியற்றவனுக்கு, கொடுத்தல் கடமையென்ற நிச்சயத்துடன் கொடுக்கப்படும் தானம் சாத்விக தானமென்று சொல்லப்படுகின்றது.*

**ஸ்: யத்து ப்ரத்யுபகாரார்த்தம் பலமுத்திச்ய வா புனஹ |**
**தீயதே ச பரிக்லிஷ்டம் தத்தானம் ராஜஸம் ஸ்ம்ருதம் || 21**

கருத்துரை:
கைமாறு கருதியோ பலனைக் கருதியோ மன வருத்தத்தோடு வழங்கப்படும் தானம் ராஜஸதானம் என்று சொல்லப்படுகிறது.

**ஸ்: அதேசகாலே யத்தான மபாத்ரே இப்யஸ்ச தீயதே |**
**அஸத் க்ருதமவக்ஞாதம் தத்தாமஸமுதா ஹ்ருதம் || 22**

கருத்துரை:
தானத்திற்கு (புனிதமற்ற) இடத்திலும், காலத்திலும் தகுதியற்றவர்களுக்குப் பணிவின்றி இகழ்ச்சியுடன் செய்யப்படும் தானம் எதுவோ அது தாமஸம் எனப்படுகிறது.

**ஸ்: ஓம் தத் ஸதிதி நிர்தேசோ ப்ரஹ்மணஸ்திரிவிதஹ்ஸ்ம்ருதஹ |**
**ப்ராஹ்மணாஸ்தே னவேதாஸ்ச்சயக்ஞாஸ்ச**
**விஹிதாஹ் புரா || 23**

கருத்துரை:

பரப்ரும்மத்திற்கு ஓம், தத், ஸத் என்ற 3 விதமான, பெயர்கள் மொழியப்பட்டுள்ளது. இப் பெயர்களினின்றே (அதன் உச்சாரணையினால்) பண்டைக் காலத்து பிராமணர்களால் (ப்ரம்ம ஞானியர்) வேதங்கள் யாகங்கள் படைக்கப்பட்டன.

**ஸ்: தஸ்மாதோமித்யுதாஹ்ருத்ய யக்ஞதானதபஹ்க்ரியாஹ |**
**ப்ரவர்தந்தே விதாநோக்தாஹ ஸததம் ப்ரஹ்மவாதினாம் || 24**

கருத்துரை:

ஆகையால் வேதமறிந்தவர்கள் வேத விதிப்படி செய்யும் யக்ஞதான - தவக்கிரியைகள் எப்போதும் 'ஓம்' என்று உச்சரித்துத் தொடங்குகின்றன

**ஸ்: ததித்யன பிஸந்தாய பலம் யக்ஞதபஹ க்ரியாஹ் |**
**தானக் கிரியாஸ்ச விவிதாஹ் க்ரியந்தே மோக்ஷ**
**காங்க்ஷிபிஹி || 25**

கருத்துரை:
அவ்வாறே 'தத்' என்னும் பதத்தினை உச்சரித்த பின்னரே முமுக்ஷுக்கள் பலனைக் கருதாது பலவிதமான யக்ஞங்கள், தானங்கள், தவம் முதலான கிரியைகளைச் செய்கின்றனர்.

**ஸ்: ஸத்பாவே ஸாது பாவே சஸதித்யேதத் ப்ரயுஜ்யதே |**
**ப்ரசஸ்தே கர்மணிததா ஸச்சப்தஹ பார்த்த யுஜ்யதே || 26**

கருத்துரை:
அர்ஜுனா! 'உளது' என்ற பொருளிலும், 'நன்மை' என்ற பொருளிலும், 'ஸத்' என்னும் இந்த பரபிரம்மத்தின் நாமம் உபயோகிக்கப்படுகின்றது. அவ்வாறே மங்களகரமான கர்மங்களிலும் 'ஸத்' என்ற சொல் வழங்கப்படுகின்றது.

**ஸ்: யக்ஞே தபஸிதானே சஸ்திதி ஸதிதிசோச்யதே |**
**கர்ம சைவ ததர்த்தீயம் ஸதித்யேவாபிதீயதே || 27**

கருத்துரை:

யக்ஞத்தில், தவத்தில், தானத்தில் நிலைத்திருப்பது 'ஸத்' எனப்படுகிறது. மேலும் பிரம்மத்தின் பொருட்டு (இறைவனின் திருப்திக்காக) செய்யப்படும் கர்மங்களும் 'ஸத்' என்று சொல்லப்படுகின்றது.

ஸ்: **அச்ரத்தயா ஹுதம் தத்தம் தபஸ்தப்தம் க்ருதம் ச யத் |**
**அஸதித்யுச்யதே பார்த்த நச தத்ப்ரேத்ய நோ இஹ ||** 28

கருத்துரை:

அர்ஜுனா! சிரத்தையின்றிச் செய்யப்படும் யாகமும், தானமும், தவமும், ஏனைய கர்மங்களும் 'அஸத்' எனப்படும். அது மறுமைக்கும் உதவாது, இம்மைக்கும் பயன்படாது.

******

# பதினெட்டாம் அத்தியாயம்
# மோக்ஷ ஸந்யாஸ யோகம்

**ஸ்: ஸந்யாஸஸ்ய மஹாபாஹோ தத்வமிச்சாமி வேதிதும் ।**
**த்யாகஸ்ய ச ஹ்ருஷீகேச ப்ருதக் கேசி நிஷூதன ॥** 1

கருத்துரை:
நீண்ட தோள்களையுடையவனும், இந்திரியங்களை வென்றவனும், கேசி என்ற அரக்கனைக் கொன்றவனுமாகிய ஏ கிருஷ்ணா! சந்நியாசத்தின், தியாகத்தின் தத்துவத்தை வெவ்வேறாகத் தனித்தனியே அறிந்துக் கொள்ள விரும்புகிறேன்.

**ஸ்: காம்யானாம் கர்மணாம் ந்யாஸம் ஸந்யாஸம்**
**கவயோ விதுஹ் ।**
**ஸர்வகர்ம பலத்யாகம் ப்ராஹுஸ்த்யாகம்**
**விசக்ஷணாஹ் ॥** 2

கருத்துரை:
அர்ஜுனனே! பலனை விரும்பிச் செய்யப்படும் கர்மங்களைத் துறப்பதை சந்நியாசமென்று ஞானிகள் அறிகிறார்கள். எல்லாக் கர்மங்களின் பலனையும் துறத்தலைத் தியாகமென்கின்றனர் தீர்க்க தரிசிகள்.

**ஸ்: த்யாஜ்யம் தோஷவதித்யேகே கர்ம ப்ராஹுர் மனீஷினஹ |**
**யக்ஞ தான தபஹ கர்ம ந த்யாஜ்யமிதி சாபரே || 3**

கருத்துரை:
சில அறிஞர்கள் (சாங்கியர்கள்) கர்மங்களெல்லாம் குற்றமுடையவை களாதலால் துறத்தற்குரியவைகளென்று பகர்கின்றனர். இன்னும் சிலல் வேள்வி, தானம், தவம் ஆகிய கர்மங்கள் துறக்கப்படலாகாது என்கின்றனர்.

**ஸ்: நிஸ்சயம் ச்ருணுமே தத்ர த்யாகே பரதஸத்தம |**
**த்யாகோ ஹி புருஷவ்யாக்ர த்ர்விதஹஸம் ப்ரகீர்த்திதஹ || 4**

கருத்துரை:

பாரத குலத்துச் சிறந்தோனும், புருஷர்களுள் புலியும் ஆன அர்ஜுனா! கர்ம தியாகத்தைக் குறித்து என்னுடைய சித்தாந்தத்தைக் கேள். தியாகமானது மூன்று விதமாகச் சொல்லப்பட்டுள்ளது.

**ஸ்: யக்ஞ தான தபஹ கர்ம ந த்யாஜ்யம் கார்யமேவ தத் ।**
**யக்ஞோ தானம் தபஸ்சைவ பாவனானி மனீஷிணாம் ॥ 5**

கருத்துரை:

வேள்வி, தானம், தவம் ஆகிய கர்மாக்கள் விட்டுவிடத்தக்கவை அல்ல. செய்யத்தக்கவையேயாகும். ஏனெனில் அவை அறிஞர்களுக்கு மனத்தூய்மையை யுண்டாக்குபவையாக இருக்கின்றன.

**ஸ்: ஏதான்யபி துகர்மாணி ஸங்கம் த்யக்த்வா பலானிச ।**
**கர்த்தவ்யானீதி மே பார்த்த நிஸ்சிதம் மத முத்தமம் ॥ 6**

கருத்துரை:
அர்ஜுனா! பற்றுதலையும் பயனையும் துறந்தே இக்கர்மங்கள் யாவும் செய்யப்பட வேண்டும் என்பது எனது நிச்சயமான உத்தமமான கொள்கை.

**ஸ்: நியதஸ்ய துஸந்யாஸஹ கர்மணோ நோபபத்யதே ।**
**மோஹாத்தஸ்ய பரித்யாக ஸ்தாமஸஹ பரிகீர்த்திதஹ ॥ 7**

கருத்துரை:
வேத சாஸ்திரங்களால் விதிக்கப்பட்ட நித்ய கர்மங்களை விடுவது பொருந்தாது. அறியாமையினால் அத்தகைய கர்மங்களை எவரேனும் விட்டுவிட்டால் அது தாமஸத்தியாகம் என்று கூறப்படுகிறது.

**ஸ்: துஹ்ற கமித்யேவ யத்கர்ம காயக்லேச பயாத் த்யஜேத் ।**
**ஸ க்ருத்வா ராஜஸம் த்யாகம் நைவத்யாகபலம் லபேத் ॥ 8**

கருத்துரை:
எவன் உடம்பின் வருத்தத்துக்கு அஞ்சித் துக்கத்தை உண்டாக்குவது எனக் கருதி அதை விடுகிறவன் ரஜோகுண தியாகம் செய்கிறான். ஆதனால் அவன் தியாக பலனை அடைவதேயில்லை.

**ஸ்: கார்ய மித்யேவ யத்கர்ம நியதம் க்ரியதோ அர்ஜுன ।**
**ஸங்கம் த்யக்த்வா பலம் சைவ ஸ தியாகஹ ஸாத்விகோ**
**மதஹ ॥ 9**

கருத்துரை:
அர்ஜுனா! இது செய்தற்குரியதென்று கருதி சாஸ்திரத்தால் விதிக்கப்பட்ட எந்த நித்திய கர்மம் செய்யப்டுகிறதோ, அந்தத் தியாகம் சாத்வீகமானது என்று கருதப்படுகிறது.

**ஸ்: நத்வேஷ்ட்யகுசலம் கர்மகுசலே நானுஷஜ்ஜதே ।**
**த்யாகீ ஸத்வஸ மாவிஷ்டோ மேதாவீ சின்னஸம்சயஹ ॥ 10**

*கருத்துரை:*
*சத்வம் நிறைந்தவனும், மேதாவியும், ஐயத்தை அகற்றியவனும் ஆகிய தியாகியானவன் துன்ப வினையை வெறுக்கமாட்டான். நன்மையையும், சுகத்தையும் அளிக்கவல்ல இன்ப வினையை விரும்ப மாட் டான்.*

**ஸ்: ந ஹி தேஹப்ருதா சக்யம் த்யக்தும் கர்மாண்ய சேஷதஹ |**
**யஸ்து கர்மபலத்யாகீ ஸ த்யா கீத்யபீதியதே || 11**

*கருத்துரை:*
*கர்மாக்களை முற்றிலும் விட் டு விடுதல் என்பது உடலெடுத்த ஜீவனுக்கு சாத்தியமாகாது. எவனொருவன் கர்மாக்களின் பலன்களை விட்டு விடுகிறானோ அத்தகையோனே தியாகியெனப்படுகிறான்.*

**ஸ்: அனிஷ்டமிஷ்டம் மிச்ரம் ச்தரிவிதம் கர்மணஹ பலம் |**
**பவத் யத்யாகினாம் ப்ரேத்ய நது ஸந்யாஸினாம் க்வசித் || 12**

கருத்துரை

துக்கத்தைத் தருவது, இன்பத்தைத் தருவது, இவ்விரண்டையும் கலந்து தருவது என மூன்று விதமான வினைப்பயன் தியாகிகளல்லாதவர்க்கு ஏற்படுகின்றது. தியாகிகளுக்கு ஒருபோதும் ஏற்படாது.

**பஞ்சைதானி மஹாபாஹோ காரணானி நிபோதமே ।**
**ஸாங்க்யே க்ருதாந்தே ப்ரோக்தானி ஸித்தயே ஸர்வ**
**கர்மணாம் ॥ 13**

கருத்துரை

பெருந்தோளுடைய அர்ஜுனா! கர்மத்தின் முடிவுகாட்டும் சாங்கிய சாஸ்திரத்தில் சகல கர்மங்களின் சித்திக் கென்று பகரப்பட்டுள்ள இந்த ஐந்து காரணங்களையும் என்னிடம் அறிந்து கொள்க.

**அதிஷ்டானம் ததா கர்தா கரணம் ச ப்ருதக்விதம் ।**
**விவிதாஸ்ச ப்ருதக்சேஷ்டா தைவம் சைவாத்ர பஞ்சமம் ॥ 14**

கருத்துரை:
கர்மங்களைச் செய்யும் விஷயத்தில் 1.உடல் 2.கர்த்தா (செய்வோன்) 3.வெவ்வெறு புலன்கள் 4.வெவ்வேறான கிரியைகள் 5,தெய்வம் இவை காரணமாகின்றன.

**ஸ்: சரீரவாங் மனோபிர்யத் கர்ம ப்ராரபதே நரஹ |**
**ந்யாய்யம் வா விபரீதம் பா பஞ்சை தே தஸ்ய ஹேதவஹ || 15**

கருத்துரை:
மனிதன் உடல், வாக்கு, மனம் ஆகியவற்றால் நேர்மையானது, நியாயமற்றதோ ஆகிய எந்தக் கர்மாவைத் தொடங்கினாலும் இதற்கு இவை ஐந்தும் காரணமாகின்றன.

**ஸ்: தத்ரைவம் ஸதி கர்தார மாத்மானம் கேவலம் துயஹ் |**
**பச்யத்யக்ருத புத்தித்வான்ன ஸ பச்யதி துர்மதிஹி || 16**

கருத்துரை:
அது அங்ஙனமிருக்க (மேற்கூறிய ஐந்தும் காரணங்களாக இருக்கையில்) எவனொருவன் புத்தி பண்படாத நிலையில் உடல் இல்லாத ஆன்மாவைக் கர்த்தாவாகக் கருதுகிறானோ அத்தகைய அறிவிலி கர்மத்தைப் பற்றியோ ஆன்மாவைப் பற்றியோ அறியாமல் இருக்கிறான்.

**ஸ்: யஸ்ய நாஹம் க்ருதோ பாவோ புத்திர்யஸ்ய நலிப்யதே ।**
**ஹத்வாபி ஸ இமான் லோகான் ந ஹந்தி ந நிபத்யதே ॥ 17**

கருத்துரை:
யாருக்குத் தானே கர்த்தா என்ற எண்ணம் இல்லையோ, யாருடைய புத்தி விஷயங்களையும் கர்மங்களையும் தீண்டுவதில்லையோ அவன் இவ்வுயிர்கள் அனைத்தையும் கொன்றாலும் உண்மையில் எதையும் செய்வதில்லை. மேலும் அவன் கர்மாவினாலும், பாவங்களினாலும் பந்திக்கப்படுவதுமில்லை.

**ஸ்: ஞானம் ஜ்ஞேயம் பரிக்ஞாதா த்ரிவிதா கர்மசோதனா |**
**கரணம் கர்ம கர்தேதி த்ரிவிதஹ கர்மஸங்க்ரஹஹ || 18**

கருத்துரை:
அறிவு, அறியப்படும் பொருள், அறிபவன் என கர்மாவிற்குத் தூண்டுதல் மூன்று வகைப்படும். கருவி, கர்மா, கர்த்தா எனக் கர்மத்திற்கு இருப்பிடம் ஆதாரம் மூன்று வகைப்படும்.

**ஸ்: ஞானம் கர்ம ச கர்த்தா ச த்ரிதைவ குணபேததஹ |**
**ப்ரோச்யதே குண ஸங்க்யானே யதாவச்ருணு தான்யபி || 19**

கருத்துரை:
குணங்களைப் பற்றி விவரிக்கும் சாங்கிய சாஸ்திரத்தில் ஞானம், கர்மம், கர்த்தா ஆகியவை சத்வம் முதலிய குணங்களின் வேறுபாட்டின் அடிப்படையில் மூன்று விதமாகக் கூறப்படுகிறது. அவற்றையும் சாஸ்திரத்தில் கூறப்பட்டுள்ளபடி கூறுகிறேன் கேள்.

**ஸ்: ஸர்வபூதேஷு யேனைகம் பாவமவ்யய மீக்ஷதே ।**
**அவிபக்தம் விபக்தேஷு தஜ்ஞானம் வித்தி வாஸ்விகம் ॥ 20**

கருத்துரை:
வேறு வேறாய் வகை செய்யப்பட்டுள்ள உயிர்களில் (பூதங்களில்) வேறுபடாத, அழியாத ஏக வஸ்துவை எதனால் பார்க்கிறாயோ அந்த ஞானத்தை சாத்விகமானதென்று அறிக.

**ஸ்: ப்ருதக்த்வேன து யஜ்ஞானம் நானாபாவான் ப்ருதக் விதான் ।**
**வேத்தி ஸர்வேஷு பூதேஷு தஜ்ஞானம் வித்திராஜஸம் ॥ 21**

கருத்துரை:
எந்த ஞானத்தினால் மனிதன் எல்லா உயிர்களிலும் வெவ்வேறு விதமாக உள்ள அநேக உயிர்களை வெவ்வேறாகப் பார்க்கிறானோ, அத்தகைய ஞானத்தினை ராஜஸமென்று அறிவாயாக.

**ஸ்: யத்து க்ருத்ஸ்ன வதேகஸ்மின் கார்யே ஸக்த மஹைதுகம் ।**
**அதத் வார்த்தவதல்பம் ச தத்தாமஸ முதாஹ்ருதம் ॥ 22**

கருத்துரை:
எந்த ஞானத்தால் ஒரு காரியத்தையே (உடலாகிய பொம்மைகளையே) எல்லாமும் அதுவேதான் என்று பற்றிக் கொண்டு, தக்க காரணமின்றியும், உண்மைக்கு ஒவ்வாததாயும், அற்ப பலன் உடையதாக இருக்குமோ அந்த ஞானம் தாமஸமென்று கருதப்படுகிறது.

**ஸ்: நியதம் ஸங்கரஹிதம ராகத்வேஷதஹ க்ருதம் ।**
**அபலப் ரேப்ஸுனா கர்ம யத்தத் ஸாத்விகமுச்யதே ॥ 23**

கருத்துரை:
சாஸ்திரங்களால் நியமிக்கப்பட்டதும், பலனைக் கருதாது பற்றின்றி, விருப்பு வெறுப்பற்று எக்கர்மம் செய்யப்படுகிறதோ அது ஸாத்விகம் எனக் கருதப்படுகிறது.

**ஸ்: யத்து காமேப்ஸுனா கர்ம ஸாஹங்காரேண வாபுனஹ |**
**க்ரியதே பஹுலாயாஸம் தத்ராஜஸமுதாஹ்ருதம் || 24**

கருத்துரை:
ஆசையின் வயப்பட்டவனால் அல்லது அகங்காரமுடையவனால், பெரும் பிரயாசையுடன் எந்த கர்மம் செய்யப்படுகிறதோ அது ராஜஸகர்மா என்று சொல்லப்படுகிறது.

**ஸ்: அனுபந்தம் க்ஷயம் ஹிம்ஸாமனபேக்ஷ்ய ச பௌருஷம் |**
**மோஹாதாரப்யதே கர்மயத்தத் தாமஸமுச்யதே || 25**

கருத்துரை:
வினையின் விளைவையும், நஷ்டத்தையும், துன்பத்தையும் தனது திறமையையும் எண்ணிப் பாராது, மயக்கத்தால் எக்கர்மம் தொடங்கப்படுகிறதோ அது தாமஸமெனப்படும்.

ஸ்: முக்த ஸங்கோ அன ஹம்வாதீ த்ருத்யுத்ஸாஹ
ஸமன்விதஹ |
ஸித்ய ஸித்யோ நிர்விகாரஹ கர்தா ஸாத்விக உச்யதே || 26

கருத்துரை.
பற்று நீங்கியவன், அகங்காரமற்றவன், உறுதியும் ஊக்கமுடையவன், வெற்றி தோல்வியில் வேறுபடாதவன் இத்தகைய கர்த்தா சாத்விகன் எனப்படுகிறான்.

ஸ்: ராகீ கர்ம பலப்ரேப் ஸீர்லுப்தோ ஹிம்ஸாத் மகோ அசுசிஹ் |
ஹர்ஷ சோகான் விதஹ கர்தா ராஜஸஹ பரிகீர்திஹ || 27

கருத்துரை:
ஆசையுள்ளவனும், கர்ம பலனை விரும்புவனும், லோபியும், துன்புறுத்தும் தன்மையனும், சுத்தமில்லாதவனும். மகிழ்வும் சோர்வும் கொள்பவனும் ஆகிய கர்த்தா ராஜஸ கர்த்தாவென்று சொல்லப்படுகிறான்.

**ஸ்: அயுக்தஹ ப்ராக்ருதஹ ஸ்தப்தஹ சடோநைஷ் க்ருதி கோஅலஸஹ ।**
**விஷாதீ தீர்கஸூத்ரீ ச கர்தா தாமஸ உச்யதே ॥ 28**

கருத்துரை:
மனவடக்கம் இல்லாதவனும், அறிவு பெறாதவனும், பணிவின்றி முரட்டுத் தனம் உடையவனும், வஞ்சகனும், பழிவாங்கும் எண்ணத்துடன் பிறரது வாழ்க்கையைப் பாழாக்குபவனும், சோம்பேறித்தனம் உடையவனும், எப்போதும் துயருறு வோனும், காலம் நீடிப்பவனும் ஆகிய கர்த்தா தாமஸ கர்த்தா எனப்படுகிறான்.

**ஸ்: புத்தேர் பேதம் த்ருதேஸ்சைவ குணதஸ்த்ரிவிதம் ச்ருணு ।**
**ப்ரோச்யமான மசேஷண ப்ருதக்த்வேன தனஞ்ஜய ॥ 29**

கருத்துரை:
அர்ஜுனனே! புத்தியின், தைரியத்தின் பேதங்களை, குணங்

களின் அடிப்படையில் மூன்று விதங்களாக வெவ்வேறாகவும், முழுமையாகவும் கூறப்படுவதை இப்போது நீ கேட்பாயாக.

**ஸ்: ப்ரவ்ருத்திம் ச நிவ்ருத்திம் ச கார்யா கார்யே பயாபயே ।**
**பந்தம் மோக்ஷம் ச யாவேத்தி புத்திஹி ஸா பார்த்த**
**ஸார்விகீ ॥ 30**

கருத்துரை:
அர்ஜுனனே! எந்த புத்திகர்மத்தில் ஈடுபாட்டினையும் (உலகியல் நெறியின் அதர்மத்தில் ஈடுபாடின்மையும், செய்யத் தக்கவை, செய்யத்தகாதவை, பயத்தையும், பயமின்மையும், பந்தத்தையும் மோட்சத்தையும் அறிந்து கொள்கிறதோ அந்தபுத்தி சாத்விக புத்தியாகும்.

**ஸ்: யயா தர்ம மதர்மம் சகார்யம் சாகார்ய மேவச ।**
**அயதாவத் ப்ரஜானாதி புத்திஹி ஸாபார்த்த ராஜஸி ॥ 31**

கருத்துரை:
அர்ஜுனனே! எந்த புத்தியினால் மனிதன் தர்மத்தை, அதர்மத்தை, செய்யத்தக்கதை செய்யத்தகாததை உள்ளது உள்ளபடி அன்றி, (வேறோர்விதமாக, பிழையாக) அறிகிறானோ, அந்த புத்தி ராஜஸ புத்தியாகவே இருக்கிறது.

**ஸ்: அதர்மம் தர்மமிதி யா மான்யதே தமஸாவ்ருதா ।**
**ஸர்வார்த்தான் விபரீதான்ஸ்ச புத்திஹி ஸாபார்த்த**
**தாமஸி ॥ 32**

கருத்துரை:
ஏ அர்ஜுனா! எந்த புத்தி விவேகமில்லாமல் மூடப்பட்டதாய், அதர்மத்தை தர்மம் என்று கருதுகிறதோ, எல்லாப் பொருட்களையும் விபரீதமாக நினைக்கிறதோ அது தாமஸமானது.

**ஸ்: த்ருத்யா யயா தாரயதே மனஹ ப்ராணேந் த்ரியக்ரியாஹ் ।**
**யோகேனாவ்ய பிசாரிண்யா த்ருதிஹஸா பார்த்த**
**ஸாத்வீகி ॥ 33**

கருத்துரை:
ஏ அர்ஜுனா! சலனமற்ற (விஷயங்களில் ஈடுபடாது) தைரியத்தோடு கூடியவனாய் மனம், பிராணன், புலன்கள் ஆகியவற்றின் செயல்களை யோக சாதகத்தால் ஆன்ம வழியில் நிறுத்துகிறானோ அத்தகைய உறுதி சாத்விகமானது.

**ஸ்: யயாது தர்மகாமார்த்தான் த்ருத்யா தாரயதே அர்ஜுன ।**
**ப்ரஸங்கேன பலாகாங்க்ஷீத்ருதிஹ ஸா பார்த்த ராஜஸி ॥ 34**

கருத்துரை:
ஏ அர்ஜுனா! எந்த தைரியத்தினால் மனிதன் பலனின் விருப்பம் கொண்டு அறம் பொருள் இன்பங்களை ஒருவன் காக்கின்றானோ அந்த உறுதியானது ராஜஸ தைரியம் எனப்படும்.

**ஸ்: யயா ஸ்வப்னம் பயம் சோகம் விஷாதம் மதமேவச |**
**ந விமுஞ்சதி துர்மேதா த்ருதிஹி ஸா பார்த்த தாமஸி || 35**

கருத்துரை:
ஏ அர்ஜுனா! எந்த தைரியத்தில் தீய புத்தியுடைய மனிதன் தூக்கத்தை, பயத்தை, வருத்தத்தை, ஆணவத்தை விட்டுவிடாமல் இருப்பானோ அத்தகைய தைரியம் தாமஸமானது.

**ஸ்: சுகம் த்விதானீம் த்ரிவிதம் ச்ருணுமே பரதர்ஷப |**
**அப்யாஸாத்ரமதே யத்ர துக்காந்தம் ச நிகச்சதி || 36**

கருத்துரை:
பரத குலத்தில் சிறந்தோனே! ஏ அர்ஜுனா! எத்தகைய பயிற்சியினால் மனிதன் அளவில்லா ஆனந்தத்தையும், துக்கத்தின் முடிவையும் அடைகிறானோ அத்தகைய சுகம் மூன்று விதமாகப் பகுக்கப்பட்டுள்ளது. அதனை இப்போது என்னிடம் கேட்பாயாக.

**ஸ்: யத்த தக்ரே விஷமிவ பரிணாமே அம்ருதோபமம் ।**
**தத்ஸுகம் ஸாத்விகம் ப்ரோக்தமாத்ம புத்திப் ப்ரஸாதஜம் ॥ 37**

கருத்துரை:
எந்த சுகம் முதலில் விஷம் போலவும் முடிவில் அமிர்த்தத்துக்கும் ஒப்பானதுமாகிறதோ அது சாத்வீக சுகமாகும். ஆத்ம நிஷ்டையில் தூய்மையான தெளிவடைந்து புத்தியில் அது தோன்றுகிறது.

**ஸ்: விஷயேந்திரிய ஸம்யோகத்யத்த தக்ரே அம்ருதோபமம் ।**
**பரிணாமே விஷமிவ தத்ஸுகம் ராஜஸம் ஸ்ம்ருதம் ॥ 38**

கருத்துரை:
எந்த சுகம் பொறி புலன்களின் தொடர்பால் முதலில் அமிர்தம் போலிருந்து, இறுதியில் விஷத்தைப் போல மாறுகிறதோ அத்தகைய சுகம் ராஜஸ சுகமெனப்படுகிறது.

**ஸ்: யதக்ரே சானுபந்தே ச சுகம் மோஹனமாத்மனஹ |**
**நித்ரா லஸ்ய ப்ரமாதோத்தம் தத்தாமஸ முதாஹ்ருதம் || 39**

*கருத்துரை:*
*தூக்கம், சோம்பல், மயக்கம் இவற்றினின்றும் பிறந்ததாய், துவக்கத்திலும் இறுதியிலும், மோகத்தை, மயக்கத்தைத் தரவல்லதோ அந்த சுகம் தாமஸ சுகமென்று கூறப்படுகிறது.*

**ஸ்: ந ததஸ்தி ப்ருதிவ்யாம் வாதிவி தேவேஷு வா புனஹ |**
**ஸத்வம் ப்ரக்ருதிஜைர்முக்தம் யதேபிஹி ஸ்யாத்**
**த்ரிபிர்குணைஹ || 40**

*கருத்துரை:*
*இயற்கையினின்றும் (மாயை) பிறந்ததாகிய இம்முக்குணங்களினின்று விடுதலை பெற்ற உயிர் மண்ணுலகில், விண்ணுலகில் வானவர் களிடத்தும் இல்லை.*

**ஸ்: ப்ராஹ்மண க்ஷத்ரிய விசாம் சூத்ராணாம்ச பரந்தப |**
**கர்மாணி ப்ரவிபக்தானி ஸ்வபாவப்ரபவைர் குணைஹ || 41**

கருத்துரை:
எதிரிகளை வாட்டும் அர்ஜுனா! பிராம்மண, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரர்களுடைய கர்மங்கள், அவரவர் இயல்பில் உதித்த குணங்களுக்கேற்பப் பிரிக்கப்பட்டிருக்கின்றன.

**ஸ்: சமோ தமஸ்தபஹ சௌசம் க்ஷாந்திரார்ஜவமேவச |**
**ஞானம் விக்ஞான மாஸ்திக்யம் ப்ரஹ்மகர்ம**
**ஸ்வாபாவஜம் || 42**

கருத்துரை:
அந்தக் கரணங்கள், புறக்கரணங்கள் ஆகியவற்றின் அடக்கம், தவம், தூய்மை, நேர்மை, சாஸ்திர ஞானம், அனுபவ ஞானம், தெய்வம், குரு இவர்களின் பேரில் நம்பிக்கை ஆகியவை யாவும் பிராம்மணர்களின் இயல்பான கர்மங்களாம்.

**ஸ்: ஶௌர்யம் தேஜோ த்ருதிர்தாக்ஷ்யம் யுத்தே சாப்யபலாயனம் |**
**தானமீச்வர பாவஸ்ச க்ஷாத்ரம் கர்மஸ்வபாவஜம் || 43**

கருத்துரை:
சூரத்தன்மை, துணிவு, உறுதி, ஆற்றல், போரில் புறங்காட்டாமை, கொடை, இறையுணர்வு ஆகியவை இயற்கையில் பிறந்த க்ஷத்திரிய கர்மங்களாம்.

**ஸ்: க்ருஷி கோரக்ஷ்ய வாணிஜ்யம் வைச்ய கர்ம ஸ்வபாவஜம் |**
**பரிசர்யாத்மகம் கர்ம சூத்ரஸ்யாபி ஸ்வபாவஜம் || 44**

கருத்துரை:
வேளாண்மை, ஆநிரை மேய்த்தல், வர்த்தகம் ஆகியவை வைசியர்களுக்கு இயல்பாய் ஏற்பட்டதாகும். அவ்வாறே குற்றேவல் புரிவது சூத்திரர்களின் இயல்பாகக் கூறப்பட்டிருக்கிறது.

**ஸ்: ஸ்வே ஸ்வே கர்மண்ய பிரதஹ ஸம்ஸித்திம்லபதே நரஹ |**
**ஸ்வகர்ம நிரதஹ ஸித்திம் யதா விந்ததி தச்ச்ருணு || 45**

கருத்துரை:
அவனவன் தத்தம் கர்மத்தில் நிறைவுறுகிற மனிதன் நிறை நிலை (சித்தியை)யை அடைகிறான். தனது கர்மாவில் கருத்து வைப்பவன் எங்ஙனம் சித்தியடைகிறான் என்பதைக் கேட்பாயாக.

**ஸ்: யதஹ ப்ரவ்ருத்திர்பூதானாம் யேன ஸர்வமிதம் ததம் |**
**ஸ்வகர்மணா தமப்யர்ச்ய ஸித்திம் விந்ததி மானவஹ || 46**

கருத்துரை:
யாரிடத்திலிருந்து உயிர்கள் உற்பத்தியாயினவோ, யாரால் இவ்வுலகமெல்லாம் வியாபிக்கப்பட்டுள்ளதோ, அப்பரம் பொருளை சுய கர்மத்தால் வழிபட்டு மனிதன் மேன்மை எய்துகிறான்.

ஸ்: ச்ரேயான் ஸ்வதர்மோ விகுணஹ பரதர்மாத் ஸ்வனுஷ்டிதாத |
ஸ்வபாவநியதம் கர்ம குர்வந்நாப் னோதி கில்பிஷம் || 47

கருத்துரை:
நிறைவாக அனுஷ்டிக்கப்பட்ட பரதர்மத்தை விட, குறைவாய் அனுஷ்டிக்கும் ஸ்வதர்மம் சிறந்தது. இயற்கையிலமைந்த கர்மத்தைச் செய்பவன் கேட்டினை அடையான்.

ஸ்: ஸஹஜம் கர்ம கௌந்தேய ஸதோஷமபிந த்யஜேத் |
ஸர்வாரம்பாஹி தோஷேண தூமேனாக்னிரி
வாவ்ருதாஹ் || 48

கருத்துரை:
அர்ஜுனா! கேடுடையதாயினும் உடன் பிறந்த கர்மத்தை விட்டுவிடலாகாது. ஏனெனில் புகையால் சூழப்பட்ட நெருப்பினைப் போல் எல்லா கர்மாக்களும் முக்குணங்களால் ஆன தோஷங்களால் மூடப்பட்டிருக்கின்றன.

**ஸ்: அஸக்த புத்திஹி ஸர்வத்ர ஜிதாத்மா விகதஸ் ப்ருஹ்ஹ |**
**நைஷ்கர்ம்ய ஸித்திம் பரமாம் ஸந்யாஸேனாதி கச்சதி || 49**

*கருத்துரை:*
எல்லா விஷயங்களிலும் பற்றற்ற புத்தியுடையவனாய், மனத்தை வென்றவனாய், ஆசைகளற்றவனாய் இருப்பவன், சந்நியாசத்தால் மேலான களங்கமற்ற ஆன்ம நிலையை அடைகிறான்.

**ஸ்: ஸித்திம் ப்ராப்தோ யதா ப்ரஸ்ம ததாப்னோதி நிபோதமே |**
**ஸமாஸேனைவ கௌந்தேய நிஷ்டா ஞானஸ்யயாபரா || 50**

*கருத்துரை:*
அர்ஜுனனே! கர்மசித்தியை யடைந்தவன் பரம்பொருளை எவ்வாறு சேர்கிறானோ அவ்வாறே ஞானத்தின் உயர்நிலையாகிய பிரம்மத்தை எப்படி அடைகிறான் என்பதை என்னிடமிருந்து சுருக்கமாக அறிந்து கொள்.

ஸ்: புத்யா விசுத்தயா யுக்தோ த்ருத்யாத்மானம் நியம்யச ।
சப்தாதீன் விஷயான்ஸ்த்யக்த்வா ராகத்வேஷௌ
வ்யுதஸ்யச ॥ 51

ஸ்: விவிக்த ஸேவீ லக்வாசீ யதவாக்காயமானஸஹ ।
த்யானயோக பரோ நித்யம் வைராக்யம் ஸமுபாச்ரிதஹ ॥ 52

ஸ்: அஹங்காரம் பலம் தர்பம் காமம் க்ரோதம் பரிக்ரஹம் ।
விமுச்ய நிர்மமஹ சாந்தோ ப்ரஹ்ம பூயாய கல்பதே ॥ 53

கருத்துரை:
தூய்மையான அறிவு கொண்டு அதனால் மன உறுதியுடன் தன்னை அடக்கியதில் வெற்றி கொண்டும், புலன் இன்பங்களை துறந்தும், விருப்பு வெறுப்பு என்ற உணர்வுகள் இல்லாதும். தனித்து வாழ்ந்தும், குறைத்து உண்டும், மனம், வாக்கு, உடல் இவற்றை அடக்கியும், எப்போதும் இறைவனை தியானம் எனும்

யோகத்தில் ஆழ்ந்து ஆராதித்தும் பற்றற்ற நிலையில் உறுதியுடன் இருந்தும்.

பெரும் விருப்பு எனும் அஹங்காரம் அற்றும், மன அமைதியினை நிறைவேற்றிட பயன் படுத்திடும் பலம் எனும் வன்மை இல்லாதும், நான், எனது என்ற உணர்வில் எழும்பும் செருக்கு இல்லாதும், காமம் மற்றும் குரோதம் எனும் உணர்வுகளுக்கு அடிமையற்றும், அமைதியுடன் எப்போதும் இருந்தும் ஆகிய பண்புகள் இருப்பவனே அந்த பிரம்மம் எனும் இறைவனைக்காணும் தகுதியுடையவன் ஆகிறான்.

ஸ்: ***பிரஹ்ம பூதஹ ப்ரஸன்னாத்மா ந சோசதி ந காங்க்ஷதி |***
***ஸமஸ் ஸர்வேஷு பூதேஷு மத்பக்திம் லபதே பராம் ||*** 54

*கருத்துரை:*
*பிரம்ம வடிவத்தையடைந்தவனான ஜீவன் முக்தன், நிர்மலமான (அமைதியான) மனம் உடையவனாக எதனைக் குறித்தும்*

வருந்தாது எதனையும் விரும்பாது, எல்லா உயிர்களிடத்தும் புத்தியுடையவனாய் (அவற்றையும் தன்னைப் போலவே எண்ணி) என்னிடத்து மேலான பக்தியுடையவனாய் இருப்பான்.

ஸ்: ***பக்த்யா மாமபிஜானாதி யாவான்யஸ்சாஸ்மி தத்வதஹ |***
***ததோ மாம் தத்வதோ ஞாத்வா விசதே ததனந்தரம் ||*** 55

கருத்துரை:
நான் எத்தன்மையன், எவன் என்று பக்தியினால் ஒருவன் என்னை உள்ளபடி அறிகிறான்; உள்ளபடி அறிந்தபின் விரைவில் என்னை அடைகிறான்.

ஸ்: ***ஸர்வ கர்மாண்யபி ஸதா குர்வாணோ மத்வ்ய பாச்ரயஹ |***
***மத்ப்ரஸாதாதவாப்னோதி சாச்வதம் பதமவ்யயம் ||*** 56

கருத்துரை:
எப்போதும் எல்லா கர்மங்களையும் செய்த போதிலும் என்னை

சரணடைகிறவன் எனதருளால் சாத்வதமானது அழியாததுமாகிய பதத்தினை அடைகிறான்.

ஸ்: **சேதஸா ஸர்வகர்மாணி மயி ஸன்யஸ்ய மத்பரஹ |**
**புத்தியோக முபாச்ரித்ய மச்சித்தஹ ஸததம் பவ || 57**

கருத்துரை:
விவேகத்தால் கர்மங்களையெல்லாம் என்பால் ஒப்படைத்து, என்னையே குறியாகக் கொண்டு, புத்தி யோகத்தை அல்லது தியான யோகத்தைச் சார்ந்திருந்து, எப்போதும் சித்தத்தை என்பால் வைப்பாயாக.

ஸ்: **மச்சித்தஹ ஸர்வதுர்காணி மத்ப்ரஸாதரத் தரிஷ்யஸி |**
**அத சேத் த்வமஹங்காரந்ந ச்ரோஷ்யஸி விநங்க்ஷ்யஸி || 58**

கருத்துரை:
சித்தத்தை என்பால் வைத்து எனதருளால்

இடர்ப்பாடுகளையெல்லாம் கடந்து செல்வாய். அவ்வாறின்றி நீ அகங்காரத்தால் என் சொற்களைக் கேட்காமல் இருப்பாயாயின் கேடு அடைவாய்.

**ஸ்: யதஹங்காரமாச்ரித்ய நயோத்ஸ்ய இதி மன்யஸே |**
**மித்யைஷ வ்யவஸாயஸ்தே ப்ரக்ருதிஸ்த்வாம்**
**நியோக்ஷ்யாதி || 59**

கருத்துரை:
அகங்காரம் கொண்டு போர் புரியேன் என்று நினைப்பாயாகில் உன் முயற்சியானது வீணாகும். உன் (க்ஷத்திரிய) இயல்பே உன்னைப் போரில் பிணித்து விடும்.

**ஸ்: ஸ்வபாவஜேன கௌந்தேய நிபத்தஹ ஸ்வேன கர்மணா |**
**கர்தும் நேச்சஸி யன்மோஹாத் கரிஷ்யஸ்யவ சோஅபிதத் || 60**

கருத்துரை:
அர்ஜுனா! உன் இயல்பில் பிறந்த வினையினால் கட்டுண்டு

எதனைச் செய்வதற்கு மறுக்கிறாயோ, மயக்கத்தால், உன் வசமிழந்து, கர்மத்தின் வயப்பட்டவனாய் அதனையே நீ செய்வாய்.

**ஸ்: ஈச்வரஹ ஸர்வபூதானாம் ஹ்ருத்தேசே அர்ஜுன திஷ்டதி ।**
**ப்ராமயன் ஸர்வபூதானி யந்த்ராரூடானி மாயயா ॥ 61**

கருத்துரை:
ஏ அர்ஜுனா! உலகத்தை காப்பாற்றும் ஈச்வரன் உயிர்களையெல்லாம் இயந்திரத்திலேற்றி மாயையினால் ஆட்டிப் படைத்துக் கொண்டு அவற்றின் இதயத்தில் இருக்கிறான்.

**ஸ்: தமேவ சரணம் கச்ச ஸர்வ பாவேன பாரத ।**
**தத் ப்ரஸாதாத்பராம் சாந்திம் ஸ்தானம் ப்ராப்ஸ்யஸி**
**சாச்வதம் ॥ 62**

கருத்துரை:
அர்ஜுனா! எல்லா வகையிலும் அவனையே சரணடைவாயாக!

அவனருளால் மேலான அமைதியையும், நிலைத்துள்ள வீடு பேற்றையும் அடைவாய்.

**ஸ்: இதி தே ஞானமாக்யாதம் குஹ்யாத் குஹ்யதரம்மயா ।**
**விம்ருச்யைததசேஷேண யதேச்சஸி ததாகுரு ॥ 63**

கருத்துரை:
மறைபொருள்களுக்கெல்லாம் மறை பொருளாகிய ஞானத்தை (கீதா சாஸ்திரம்) உனக்கு நான் சொன்னேன். இதனை முழுதும் நன்கு ஆராய்ந்து நீ விரும்பியதைச் செய்.

**ஸ்: ஸர்வ குஹ்யதமம் பூயஹ ச்ருணுமே பரமம் வசஹ ।**
**இஷ்டோஅஸி மே த்ருடமிதி ததோ வக்ஷ்யாமி தே ஹிதம் ॥ 64**

கருத்துரை:
ஏ அர்ஜுனனே! இரகசியங்களனைத்தும் பரம இரகசியமானதும், மிகவும் மேன்மையானதுமாகிய என்னுரையை மீண்டும்

கேண்ள். ஏனெனில் நீ எனக்கு மிகவும் நெருங்கியவன் ஆகையால் உன் நன்மைக்காக மேலும் சொல்கிறேன்.

**ஸ்: மன்மனா பல மத்பக்தோ மத்யாஜீ மாம் நமஸ்குரு |**
**மாமேவைஷ்யஸி ஸத்யம் தே ப்ரதிஜானேப்ரியோ**
**அஸிமே ||** **65**

*கருத்துரை:*
*என்பால் மனம் வைத்து, என்னிடம் பக்தி பூண்டு என்னை ஆராதிப்பாய். என்னையே வணங்கு, என்னையே அடைவாய். எனக்கு இனியான் நீ. எனவே உனக்கு உறுதியளிக்கிறேன்.*

**ஸ்: ஸர்வதர்மான் பரித்யஜ்ய மாமேகம் சரணம்வ்ரஜ |**
**அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி**
**மாசுசஹ ||** **66**

*கருத்துரை:*
*தர்மங்களையெல்லாம் துறந்து என்னையே சரணடைவாயாக. பாவங்களனைத்தினின்றும் உன்னை நான் விடுவிப்பேன். வருந்தாதே!*

**ஸ்: இதம்தே நாதபஸ்காய நாபக்தாய கதாசன ।**
**நசாசுச்ருஷவே வாச்யம் நசமாம் யோப்யஸூயதி ॥ 67**

கருத்துரை:
உனக்குப் போதிக்கப்பட்ட இந்த கீதா சாஸ்திரம் பக்தியில்லாதவனுக்கும், தவமில்லாதவனுக்கும், தொண்டு புரியாதவனுக்கும். என்னை இகழ்பவனுக்கும் எப்போதும் சொல்லத் தக்கதல்ல.

**ஸ்: ய இதம் பரமம் குஹ்யம் மத்பக்தேஷ்வபிதா யஸ்யதி ।**
**பக்திம் மயிபராம் க்ருத்வா மாமேவைஷ்யத்ய ஸம்சயஹ ॥ 68**

கருத்துரை:
மிக ஆழ்ந்த இத்தத்துவத்தை என் பக்தர்களிடத்து உபதேசித்து, என்னிடம் மேலான பக்தி பண்ணுகிறவன் ஐயமின்றி என்னையே அடைவான்.

**ஸ்: நச தஸ்மான் மனுஷ்யேஷு கஸ்சின்மே ப்ரியக்ருத்தமஹ |**
**பவிதா நசமேதஸ்மாதன்யஹ ப்ரியதரோபுவி || 69**

கருத்துரை:
மனிதர்களுள் எனக்கு விருப்பமான செயல்புரிபவனும் அவனைவிட வேறுயாருமில்லை; எனக்கினியானும் வையகத்தில் அவனைவிட யாருமில்லை.

**ஸ்: அத்யேஷ்யதேசய இமம் தர்ம்யம் ஸம்வாத மாவயோ |**
**ஞான யக்ஞேன தேனாஹமிஷ்டஹ**
**ஸ்யாமிதி மேமதிஹி || 70**

கருத்துரை:
தர்மம் நிறைந்த இந்த உரையாடலை இன்னும் யார் கற்றறிகிறானோ, அவனால் ஆற்றப்படும் ஞான வேள்வியினால் நான் ஆராதிக்கப்படுபவன் ஆவேன். இது என் கொள்கை.

**ஸ்: ச்ரத்தாவான ஸுயஸ்ச ச்ருணுயதபி யோநரஹ ।
ஸோஅபி முக்தஹ சுபான் லோகான் ப்ராப்னுயாத் புண்ய
கர்மணாம் ॥ 71**

*கருத்துரை:*
*எந்த மனிதன் சிரத்தையுள்ளவனாய், அவமதிப்பு இன்றி இந்த கீதா சாஸ்திரத்தைக் கேட்கிறானோ அவன் பாவங்களிலிருந்து விடுபட்டுப் புண்ணிய காரியங்களைச் செய்து புண்ணிய உலகங்களை அடைவான்.*

**ஸ்: கச்சிதேதச் ச்ருதம் பார்த்த த்வைய காக்ரேண சேதஸா ।
கச்சிதக்ஞான ஸம்மோஹஹ ப்ரநஷ்டஸ்தே தனஞ்ஜய ॥ 72**

*கருத்துரை:*
*பார்த்தா! ஒன்றுபட்ட மனத்துடன் உன்னால் இது கேட்கப்பட்டதா? தனஞ்ஜயா! உனது அறியாமையால் விளைந்த மயக்கம் அழிந்ததா?*

**ஸ்: நஷ்டோ மோஹ ஹஸ்ம்ருதிர் லப்தாத்வத் ப்ரஸாதான்மயா**
**அச்யுத I**
**ஸ்திதோ (அ)ஸ்மி கதஸந் தேஹஹ கரிஷ்யே**
**வசனம்தவ II 73**

கருத்துரை:
ஏ கிருஷ்ணா! உன்னருளால் என் அஞ்ஞானம் தொலைந்தது. ஐயங்கள் அகன்றன. இனி உன் கட்டளையை நிறைவேற்று கிறேன்.

**ஸ்: இத்யஹம் வாஸுதேவஸ்ய பார்த்தஸ்யச மஹாத்மனஹ I**
**ஸம்வாதமிமச்ரௌஷமத்புதம் ரோமஹர்ஷணம் II 74**

கருத்துரை:
இங்ஙனம் வசுதேவருக்கும் மகாத்மாவான அர்ஜுனனுக்கும் இடையே நிகழ்ந்த மயிர்கூச்சு உண்டுபண்ணும் அற்புத உரையாடலை நான் கேட்டேன்

ஸ்: வ்யாஸ ப்ரஸாதாச் ச்ருத்வானேதத் குஹ்யமஹம் பரம் |
யோகம் யோகேச்வராத் க்ருஷ்ணாத் ஸாக்ஷாத் கதயதஹ
ஸ்வயம் || 75

கருத்துரை:
திரு வேதவியாசரின் அருளால் நான் மிகவும் இரகசியமானதும் மிகச் சிறந்ததுமாகிய இந்த யோக சாஸ்திரத்தை அர்ஜுனனுக்குச் சொல்லிக் கொண்டிருந்த யோகேசுவரனாகிய கண்ணனிடம் நேரடியாகக் கேட்டேன்.

ஸ்: ராஜன் ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ம்ருத்ய ஸம்வாதமிமமத்புதம் |
கேசவார்ஜுன யோஹ புண்யம் ஹ்ருஷ்யாமிச
முஹுர்முஹு || 76

கருத்துரை:
திருதராஷ்டிர மன்னனே! கேசவார்ஜுனரின் வியப்பிற்குரிய இப்புண்ணிய உரையாடலை நினைத்து நினைத்து மீண்டும் மீண்டும் மகிழ்வடைகிறேன்.

**ஸ்: தச்ச ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ம்ருத்ய ரூபமத்யத்புதம் ஹரே |**
**விஸ்மயோமே மஹான் ராஜன் ஹ்ருஷ்யாமி**
**சபுனஹ்புனஹ் || 77**

கருத்துரை:
அரசே! ஹரியின் அந்த அதிசய விசுவரூபத்தை இன்னும் எண்ணியெண்ணி எனக்குப் பெருமகிழ்வு ஏற்படுகிறது; வியப்புண்டாகிறது.

**ஸ்: யத்ர யோகேச்வரஹ க்ருஷ்ணோ யத்ர பார்த்தோ தனுர்தரஹ |**
**தத்ர ஸ்ரீர் விஜயோ பூதிர்த்ருவா நீதிர்மதிர்மம || 78**

கருத்துரை:
யோகேசுவரனான கிருஷ்ணனும், வில்லேந்திய பார்த்தனும் எங்குளரோ அங்குத் திருவும், வெற்றியும், செல்வப் பெருக்கும், நிலைத்த நீதியும் உள்ளன என்பது என் கொள்கை.

******